

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

மகாக்கினிசயன வேள்விப் பிரகரணம்

சாயணபாடியக் கருத்து, பதவுரைகளுடன் கூடியது

ஆறும் பகுதி

---

காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகளால்

மொழிபெயர்க்கப்பெற்று

---


சென்னை

திருவொற்றியூரான் அடிமை எல்லும்

த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்

தமது சொந்தப் பொருட்செலவில் பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

---

பிரமாதி௵ தைத் திங்கள்

1940.

திருவொற்றியூரான்

# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

நாலாங்காண்டம், ஆறும்பகுதி.

வே. மோ. பெ. கா. வெளியீடு, நே. 5.

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதையில்

## மகாக்கினிசயன வேள்வியின்

## விடய அட்டவணை.

### முதலாம் (பிரசினம்) பிரபாடகம்.

மகாக்கினி சயனத்தின் விடய அட்டவணை முற்றிற்று.

மகாக்கினிசயன வேள்வியின்

# பிழை திருத்தங்கள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 16 | 29 | रनु | ननु |
| 23 | 9 | र्षि: । पु | र्षि: पु |
| 27 | 29 | न्सा | न्त्सा |
| ,, | 30 | जाय | जास्य |
| 28 | 7 | स्सु | त्सु |
| 20 | 13 | அநுஷ்டுப் | திருஷ்டுப் |
| 30 | 13 | दङ्गाः | दद्राः |
| ,, | 18 | वृषा | वृषा |
| 31 | 9 | यंश्च | यश्च |
| 32 | 23 | देवी | देवो |
| 33 | 5 | स्यक्तः | स्यक्तः |
| 35 | 18 | दिनौं | दिन्नौ |
| 36 | 22 | மூன்று | நான்கு |
| ,, | 26 | ऊर्जे | ऊर्जे |
| 40 | 27 | வேள்வித்தலைவனி | வேட்போனி |
| 43 | 14 | சாக்ஷி | சக்ஷி |
| ,, | 20 | सजान्य | सजातान्य |
| 45 | 30 | शिकता | सिकता |
| 46 | 8 | இருபத்தொரு | இருபத்தொன்பது |
| 48 | 11 | इन्द्रा | इन्द्र |
| ,, | 24 | வருணண் | வருணன் |
| 50 | 11 | फ्न्तू | पयन्तू |
| 53 | 17 | त्वा | न्त्वा |
| 54 | 19 | ऐंधि | एंधि |
| 56 | 7 | प्रजा | प्राजा |
| ,, | 24 | अभा | आभा |
| 61 | 15 | आत्मदां | आत्मदा |
| 64 | 27 | सरस्वती । | भारती । |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 67 | 18 | रस | रश |
| 70 | 14 | ஐந்து | மூன்று |
| 71 | 1 | दूव्रर्न: | दूव्रन्न: |
| 78 | 10 | ஐந்து | இரண்டு |
| ,, | 17 | எட்டு | முப்பத்தெட்டு |
| 79 | 9 | मस्मिं । पु | मस्मिंपु |
| 80 | 13 | यदष्यु | यद्लु |
| ,, | 22 | वायं | यावं |
| 86 | 29 | द्याया | द्यावा |
| 87 | 2 | யாஜ்யாபுரோநு | புரோநு |
| ,, | 3 | சொம்யத்தின் | அக்கினி சோம்யத்தின் |
| 89 | 19 | ஜைகுகி | ஜைகுக |
| 94 | 18 | द्य।पृ | द्यावापृ |
| 97 | 6 | நான்கு | ஐந்து |
| ,, | ,, | பதினொந்து | பதினாறு |
| 102 | 4 | स्मवा | स्मद्वा |
| 105 | 7 | மூன்று | நான்கு |
| ,, | 11 | विदुमा | विद्मा |
| 107 | 4 | अग्निस्म | अग्निरस्म |
| 110 | 4 | सस्य | शस्य |
| ,, | 17 | गोमन्ता | गोमन्त |
| 112 | 3 | மூன்று | நான்கு |
| 113 | 17 | सिष्मिणः | शुष्मिणः |
| 116 | 11 | பாவில் | வெய்யில் |
| 117 | 8 | विभु | विभृ |
| 122 | 4 | अणी | अर्णो |
| ,, | ,, | ऊचि | ऊंचि |
| ,, | 6 | वर्चः । | वर्चः |
| ,, | 9 | पुरु | पुरु |
| ,, | 1[illegible] | योनि | योनिं |
| ,, | 13 | ध्रुवा | ध्रुवा |

| பக்கம். | வரி: | பிழை. | திருத்தம், |
|---|---|---|---|
| 122 | 14 | योना | योनां |
| ,, | 15 | हुंस | हंस |
| 123 | 11 | अदादिदं यमो नूतना: | இல்லை |
| ,, | 27 | அக்கினியை | அக்கிளேயை |
| 124 | 27 | ஆதானஞ் | ஆதானத்தில் |
| 125 | 4 | अस्तु । | अस्तु |
| ,, | 24 | न्तू | न्तु |
| 127 | 8 | பதின்மூன்று | பதின்மூன்றே முக்கால் |
| ,, | 30 | योनी | योनि |
| 128 | 22 | रभ्रु | रस्वभ्रु |
| 129 | 4 | पृणच्छि | पृणछि |
| 134 | 14 | च्चिरणू | च्चिष्णू |
| 140 | 1 | ऊर्जिं | ऊर्जं |
| 141 | 9 | முழம் | 0 |
| 163 | 27 | ன்உனு | உன்னு |
| 164 | 28 | मान | माने |
| 169 | 19 | துவாரங்களே | துவாரத்தை |
| 172 | 24 | பொன்மனிதன் | மனிதன் |
| 173 | 3 | ஐந்து | ஆறு |
| 187 | 28 | ष्पाघखायां | आघुखायां |
| 192 | 4 | விவங்கு | விளங்கு |
| 194 | 16 | शरफ | शरभ |
| 198 | 15 | रंनुरुध्य | रन्नुरुध्य |
| ,, | 21 | ஐந்திரமே | ஐந்திராக்னமே |
| 215 | 4 | ஒன்று | 0 |
| ,, | 17 | ப்போற்றல் | த் தொடுதல் |
| 219 | 3 | द्वैरूपं | द्वैरूपं |
| 221 | 9 | வவிசை | வரிசை |
| 227 | 9 | முதலாவதாகிய | இரண்டாவது வரிசையில் முதலாவதாகிய |
| 246 | 19 | இருபது | இருபத்தொரு |
| 256 | 3 | ஏழு | பதினேழு |
| 271 | 25 | वयोय | वयोमय |
| 272 | 15 | போற்றல் | தொடுதல் |
| 275 | 22 | விடல் | அடக்கல் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 276 | 2 | स्वासम्राट्, राट् | सम्राट्, स्वराट् |
| 293 | 16 | ஒரு பஞ்சாசிக்குமேல் முப்பத்தேழு | முப்பத்தேழு |
| 298 | 13 | இருபத்தொரு | முப்பத்தொரு |
| 331 | 12 | वस्तोहि | वस्तोहि |
| 341 | 25 | புரோநு | யாஜ்யா புரோநு |
| 342 | 2 | சதுக்விரு | ச்னதக்விரு |
| 359 | 6 | ஆறாவள் | ஐங்கவள் |
| ,, | 10 | अप्सरसो | अप्सरसो |
| 363 | 20 | விடல் | இழுத்தல் |
| 366 | 15 | भरत | भरते |
| 367 | 16 | शंम् | शर्म् |
| 368 | 4 | घुमत्तममो | घुमत्तमो |
| 377 | 18 | हव्व | हव्य |
| 385 | 13 | रय्ये | रय्यै |
| 390 | 21 | ज्योतिंष्प | ज्योतिंष्म |
| 391 | 2 | दिव | दिव |
| 392 | 12 | विश्वस्मे | विश्वस्मै |
| 399 | 31 | கல்லை | செய் கல்லை |
| 405 | 22 | மருந்தாக | பருந்தாக |
| 411 | 3 | ஆறாசனின் | ஆறு இருஷாக்களின் |
| 413 | 27 | ப்போற்றல் | க்கொடுகல் |
| 414 | 10 | துவக்ஷிதி | துருவக்ஷிதி |
| 420 | 31 | நாற்காலியில் | வண்டியில் |
| 430 | 19 | आषाढा | अषाढा |
| ,, | 29 | आषाढा | अषाढा |
| 441 | 21 | அதவ | அதர்வ |
| 443 | 7 | கல்லுகளையும் | கல்லையும் |
| 446 | 18 | हविर्भिर्वद | हविर्भिर्दे |
| 449 | 8 | க்லைவிஷ்மாய | க்ரைஷ்மாய |
| 454 | 12 | வாமஸ்யே | வாமாஸ்யே |
| சலோகம் | | | उपधान कारिका |
| 2 | 56 | क्षाप्या | क्षाप्य |

முற்றிற்று.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## நாலாங் காண்டம்

# மகாக்கினி சயனம்

---

### விடயச் சுருக்கம்,

चतुर्थकाण्डमग्न्याख्यं सप्तभिः पाठकैर्युतम् ।
उखासंभरणेमन्त्राः प्रथमे पाठके श्रुताः ॥ १ ॥

एकादशानु वाकास्युस्तदर्थाः स्युः क्रमादमी ।
अभ्र्यादानं मृदाक्रान्तिः खननं हरणं तथा ॥ २ ॥

उखानिर्माणसंस्कारौ सामिधेन्यस्तथाऽऽप्रियः ।
अग्न्युत्पादो धारणं च याज्या इत्यनुवाकगाः ॥ ३ ॥

இந் நான்காங் காண்டம் ஏழு பிரபாடகங்களை உடையது. அவற்றுள் முதற் பிரபாடகத்தில் 'உகா' செய்வது சொல்லப்படுகிறது. அதிலும் பதினொரு அநுவாகங்கள் இருக்கின்றன. அவற்றுள் முதல் அநுவாகத்தில் மாக் கட்டப்பாரையை எடுத்தல். இரண்டாவது அநுவாகத்தில் மண்ணைத் தாண்டுதல். மூன்றாவது அநுவாகத்தில் மண்ணைக் கெல்லுதல். நான்காவது அநுவாகத்தில் மண்ணைக் கொண்டு வருதல். ஐந்தாவது ஆறாவது அநுவாகங்களில் உகாவைச் செய்தலும், உகாவைப் புகையிற் காட்டுதலும். ஏழாவது அநுவாகத்தில் சமித்துகளை வைக்கும் மந்திரங்கள். எட்டாவது அநுவாகத்தில் பிரயாஜ யாகங்களின் யாஜ்யைகள். ஒன்பதாவது அநுவாகத்தில் உகையில் அக்னியை உண்டாக்குதல். பத்தாவது அநுவாகத்தில் உகையில் உண்டான அக்னியில் சமித்துகளை போடுதல். பதினோராவது அநுவாகத்தில் யாஜ்யைகளுங் கூறப்படுகின்றன என்பது.

---

### மகாக்கினி சயனத்தின் உபோற்காதம்.

ஈண்டு, மகாக்கினி சயனம் என்பது, அக்கினியைப் பரப்பி விடல் என்பதாம். எனவே, கல்ப சூத்திரங் கூறியபடி செங்கல் கற்களை அக்கினியாகப் பாவித்து வரிசை வரிசையாய் அடுக்கி வைக்கும் மேடையே அக்கினி சயன-

மெனப்படுகிறது. அத்தகைய செங்கல் அடுக்குகளைக் கொண்ட வேள்விக்கும் இலக்கணையால் அக்கினியென்றே பெயர் வந்தது.

இனி, செங்கல் கற்களை அடுக்கும் அளவு, நூற்றிருபது அங்குலங் கொண்ட சதுரப்பரப்பாம். அதுவும், யஜமானன் இரண்டு கைகளைக் குவித்துத் தூக்கிக் கொண்டு நிற்கும்பொழுது எடுக்கப்படும் புருட அளவாம். இது, ஒரு முறை செய்தல், இரண்டு முறை செய்தல் முதற் கொண்டு மேலே பெருக்குமிடத்து அசுவமேதயாகம் முதலியவைகளில் சுமார் ஒரு மைல் தூரம் பரப்புடையதாக வரும்.

இத்தகைய அக்கினி சயனத்தைச் செய்ய விருப்புடையவன், அதாவது இவ்வண்ணமாகிய அக்கினியைக் குணமாகவுடைய யாகத்தைச் செய்ய வேண்டியவன், சோமயாகத்திற்குச் சங்கற்பஞ் செய்வதுடன் இதற்குஞ் சங்கற்பஞ் செய்து கொள்ளல் வேண்டும். ஏனெனின்? இந்த யாகம், பெரும்பான்மை சோமயாகத்துடன் சம்பந்தப்பட்டிருக்கின்றதா லென்க.

இத்தகைய அக்கினிசயனமானது, (அடுக்கு வகையானது) பயன் வேறுபாட்டை முன்னிட்டு, முக்கோணம், நாற்கோணம் முதலாகப் பதினெட்டு வகைப்படுகின்றது. இவை, சம்மிதையிலும், சூத்திரத்திலுங் கூறப்பட்டுள்ளன. இவற்றை, கா-5, பிர-4, அநு-11-ல் காண்க. இவற்றுள்ளும் சேனசயனமே சிறந்ததாம்.

இதுபற்றியே,

श्येनचितं चिन्वीत स्वर्गकामः । கா-5, பிர-4, அநு-11-வது மந்திரமும் என்று கூறுகின்றது. அதாவது 'சுவர்க்கத்தை விரும்பியவன் சேனசயனஞ் செய்யக்கடவன்' என்பதாம்.

மற்றும், இந்தச் சேனசயனமும், பூர்வம், உத்தரம் என இரு வகைப்படும். இதை, சுல்ப சூத்திரம், 17-ம் காண்டத்திற் காண்க. இவற்றுள்ளும் உத்தர சயனமே இப்போது ஆசரிக்கப்பட்டு வருகின்றது.

இந்த, மகாக்கினி சயனத்துடன் சோமயாகத்தைச் செய்யலாம். அல்லது, இதைச் செய்யாமல் சோமயாகத்தை மாத்திரஞ் செய்யினுஞ் செய்யலாம். அங்ஙனமாயினும், முதலாவது முறையாக ஒருவன் சோமயாகஞ் செய்வானாகில் அதில் இந்த மகாக்கினி சயனங் கூடாதென்பதை யுணர்க.

மற்றும், இந்த மகாக்கினி சயனம், அஹீனமான சோமயாகங்களில் அவசியம் செய்யற்பாலதாம்.

சோடசீ, சாத்யஸ்கரம், வாசபேயம், சாரஸ்வதம், சத்திரம் என்பவைகளில் செய்யக்கூடாததாம்.

*இங்கு, மகாக்கினி சயனத்திற்கு “சோதிட்டோமம், அதிராத்திரம், அக்கினி சயனம் என்பவைகளோடு கூடியதும், ‘ரதந்தரம்’ என்னும் சாமப்பாட்டை யுடையதும், கோக்கள் ஆயிரக் கணக்கானவைகளைத் தட்சிணையாகக் கொண்டதுமாகிய சோமயாகத்தால் பரமேசுரனை ஆராதிக்கின்றேன்” என்று சங்கற்பித்துக் கொள்ளல் வேண்டும்.*

*சம்வாதத்திலும், ‘மகாக்கினி சயனத்துடன்’ என்பதையுஞ் சேர்த்துக் கொள்க.*

---

### முதல் அநுவாக விடயச் சுருக்கம்.

युञ्जाष्टकेनैकहोम ऋचास्तोमं पुनर्हुतिः ।
देवेत्यभ्रिं चतुष्केणाऽऽदत्ते मन्त्रास्त्रयोदश ॥ १ ॥

*எட்டு மந்திரங்களாலும் ஒரு ஓமஞ் செய்தல், மற்றொரு மந்திரத்தால் ஒரு ஓமஞ் செய்தல், நான்கு மந்திரங்களால் மரக் கட்டப்பாரையை யெடுத்தல் என்பது.*

---

## நாலாங் காண்டம் முதற் பிரபாடகம்

## முதல் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகளுக்கு மேல் மூன்று பதங்களைக் கொண்டது.

---

### ‘அப்பி’ என்னும் மரத்திலைற் செய்த கட்டப்பாரையை எடுத்தற்குரிய மந்திரங்கள்.

युञ्जानः प्रथमं मनस्तत्त्वाय सविता धियः । अग्निं ज्योतिर्निचाय्य पृथिव्या अध्याभरत् । युक्त्वाय मनसा देवान् सुवर्यतो धिया दिवम् । बृहज्ज्योतिः करिष्यतस्सविता प्रसुवाति तान् । युक्तेन मनसा वयं देवस्य सवितुस्सवे । सुवर्ग्याय शक्त्यै । युञ्जते मन उत युञ्जते धियो विप्रा विप्रस्य बृहतो विपश्चितः । वि होत्रा दधे वयुनाविदेक इत् ॥ १ ॥ मही देवस्य सवितुः परिष्टुतिः ।

युञ्जेवां ब्रह्मपूर्व्यन्नमोभिर्विश्लोका यन्ति पथ्येव सूराः। शृण्वन्ति विश्वे अमृतस्य पुत्रा आये धामानि दिव्यानि तस्थुः। यस्य प्रयाणमन्वन्य इद्ययुर्देवादेवस्य महिमानमर्चतः। यः पार्थिवानि विममे सएतशोरजाꣳसि देवस्सविता महित्वना। देवसवितः प्रसुव यज्ञं प्रसुव ॥ २ ॥ यज्ञपतिं भगाय दिव्यो गन्धर्वः। केतपूः केतन्नः पुनातु वाचस्पतिर्वाचमद्यस्वदातिनः। इमन्नो देवसवितर्यज्ञं प्रसुवदेवा युवꣳ सखिविदꣳ सत्राजितं धनजितꣳ सुवर्जितम्। ऋचास्तोमꣳ समर्धयगायत्रेण रथन्तरम्। बृहद्गायत्रवर्तनि। देवस्यत्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां गायत्रेण छन्दसाऽददेऽङ्गिरस्वदभ्रिरसि नारिः ॥ ३ ॥ असि पृथिव्यास्सधस्थादग्निं पुरीष्यमङ्गिरस्वदाभरत्रैष्टुभेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वद्भ्रिरसि नारिरसि त्वया वयꣳ सधस्थ आग्निꣳशकेम खनितुं पुरीष्यं जागतेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वद्धस्त आधाय सविता बिभ्रदभ्रिꣳ हिरण्ययीम्। तया ज्योतिरजस्रमिदग्निं खात्वीन आभरानुष्टुभेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वत् ॥

மரக் கட்டப்பாரையை யெடுப்பதற்கு வேண்டிய ஓமங்கள் இவ்வாறுவாகத் திற் கூறப்படுகின்றன.

ஈண்டு, ருத்திரத்தைத் தழுவி, தேவயசன யாசனம், (தேவாராதனை செய்கின்றேன்.) என்று ஆணை பெற்றுக்கொண்ட பிறகு, ஆகவனீயத்தில் அக்கினியைப் பிரணயனஞ் செய்து கொண்டு, சுருவில் நான்கு முறை நெய் யெடுத்து 'பிருஹஸ்பதி புரோஹிதா' என்பது முதலிய ருத்திர மந்திரத்தால் அதன் பொருட்டு ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

வெள்ளித்தலைவன், 'தேவேப்ய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஹோமங்கள்)

பிறகு, வேட்போன் மந்திரமோதாமலே சுருவையும் சுருவத்தையுந் துடைத்து, சுருவில் எட்டுமுறை நெய் யெடுத்துக்கொண்டு நடுவேதியில் நிற்றல் வேண்டும்,

---

### முதல் விநியோகம்.

#### கட்டப்பாரையை எடுத்தற்குச் செய்ய வேண்டிய ஓம மந்திரங்களுள் முதலாவது மந்திரம்.

युञ्जानः प्रथमं मनस्तत्वाय सविता धियः । अग्निं ज्योतिर्निचाय्य पृथिव्या अध्याभरत् ।

என்பது.

#### உரை.

அனைத்தையுஞ் செலுத்தும் பரமேசுரன், முதலில் மகாக்கினி சயன விடயத்தில் திருவுள்ளத்தை நிறுத்தியருளி, செங்கற்களைக் கவரும் உணர்ச்சியை விரித்து, அதன் வாயிலாக அக்கினியைப் பரவச் செய்து, அவ்வக்கினியானது பயன்றரும் கருமங்களை விளக்குவதிற் சாதனமா யிருக்குமென்று உறுதி கொண்டு, அவ்வக்கினியைப் பூமிக்குக் கொண்டுவந்தருளினன். பிறகு, அவ் வக்கினியை, உகா என்னும் மண் தொட்டியாகிய மண்ணில் வைப்பதன் பொருட்டு, அத்தகைய மண் தொட்டி செய்வதை முன்னிட்டு இந்த ஹோமத்தைச் செய்கின்றேன் என்பது.

---

#### இரண்டாவது மந்திரம்.

युक्त्वाय मनसा देवान् सुवर्यतो धिया दिवम् । बृहज्ज्योतिः करिष्यतस्सविता प्रसुवातितान् ।

என்பது.

#### உரை.

சுவர்க்கத்தை யடைதற் பொருட்டு முயல்கின்றவைகளும், பேரொளியையுடைய சயனாக்கினியைச் சுவர்க்கமாகச் செய்கின்றவைகளும், அவ்வக் கற்களை யுணரும் புத்தியை விளக்குவதற்கு முயற்சிக்கின்றவைகளுமான இந்திரியங்களை, பரமேசுரன், மனதுடன் சேர்த்து விளையாட்டை மேற்கொண்டவைகளாக விடயத்திற் புகுத்தியவனாய் ஏவுகின்றனன் என்பது.

---

#### மூன்றாவது மந்திரம்.

युक्तेन मनसा वयं देवस्य सवितुस्सवे । सुवर्गेयाय शक्त्यै ।

என்பது.

உரை.

முற் கூறியபடியே பரமேசுரன் ஏவி, விடயத்திற் புகுத்தப்பெற்ற மனதால், யாம், சுவர்க்கத்தில் துதிக்கின்ற அக்கினியைத் தேடிக் கொள்வதற்கு வன்மையுடையவர்களாகின்றோம் என்பது.

---

நான்காவது மந்திரம்.

युञ्जते मन उत युञ्जते धियो विप्रा विप्रस्य बृहतो विपश्चितः ।
विहोत्रा दधेवयुनाविदेक इन्महीदेवस्य सवितुः परिष्टुतिः ।

என்பது.

உரை.

வேள்வித்தலைவனைப் பின்பற்றிய வேள்விச் செயலாளர்கள், மனத்தை விடயங்களினின்றுந் திருப்பி ஒருமைப்படுத்துகின்றார்கள். மற்றும், மகாக்கினி சயனத்தால் பெருமை யடைந்தவனும், வித்வானும், பிரயோகங்களை இனிதுணர்ந்தவனுமாகிய வேள்வித்தலைவனைப் பின்பற்றினவர்களும், ஹோமச்செயலை மேற்கொண்டவர்களுமான வேள்விச் செயலாளர்கள், வேதங்களனைத்தும் போற்றும் மகிமையையுடைய பரமேசுரனுடைய ஏவலால், செங்கல் விடயமான உணர்ச்சிகளைத் தேடிக் கொள்கின்றார்கள் என்பது.

---

ஐந்தாவது மந்திரம்.

युजेवां ब्रह्मपूर्व्यन्नमोभिर्विश्लोका यन्ति पथ्येव सूराः । शृण्वन्ति
विश्वे अमृतस्य पुत्रा आये धामानि दिव्यानि तस्थुः ।

என்பது.

உரை.

வேள்வித்தலைவன், தலைவி, என்னும் தம்பதிகளே! உங்கட்காக, பண்டைய முனிவர்களால் ஆசரிக்கப் பெற்ற மகாக்கினி சயனமாகிய இந்தக் கருமச் செயலை, வணக்கங்களுடன் கூடிய செங்கல்களை அடுக்கி வைத்தலால் தேடுகின்றேன். தேடில், வானில் சூரிய கிரணங்கள் பரவுவது போன்று, உலகில், வேள்வித்தலைவனுடைய கீர்த்தியானது பரவும். மற்றும், பிரசாபதியின் புதல்வர்கள், திவ்ய ஸ்தானத்தை யடைந்திருக்கின்றார்களன்றோ! அவர்களனைவரும் வேள்வித்தலைவனுடைய பெருமையைக் கேட்டுணர்வார்கள் என்பது.

---

ஆறுவது மந்திரம்.

यस्य प्रयाणमन्वन्य इद्ययुर्देवादेवस्य महिमानमर्चतः । यः पार्थि-
वानि विममे सएत शोरजा॑ सि देवस्सविता महित्वना ।

என்பது.

உரை.

எவனுடைய ஏவற் செயலை தேவர்களனைவரும் அவனுடைய மகிமையைப் போற்றுகின்றவர்களாய்ப் பின்பற்றிச் செல்கின்றார்களோ, எவன், பூமியிலுள்ள அணுக்களை அளந்து தெளிந்தனனோ, அத்தகைய சவிதா தேவன் தனது மகிமையால் எங்கும் பரந்துள்ளான் என்பது.

---

ஏழாவது மந்திரம்.

देवसवितः प्रसुवयज्ञं प्रसुव । यज्ञपतिं भगाय दिव्यो गन्धर्वः ।
केतपूः केतन्नः पुनातु वाचस्पतिर्वाचमद्यस्वदातिनः ।

என்பது.

உரை

சவிதா தேவ! நீ, நலத்தின் பொருட்டு, வேள்வியையும் வேள்வித்தலைவனையும் ஏவுவாயாக. மற்றும், பிறருடைய புத்தியிலுள்ள மயக்கத்தைப் புனிதப்படுத்துவோனாகிய சுவர்க்கத்திலுள்ள ஒரு கந்தருவன் என்பவனும், எனது உள்ளத்துணர்ச்சியை மயக்க மறுத்துப் புனிதப்படுத்துவானாக. வாசற்பதி தேவதையும், இக் கருமச் செயலில் எமது வாக்கை இனியதாய்ச் செய்வதாகுக என்பது.

---

எட்டாவது மந்திரம்.

इमन्नो देवसवितर्यज्ञं प्रसुवदेवा युव॑ सखिविद॑ सत्राजितं
धनजित॑ सुवार्जितम् ।

என்பது.

உரை.

சவிதா தேவ! நீ, தேவர்களுடன் கலப்புடையதும், தன்னை யுண்டாக்கும் வேள்வித்தலைவனை நன்குணர்வதும், சத்திரயாகம் முதலியவைகளை வசப்படுத்துவதும், அதாவது அவைகள் மகாக்கினி சயனத்தைத் தழுவியவைகள் என்பதாம். தனத்தைப் பயனாக வுடையதும், சுவர்க்கத்தைப் பயனாகக் கொடுப்பதுமாகிய எம்முடைய இந்த யாகத்தை நன்கு நடத்தி வைப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் எட்டினாலும் ஸ்வாஹா என்பதுடன் முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

'சவித்ர இதம்' என்று வேள்வித்தலைவன் தியாகஞ் செய்தல் வேண்டு மென்க.

---

இரண்டாம் விநியோகம்.

மீண்டும் ஹோமம்

மந்திரம் :

ऋचास्तोमꣳ समर्धय गायत्रेण रथन्तरम् । बृहद्गायत्रवर्तनि ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, துதிப்பதற்குக் காரணமாகியதும், சாமப்பாடல்களுக்கு ஆதாரமுமாகிய இருக்கு மந்திரத்தால், துதியை, அல்லது, இருக்கை மறித்து மறித்துக் கூறுந் துதிமஞ்சரியை நன்கு வளரச் செய்வாயாக. காயத்திரிச் சாமத்துடன் கூட ரதந்தர மென்னும் சாமப்பாடலையும் வளர்ப்பாயாக. மற்றும், காயத்திரிச் சாமத்தின் வழியாய் வந்த பிருகத் சாமத்தையும் வளர்ப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மீண்டும் நான்கு முறை சுருவில் நெய்யெடுத்துக் கொண்டு முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், அக்னய இதம் என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

---

மூன்றும் விநியோகம்.

கட்டப்பாரையை யெடுத்தலில் முதல் மந்திரம்

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां गायत्रेण छन्दसाऽऽददेऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை

மரத்தினாலாக்கப்பட்ட கட்டப்பாரையே! உன்னை ஏவுகின்ற பரமேசுரனுடைய ஆணையிருத்தலின், அச்வினி தேவதைகளின் மணிக்கட்டு வரை

எடுத்தல்)

யுள்ள தோள்களாலும், பூஷாவின் விரல்களையுடைய கைகளாலும் காயத்திரிச் சந்தத்தைக் கொண்டு, அங்கிரச ரிஷி யெடுத்தது போல் எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

अभ्रिरसि नारिरसि पृथिव्यास्सधस्थादग्निं पुरीष्यमङ्गिरस्वदाभर त्रैष्टुभेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை.

மண் கெல்லுவதற்குச் சாதனமாயும், பகையின்றியதாயு மிருக்கின்ற கட்டப்பாரையே! நீ, பூமியின் மேலுள்ள மண்வடிவ அக்கினியைக் கொடுப்பாயாக. திருஷ்டுப் சந்தத்தால், அங்கிரச ரிஷி எடுத்தது போன்று உன்னை எடுத்துக் கொள்கின்றேன் என்பதாம்.

---

மூன்றாவது மந்திரம்.

वभ्रिरसि नारिरसि त्वया वयं सधस्थ आग्निं शकेम खनितुं पुरीष्यं जागतेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை.

மரக் கட்டப்பாரையே! நீ, மண்ணைத் தேடுவதற்கு அநுகூலமா யிருக்கின்றாய். பகைபற்றதா யிருக்கின்றாய். உன்னுடன் கூடிய யாம் நிலத்தினின்றுள்ள மண்ணை யெடுத்தற்கு வன்மை யுடையவராவோம். ஆதலின், சாகதி என்னும் சந்தமாகிய கருவியால், அங்கிரச ரிஷி எடுத்துக்கொண்டது போல் உன்னை எடுத்துக் கொள்கின்றேன் என்பதாம்.

---

நான்காவது மந்திரம்.

हस्त आधाय सविता बिभ्रदभ्रिं हिरण्ययीम् । तया ज्योतिरजस्र मिदग्निं खात्वीन आभरानुष्टुभेनत्वा छन्दसाऽददेऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை.

அனைத்தையுஞ் செலுத்துகின்ற பரமேசுரன், பொன் மயமாகிய கட்டப்பாரையை திருக்கரத்திற்றாங்கி யிருக்கின்றனன். ஆதலின், அத்தகைய பொன் தன்மையையுடைய நீ, அக்கினியென்று உபசரிக்கப்படும் இந்த

(மண் எடுக்கச்

மண்ணை எமக்குக் கல்லிக் கொடுப்பாயாக. அநுஷ்டுப் என்னும் சந்த உதவி யால், அங்கிரச ரிஷி எடுத்ததுபோல் உன்னை எடுத்துக் கொள்கின்றேன் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

மேற்கூறிய நான்கு மந்திரங்களாலும் ஓதி மண் கட்டப்பாரையைக் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, அத்தகைய கட்டப்பாரை, ஒட்டைச்சாண் அளவுள்ளதாயும், அல்லது, ஒரு முழம், அல்லது, ஒரு மார் நீளமுடையதாகவும், கருங்காலி, புரசு, அத்தி, எருக்கு, குமுளை, வன்னி முதலானவைகளுள் யாதானு மொன்றாற் செய்யப்பட்டதாயும், கரிய பட்டையில் அடையாள முள்ளதாக வும், உள்ளே துளை யுடையதாகவும், அல்லது உறுதியுடையதாகவும், ஒரு நுனி கூருடையதாகவேனும், அல்லது, இரண்டு நுனிகளும் கூருடையதாக வேனு மிருக்கலாம்.

முதல் அநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

इमां रज्जुं समादाय प्रतु तुरगबन्धनम् ।
युञ्जाद्गर्दभमाबध्य योगो यान्ति त्रिभिर्मृदम् ॥ १ ॥
इमोन्तादग्निमित्यादेर्गमने द्वेष्यमन्त्रणम् ।
व्यामोन्तेन वपा जप्या रामोन्ताद्वेष्यमन्त्रणम् ॥ २ ॥
अन्वग्नि गच्छेदागत्य द्वाभ्या माक्रमयेद्भुवम् ।
द्यौस्तेऽश्वपृष्ठं संमार्ष्टि द्युक्काद्वाभ्यां तदुत्क्रमः ॥ ३ ॥
अपः पदे योनि नयेज्जिघद्वाभ्यां जुहोति हि ।
परित्रिभिः परिलिखेदेकविंशतिरीरिता ॥ ४ ॥

குதிரையைக்கட்டும் கயிற்றை எடுத்தல். குதிரையைக் கட்டுதல், கழுதை யைக் கட்டுதல். மண் இருக்குமிடத்திற்குச் செல்லுதல். சத்துருவை அபி மந்திரணஞ் செய்தல், மண்ணைப் போற்றுதல். சத்துருவை அபிமந்திரணஞ் செய்தல். புத்து மண்ணை அடைதல், இரண்டு மந்திரங்களால் குதிரை, புத்து மண்ணை தாண்டும்படி செய்தல். குதிரையின் பின்புறத்தைத் தடவி கொடுத் தல். இரண்டு மந்திரங்களால் புத்தைத் திரும்பித் தாண்டும்படி செய்தல். குதிரையின் அடியில் ஜலத்தை விடுதல். இரண்டு மந்திரங்களால் ஹோமஞ் செய்தல். மூன்று மந்திரங்களால் கோடுகளை கிழித்தல் என்பது.

---

## நாலாங் காண்டம் முதற் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகளுக்கு மேல் இருபது பதங்களைக் கொண்டது.

---

மண்ணிருக்குமிடஞ் செல்லுதற்குரிய மந்திரங்கள்.

इमामगृभ्णन्रशनामृतस्य पूर्व आयुषि विदथेषु कव्या । तया देवास्सुतमा बभूवुर्ऋतस्य सामन्त्सरमारपन्ती । प्रतूर्तं वाजिन्ना द्रव वरिष्ठामनु संवतम् । दिवि ते जन्म परममन्तरिक्षे नाभिः पृथिव्यामधि योनिः । युञ्जाथाꣳ रासभं युवमस्मिन् यामे वृषण्वसू । अग्निं भरन्तमस्मयुम् । योगे योगे तवस्तरं वाजे वाजे हवामहे । सखाय इन्द्रमूतये । प्रतूर्वन् ॥ १ ॥ एह्यवक्रामन्नशस्ती रुद्रस्य गाणपत्यान्मयोभूरेहि । उर्वन्तरिक्षमन्विहि स्वस्ति गव्यूतिरभयानि कृण्वन् । पूष्णा सयुजा सह । पृथिव्यास्सधस्थादग्निं पुरीष्यमङ्गिरस्वदच्छेह्यग्निं पुरीष्यमङ्गिरस्वदच्छेमोऽग्निं पुरीष्यमङ्गिरस्वद्भरिष्यामोऽग्निं पुरीष्यमङ्गिरस्वद्भरामः । अन्वग्निरुषसामग्रमख्यदन्वहानि प्रथमो जातवेदाः । अनुसूर्यस्य ॥ २ ॥ पुरुत्रा च रश्मीननु द्यावा पृथिवी आततान । आगत्य वाज्यध्वनस्सर्वा मृधो विधूनुते । अग्निꣳ सधस्थे महति चक्षुषा निचिकीषते । आक्रम्य वाजिन् पृथिवीमग्निमिच्छ रुचा त्वम् । भूम्या वृत्वाय नो ब्रूहि यतः खनाम तं वयम् । द्यौस्ते पृष्ठं पृथिवी सधस्थमात्माऽन्तरिक्षꣳ समुद्रस्ते योनिः । विख्याय चक्षुषा त्वमभि तिष्ठ ॥ ३ ॥ पृतन्यतः । उत्क्राम महते सौभगायास्मादास्थानात् द्रविणोदा वाजिन् । वयꣳ

यामसुमतौ पृथिव्या अग्निं खनिष्यन्त उपस्थे अस्याः । उदक्र-
मीद् द्रविणोदा वाज्यर्वाऽकस्स लोकꣳ सुकृतं पृथिव्याः । ततः
खनेम सुप्रतीकमग्निꣳ सुवो रुहाणा अधि नाक उत्तमे । अपो देवी
रुपसृज मधुमतीरयक्ष्माय प्रजाभ्यः । तासाꣳ स्थानादुज्जिहता-
मोषधयस्सुपिप्पलाः । जिघर्मि ॥ ४ ॥ अग्निं मनसा घृतेन प्रति-
क्ष्यन्तं भुवनानि विश्वा । पृथुं तिरश्चा वयसा बृहन्तं व्यचिष्ठमन्नꣳ
रभसं विदानम् । आ त्वा जिघर्मि वचसा घृतेनारक्षसा मनसा
तज्जुषस्व । मर्यश्रीस्स्पृहयद्वर्णो अग्निर्नाभिमृशे तनुवा जर्भुराणः ।
परि वाजपतिः कविरग्निर्हव्यान्यक्रमीत् । दधद्रत्नानि दाशुषे ।
परि त्वाऽग्ने पुरं वयं विप्रꣳ सहस्य धीमहि । धृषद्वर्णं दिवे दिवे
भेत्तारं भङ्गुरावतः । त्वमग्ने द्युभिस्त्वमाशुशुक्षणिस्त्वमद्भ्यस्त्वमश्म-
नस्परि । त्वं वनेभ्यस्त्वमोषधीभ्यस्त्वं नृणां नृपते जायसे शुचिः ॥

முதலாவது அநுவாகத்தில் மரக் கட்டப்பாரையை எடுத்தல் கூறப்பட்டது. இதில், களிமண்ணிருக்குமிடஞ் செல்லும் வகை கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்.

குதிரையைக் கட்டுங் கயிற்றை எடுத்தல்

மந்திரம் :

इमामगृभ्णन्रशनामृतस्य पूर्व आयुषि विदथेषु कव्या । तया
देवास्सुतमा बभूवुर्ऋतस्य सामन्त्सरमारपन्ती ।

என்பது.

உரை.

பண்டைக் காலத்திய மகரிஷிகள், சோதிட்டோம முதலிய யாகங்களில், ஆயுள் கூடிவரும் குதிரை வருதலாகிய நிமித்தத்தை முன்னிட்டு, எந்தக் கயிறு யாக முடிவுவரை வேள்விச் செயலை முடித்து வைக்கின்றதோ, எந்தக்

செல்லுதல்)

கயிற்றால் தேவர்கள் முன்னர்ச் சோமயாகத்தை யடைந்தார்களோ, அத்தகைய இந்தக் கயிற்றை எடுத்தார்கள் என்பது.

ஈண்டு, கயிற்றால் கட்டியுள்ள ஒரு குதிரையை, களிமண் எடுக்குமிடத்திற்குக் கொண்டு வந்து, அக் களிமண்ணை மிதிக்கும்படி செய்து அம் மண்ணால் தொட்டி (உகா) செய்து அதில் அக்கினியை யுண்டாக்கி மகாக்கினி சயனஞ் செய்யுமிடத்தில் சோதிட்டோம முதலிய யாகங்கள் செய்தல் வேண்டு மென்பது கருத்து.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரையைக் கட்டுவதற்கு ஒரு கயிற்றை எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்.

குதிரையைக் கட்டுதல்

மந்திரம் :

प्रतूर्तं वाजिन्नाद्रव वरिष्ठामनु संवतं । दिवि ते जन्म परममन्तरिक्षे
नाभिः पृथिव्यामधि योनि ।

என்பது.

உரை.

'திவுத்' என்னும் வாயுவால், குதிரையும், குதிரையின் தேரும் வானில் தாங்கப்படுகின்றன வல்லவா? அத்தகைய மகிமை பொருந்திய குதிரையே! நீ, மிகச் சிறந்த களிமண்ணுள்ள விடத்திற்கு விரைவில் வருவாயாக. உனக்கு வானுலகில் மேலாகிய பிறப்பு வரும். இது, ரோஹிதன் முதலிய தேவர்கள் குதிரையாய் வானிற் பிறந்ததால் வெளிப்படையாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அக் கயிற்றைக்கொண்டு குதிரையைக் கட்டல் வேண்டு மென்பதாம். கட்டுதல் = கழுத்திற் கட்டிப் பிடித்துக் கொள்ளுதல்.

ஈண்டு, மந்திர மோதாமலே கழுதையைக் கட்டுவதற்கு ஒரு கயிற்றையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

---

மூன்றாம் விநியோகம்.

கழுதையைக் கட்டுதல்

மந்திரம் :

युञ्जाथां रासभं युवमस्मिन् यामे वृषण्वसू । अग्निं भरन्तमस्मयुम् ।

என்பது.

(மண் எடுக்கச்

உரை.

யாகத்தைச் செய்வதற்குத் தனத்தையுடைய வேள்வித்தலைவன் பத்தினி என்னும் தம்பதிகளே! நீவிர், அக்கினியைத் தாங்கும் தொட்டி செய்வதற்குரிய களிமண்ணைச் சுமக்கின்றதும், நமக்கு நலந் தருவதுமாகிய கழுதையைக் கட்டுவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் ஒரு கழுதையைக் கயிற்றாற் கட்டி வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்.

மூன்று மந்திரங்களால் மண்ணிருக்குமிடஞ் செல்லுதலில்

முதல் மந்திரம்

योगे योगे तवस्तरं वाजे वाजे हवामहे। सखाय इन्द्रमूतये।

என்பது.

உரை

அவ்வக் கருமங்களில் மிகுந்த வன்மை யுடையதும், இந்திரியத்தை யளிப்பதுமாகிய குதிரையை, பாதுகாப்பின் பொருட்டு, அவ்வவ் வுணவுப் பொருளின் நிமித்தம் ஒருவர்க்கொருவர் நட்புடையவர்களாகிய வேள்விச் செயலாளர், வேட்போன் என்பவர்களான யாம் அழைக்கின்றோம் என்பது.

---

இரண்டாம் மந்திரம்

प्रतूर्वन्नेह्यवक्रामन्नशस्ती रुद्रस्य गाणपत्यान्मयोभूरेहि। उर्वन्तरिक्ष-मन्विहि स्वस्तिगव्यूतिरभयानि कृण्वन्।

என்பது.

உரை.

குதிரையே! நீ, பகைவரை யதிர்த்து, பகைவரால் வரும் அவமானத்தையும் நீக்கிக்கொண்டு வருவாயாக. மற்றும், உருத்திர தேவதையின் விலங்கிற்கு இறைவனாந் தன்மையினின்று நீங்கி, எமக்கு நலஞ் செய்தாய் வருவாயாக. விரிந்த வானை நோக்கி, பசுக்கூட்டங்கட்கு, புலி முதலியவைகளினின்றும் பயத்தை நீக்கிக் கொண்டு இடம் பெற நடந்து வருவாயாக என்பது.

சேல்லுதல்)

மூன்றும் மந்திரம்

पूष्णास युजा सह । पृथिव्यास्सधस्थादग्निं पुरीष्यमङ्गिरस्वदच्छेहि ।

என்பது.

உரை

குதிரையே! நீ, பூஷா தேவதையுடன், பூமியின் மேற்புறத்திலிருக்கும் தொட்டி செய்யும் களிமண் வடிவ அக்கினியைக் குறித்து அங்கிரச ரிஷியைப் போல் செல்வாயாக. பூமியில் களிமண் இருக்குமிடத்தை நோக்கிச் செல்வாயாக என்பது குறிப்பு.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களாலும் குதிரையை முன்னும், கழுதையை அதன் பின்னுமாக ஓட்டிக்கொண்டு, வேட்போன், பிரமன், வேள்வித்தலைவன் என்பவர்கள் மண்ணெடுக்கு மிடத்திற்குக் கிழக்கு நோக்கிச் செல்லல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, வேட்போன் செல்லும்போது, 'अग्निं पुरीष्यं' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டு மென்பதையு முணர்க.

---

ஐந்தாம் விநியோகம்.

பகைவனைக் காணில் ஓதுதல்

மந்திரம்:

अग्निं पुरीष्यमङ्गिरस्वदच्छेमः ।

என்பது.

உரை.

உகாவாகும் மண்ணைக் குறித்து அங்கிரசர் போன்று செல்கின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து

வழியில் பகைவனைக் காணில் இம் மந்திரத்தை ஓதல் வேண்டும். நேரில் பகைவனைக் காணாவிடில் இம் மந்திரத்தை மனதில் படிக்கல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, கிழக்கே சென்று கரையான் புத்து இருக்குமிடம் போய், அப்புத்து மேட்டின் மேல் இருக்கும் அழுக்கு மண்ணை மந்திரமின்றிச் சுரண்டித் தள்ளி விடல் வேண்டும்.

---

ஆறும் விநியோகம்.

புத்து மண்ணைப் போற்றுதல்

மந்திரம் :

अग्निं पुरीष्यमङ्गिरस्वद्भरिष्यामः ।

என்பது.

உரை.

உகா மண்ணாகிய அக்கினியை, அங்கிரச ரிஷியைப் போல எடுத்துக் கொள்கின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், அப் புத்தின்மீது சூரியனுதிக்கும் வெயில் படுமிடம் பார்த்து மந்திரமின்றி ஒரு பிடி மண்ணெடுத்து அதைப் போற்றல் வேண்டு மென்பதாம்.



ஏழாம் விநியோகம்.

மண் கொண்டுவரும்போது பகைவன் தென்படில் ஓதுதல்

மந்திரம் :

अग्निं पुरीष्यमङ्गिरस्वद्भरामः ।

என்பது.

உரை.

உகா மண்ணாகிய அக்கினியை, அங்கிரச ரிஷியைப் போன்று எடுத்துக் கொள்கின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து

வரும்போது, பகைவன் எதிர்ப்படில் இம்மந்திரத்தை ஓதுதல் வேண்டும். இன்றெனில் மனதில் படித்தல் வேண்டு மென்பதாம். இதன் விநியோகம் பின் வரும்.



எட்டாம் விநியோகம்.

புத்துமேடை யடைதல்

மந்திரம் :

अन्वग्निरुषसामग्रमख्यदन्वहानि प्रथमो जातवेदाः । अनु सूर्यस्य पुरुत्रा च रश्मीननु द्यावापृथिवी आततान ।

என்பது.

செல்லுதல்)

உரை.

இவ்வக்கினி உஷாக்காலத்தின் தொடக்கத்தைக் காட்டிற்று. சாதவேதமாகிய இது (அக்கினியானது) முக்கியமாயிருந்து பகலையுங் காட்டிற்று. மற்றும், சூரியனுடைய வெயிலையும் முறையாகக் காட்டிற்று. அஃதன்றியும், வானும் மண்ணும் முறையாய் எங்குங் கலந்திருக்கின்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அங்குள்ள கரையான் புத்தை யடைதல் வேண்டுமென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்

குதிரை, தெற்கில் புத்தைத் தாண்டுதலில்

முதல் மந்திரம்

மந்திரம் :

आगत्यवाज्यध्वनस्सर्वामृधो विधूनुते। अग्निं सधस्थे महति चक्षुषा निचिकीषते ।

என்பது.

உரை

இக் குதிரை, வழியிலேயே வந்துசேர்ந்து, வழியிலுண்டாகிய களைப்பு முதலானவைகளை நீக்கிக்கொள்கின்றது. பரந்த புத்து மேட்டு மண்ணை நோக்கி, அக்கினிக்குக் காரணமாகிய மண்ணைத் தேடுவதற்கு விரும்புகிறது என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

आक्रम्य वाजिन्पृथिवीमग्निमिच्छरुचात्वम्। भूम्या वृत्वायनो ब्रूहि यतः खनामतं वयम् ।

என்பது.

உரை

குதிரையே ! நீ, அடி வைத்துப் பரிட்சை செய்து தனது மன உணர்ச்சியால், அக்கினிக்குக் காரணமாகிய மண்ணை இதுவெனத் தெளிவாயாக. மண்ணைக் கேட்டு, இது அக்கினிக்குக் காரணமாகிய மண்ணிருக்கு மிடமென்று எமக்குச் சொல்வாயாக. அவ்விடத்தை யாம் கல்லுவோம் என்பது.

(புத்தை

சாயணபாடியக் கருத்து

இவ்விரண்டு மந்திரங்களாலும், மண் கெல்லவேண்டிய புத்தை, வடக்கிலிருந்து தெற்காக வலது காலால் குதிரையைத் தாண்டச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்.

குதிரையின் பின்புறத்தைத் துடைத்தல்

மந்திரம் :

द्यौस्ते पृष्ठं पृथिवी सधस्थमात्मान्तरिक्षꣳ समुद्रस्ते योनिः । विख्याय चक्षुषात्वमभितिष्ठ पृतन्यतः ।

என்பது.

உரை

குதிரையே! உனது பின்புறம் விண்ணுலகமாயிருக்கிறது. அக்கினியுடன் நீ வாழும் இடம் பூமியாயிருக்கிறது. உனது நடுவிலுள்ள சீவன் அந்தரிக்க லோகமாயிருக்கிறது. கடல், உனது பிறப்பிற்குக் காரணம். இவ்வாறு போற்றத்தக்க நீ, கெல்லத்தக்க மண்ணைப் பார்த்து, அங்குப் போரிட விரும்பும் பகைவர்களான இராக்கதர்கள் மண்ணில் மறைந்து கொண்டிருக்கின்றனர் அவர்களை நாசஞ் செய்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரையின் பின்புறத்தைத் துடைத்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, 'अभितिष्ठ पृतन्यतः' என்பது முதலிய மந்திரத்தால், பகைவன், குதிரையின் காலுக்குக் கீழே யிருப்பதாக எண்ணிக் கொள்ளல் வேண்டும். இன்றேனில், பாவத்தை அவ்வாறு நினைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க.

---

பதினோராவது விநியோகம்.

குதிரை, வடக்கில் புத்தைத் தாண்டல்.

முதல் மந்திரம்.

उत्क्राममहते सौभगायास्मादास्थानाद्द्रविणोदावाजिन् । वयꣳ स्याम सुमतौ पृथिव्या अग्निं खनिष्यन्त उपस्थे अस्याः ।

என்பது.

உரை

தனத்தை யளிக்கும் குதிரையே! நீ, வேள்வித்தலைவனுக்குப் பெரும் பாக்கியத்தைக் கொடுத்தற் பொருட்டு மண்ணெடுக்க வேண்டிய புத்தைத் தாண்டுவாயாக. பூமியின் அநுக்கிரகத்தை வேண்டி மண்ணெடுப்பதற்குப் பூமியின் மேல் யாம் நிற்கின்றோம்.

---

இரண்டாம் மந்திரம்.

उदक्रमीद्द्रविणोदावाज्यर्वाकस्सलोकꣳ सुकृतं पृथिव्याः । ततः खनेम सुप्रतीकमग्निꣳ सुवोरुहाणा अधिनाक उत्तमे ।

என்பது.

உரை

வேள்வியின் பயன் வாயிலாக தனத்தை யளிப்பதும், உணவுப் பொருளை யளிப்பதும், விரைவாய்ச் செல்வதுமாகிய இக் குதிரை, இவ் விடத்தைத் தாண்டுக. தாண்டும் இக் குதிரை, தாண்டுவதால், இராக்கதரை ஒதுக்கி விட்டு மண்ணெடுக்கு மிடத்தைச் செய்கின்றது. ஆதலின், மலர் முகமுடைய அக்கினியை யுண்டாக்குவதற்குக் காரணமாகிய அவ்விடத்தை, துன்பொரு சிறிது மின்றிய சுவர்க்கத்தை யடைய விரும்பிய யாம் செல்லுகின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ் விரண்டு மந்திரங்களாலும், தெற்கிலிருந்து வடக்காக, குதிரையை, அப் புத்தைத் தாண்டும்படி செய்தல் வேண்டு மென்பதாம்.

---

பன்னிரண்டாவது விநியோகம்.

குதிரையடியில் நீர் விடல்.

மந்திரம் :

अपो देवीरुपसृजमधुमतीरयक्ष्माय प्रजाभ्यः । तासाꣳस्थानादुज्जिहतामोषधयस्सु पिप्पलाः ।

என்பது.

உரை

விளக்கமுடையதும், இன்சுவை யுடையதுமாகிய தண்ணீராகிய தேவியே! இங்கு விடுகின்ற நீர், மக்களின் நலத்தின் பொருட்டு [illegible]

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரை அடி வைத்த இடத்தில் நீரை விடல் வேண்டு மென்பதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்.

குதிரையடியின் மீது பொன்னை வைத்து ஓமஞ் செய்தல்.

முதல் மந்திரம்

जिघर्म्यग्निं मनसा घृतेन प्रतिक्ष्यन्तं भुवनानि विश्वा । पृथुं तिरश्चा वचसा बृहन्तं व्यचिष्ठमन्नꣳ रभसं विदानम् ।

என்பது.

உரை.

எல்லாப் புவனங்கட்கும் தனித்தனியாக இருப்பதும், திரியக் பிரமாணத்தால் விரிந்ததும், கால முறையில் பெருத்ததும், அருந்தல், உண்ணல் முதலிய உணவுகளை விரைவில் தருவதுமாகிய அக்கினியை மனத்தால் நினைத்து நெய்யால் வளர்க்கின்றேன் என்பது.

---

இரண்டாம் மந்திரம்

आ त्वा जिघर्मि वचसा घृतेना रक्षसा मनसा तज्जुषस्व ।
मर्य श्रीस्पृह यद्वर्णो अग्निर्नाभि मृशेत नुवा जर्हृषाणः ।

என்பது.

உரை

அக்கினியே! உன்னை, வாக்காலும், மந்திரத்தாலும், நெய்யாலும் வளர்க்கின்றேன். பொறுமையுடைய மனதால் அதை ஏற்றுக் கொள்வாயாக. இவ்வக்கினி மக்களைப்பற்றி நிற்கின்றது. தலைவனால் விரும்பத்தக்க வுருவமுடையது. தொட முடியாதது. களிப்புடைய திருமேனியை யுடையது எனப்படும்.

சாயணபாடியக் கருத்து

இவ் விரண்டு மந்திரங்களாலும், தண்ணீர் விட்ட குதிரையின் அடியில் பொன்னை வைத்து அதில் ஓமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

இதற்கு, 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

---

பதினான்காம் விநியோகம்.

மூன்று மந்திரங்களால் வட்டமாய் மூன்று கோடுகள் கிழித்தலில்

முதல் மந்திரம்

परिवाजपतिः कविरग्निर्हव्यान्यक्रमीत्। दधद्रत्नानि दाशुषे ।

என்பது.

உரை

உணவுப் பொருள்களைப் பாதுகாக்கும் இவ் வக்கினி, அவியை யளிக்கின்ற வேள்வித்தலைவனுக்கு இரத்தினங்களைக் கொடுத்துக் கொண்டு, அவிகளைச் சூழ்ந்து ஏற்றுக் கொள்ளுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தினால், புத்து மண் எடுக்கும் மேட்டில் மரக் கட்டப்பாரையால் ஒரு கோடு கிழித்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்.

परित्वाग्ने पुरं वयं विप्रꣳ सहस्य धीमहि। धृषद्वर्णं दिवे दिवे भेत्तारं भंगुरावतः ।

என்பது.

உரை.

வன்மையாற் றோன்றும் அக்கினியே! உன்னை, யாம் ஏற்றுக் கொள்கின்றோம். நீ, எத்தன்மையனெனின்? வேண்டிய பயனை யளிப்பவன். அந்தணர் குலத்தில் அபிமான முடையவன். பகைவர்களான அசுரரை யொழிப்பவன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் கிழித்துள்ள கோட்டிற்கு வெளியில் இரண்டாவதாக மற்றொரு கோடு கிழித்தல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றும் மந்திரம்

त्वमग्ने द्युभिस्त्वमाशुशुक्षणिस्त्वमद्भ्यस्त्वमश्मनस्परि। त्वं वनेभ्यस्त्वमोषधीभ्यस्त्वं नृणां नृपते जायसे शुचिः ।

என்பது.

(கெல்லுதல்)

ऽग्ने सुप्रतीकमजस्रेण भानुना दीद्यानम् । शिवं प्रजाभ्योऽहिँसन्तं पृथिव्यास्सधस्थेऽग्निं पुरीष्यमङ्गिरस्वत्खनामि । अपां पृष्ठमसि सप्रथा उर्वग्निं भरिष्यदपरावपिष्ठम् । वर्धमानं मह आच पुष्करन्दिवो मात्रया वरिणा प्रथस्व । शर्मचस्थः ॥१॥ वर्मचस्थो अच्छिद्रे बहुले उभे । व्यचस्वती संवसाथां भर्तमग्निं पुरीष्यम् । संवसाथाँ सुवर्विदा समीची उरसात्मना । अग्निमन्तर्भरिष्यन्ती ज्योतिष्मन्तमजस्रमित् । पुरीष्योऽसि विश्वभराः । अथर्वा त्वा प्रथमो निरमन्थदग्ने । त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य वाघतः । तमु त्वा दध्यङ्ङृषिः । पुत्र ईधे ॥ २ ॥ अथर्वणः । वृत्रहणं पुरन्दरम् । तमु त्वा पाथ्यो वृषा समीधे दस्युहन्तमम् । धनञ्जयँ रणे रणे । सीद होतस्स्व उ लोके चिकित्वान्त्सादया यज्ञँ सुकृतस्य योनौ । देवावीर्देवान् हविषा यजास्यग्ने बृहद्यजमाने वयोधाः । निहोता होतृषदने विदानस्त्वेषो दीदिवाँ असदत्सुदक्षः । अदब्धव्रतप्रमतिर्वसिष्ठस्सहस्रं भरश्शुचिजिह्वो अग्निः । सँसीदस्व महाँ असि शोचस्व ॥ ३ ॥ देववीतमः । विधूममग्ने अरुषं मियेध्यसृज प्रशस्त दर्शतम् । जनिष्ठा हि जेन्यो अग्रे अह्नाँ हितो हितेष्वरुषो वनेषु । दमेदमे सप्तरत्ना दधानोऽग्निर्होता निषसादा यजीयान् ॥ ४ ॥

*இரண்டாவது அநுவாகத்தில் புத்து மண் இருக்குமிடத்தை யடைதல் கூறப்பட்டது. இதில், அம் மண்ணைக் கெல்லுதல் கூறப்படுகின்றது.*

---

முதல் விநியோகம்.
இரண்டு மந்திரங்களால் மண்ணைக் கெல்லுதலில்

முதல் மந்திரம்

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यां पृथिव्यास्स
धस्थेऽग्निं पुरीष्य मङ्गि रस्वत्खनामि । என்பது.

இதன் பொருள் வெளிப்படை.

---

இரண்டாம் மந்திரம்.

ज्योतिष्मन्तं त्वाऽग्ने सुप्रतीकमजस्रेण भानुनादीद्यानं । शिवं प्रजाभ्योऽहिं
सन्तं पृथिव्यास्सधस्थेऽग्निं पुरीष्यमङ्गिरस्वत्खनामि । என்பது.

உரை.

ஒளியுடையதும், மலர்ந்த முக முடையதும், அழிய இரவியின் வொளி லால் விளக்கப்பட்டதும், மக்கட்கு உதவியாம்படி மிகப் பொறுமை யுடைய தும், துன்புறுத்தாததும், பூமியின் மேல் இருப்பதுமாகிய மண் வடிவ அக்கி னியே! உன்னை, அங்கிரசரைப் போலக் கெல்லுகின்றேன்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களை ஓதி, கட்டப்பாரையால் புற்று மண்ணைக் கெல்லல் வேண்டு மென்பதாம்.

கெல்லிய பின் கையினால் தண்ணீரைத் தொட்டுக் கொள்ளவும் வேண்டும்.

---

இரண்டாம் விநியோகம்.
தாமரையிலையைக் கொண்டு வருதல்

மந்திரம்:

अपां पृष्ठमसि सप्रथा उर्वग्निं भरिष्यदपरावपिष्ठम् । वर्धमानं महँ
आचपुष्करं दिवो मात्रया वरिणा प्रथस्व । என்பது.

உரை.

அகன்றதும், அக்கினிக்குக் காரணமாகிய மண்ணைத் தாங்குதற்கு வன் மை யுடையதும், கெடாததும், நீர் பெருகப் பெருக வளர்வதும், போற்றத்

கேல்லுதல்)

தக்கதும், 'அக்கினியை யுண்டாக்கும் வாயிலாக புஷ்டியை யுடையதுமாகிய தாமரையிலையே! நீ, தண்ணீரின் பின்புறம் போல் தண்ணீரின் மேலிருக்கின்றாய். வானிலும் பெரிதாகுவாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தாமரை யிலையைக் கொண்டு வருதல்வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, இம் மந்திரத்தினாலேயே அந்தத் தாமரை யிலையைத் தொன்னைபோல் மடித்துக் கொள்ளல் வேண்டு மென்பதையு முணர்க.

---

மூன்றும் விநியோகம்.

இரண்டு மந்திரங்களால் மான் தோலை விரித்தலும் தாமரையிலையை வைத்தலும்

அதில் முதல் மந்திரம்

शर्मचस्थो वर्मचस्थोअच्छिद्रे बहुले उभे । व्यचस्वती संवसाथां
भर्तमग्निं पुरीष्यम् ।

என்பது.

உரை.

மான் தோல் தாமரையிலை என்னும் இருவர்களே! நீவிர், சுகந்தருபவர்களா யிருக்கின்றீர்கள். கலசமாகவும் இருக்கின்றீர்கள். நீங்கள் எத் தன்மையர்களெனின்? துளையின்றியவர்கள், பரப்புடையவர்கள், பெட்டி போல் உள்ளவர்கள் என்க. அத்தகைய உங்களை மண்ணால் மறைக்கின்றோம் அதைத் தாங்கிக் கொள்வீர்களாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

संवसाथाꣳ स्वर्विदा समीची उरसात्मना । अग्नि मन्तर्भरिष्यन्ती
ज्योतिष्मन्त मजस्रमित् ।

என்பது.

உரை.

சுவர்க்கத்தை யடைவதற்குச் சாதனர்களும், மண்ணைக் கட்டுவதற்கு அநுகூலர்களும், இயற்கையில் தமக்குள் அக்கினியை வைத்திருக்கின்றவர்களு

மான மான் தோல் தாமரையிலைகளே! மார்பு போன்ற உங்களுடைய உருவத்தால், உங்களை மறைத்துக் கொள்வீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இந்த இரண்டு மந்திரங்களாலும், கிழக்கே தலையும், மேலே மயிருமாக மண்ணிற்கு வடக்கில் மான் தோலை விரித்து விட்டு அதன் மேல் தாமரையிலையை வைத்தல் வேண்டுமென்பதாம்.



நான்காம் விநியோகம்

கெல்லிய மண்ணைத் தொட்டுப் போற்றல்

மந்திரம் :

पुरीष्योऽसि विश्वभराः । अथर्वा त्वा प्रथमो निरमन्थदग्ने ।

என்பது.

உரை

மண் கெல்லுமிடமே! நீ, மண் அணுக் கூட்டங்கட்குத் தக்கதா யிருக்கின்றாய். இதனாலே, உகா என்னும் தொட்டி முழுதும் கலந்து கொள்வதா யிருக்கின்றாய். அக்கினியே! உன்னை, அதர்வர் என்னும் முனிவர் முதலில் உன்னைக் கடைந்தனர். கடைதல் = காரால் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கெல்லிய மண்ணைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.



ஐந்தாம் விநியோகம்.

கெல்லிய மண்ணை எடுத்து வைத்தல்

முதல் மந்திரம்

மந்திரம் :

त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य वाघतः ।

என்பது.

தொடுதல்)

உரை.

அக்கினியே! அதர்வணர் என்னும் ரிஷி, தலைமையாயுள்ளதும், கடைந்த அக்கினி வாயிலாக வேள்வியை யுண்டாக்கி உலகைத் தாங்குவதுமாகிய தாமரையிலையின் மீது உன்னைக் கடைந்தெடுத்தனர் என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

तमुत्वा दध्यङ् ऋषिः पुत्रईधे अथर्वणः । वृत्रहणं पुरंदरं ।

என்பது.

உரை.

அக்கினியே! பகையை யழிப்பவனும், உருத்திரவடிவால் மூப்புரத்தை யெரித்தவனுமாகிய உன்னை, அதர்வண ரிஷியின் புத்திரராகிய தத்தியங் ரிஷி யென்பவர் நன்கு வளர்த்தனர் என்பது.

---

மூன்றும் மந்திரம்.

तमुत्वा पाथ्यो वृषा समीधे दस्युहन्तमं । धनंजयँ रणे रणे ।

என்பது.

உரை.

அக்கினியே! கள்வரைத் தொலைப்பவனும், ஒவ்வொரு ரணகளங்களினும் தனத்தை வெற்றி கொள்பவனுமாகிய உன்னை, பத்தியர் என்னும் ரிஷி பெரிதாமாறு வளர்த்தனர் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்கள் மூன்றினாலும், செல்லிய மண்ணை மான் தோலின் மீது வைத்துள்ள தாமரை யிலையில் எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும். அல்லது, முற்கூறிய, புரீஷோஸி, என்பது முதலிய மந்திரத்தையுஞ் சேர்த்து நான்காக ஓதிக்கொண்டு மண்ணை யெடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

இம் மந்திரங்கள், காயத்திரி சந்தங்களானதால் இவைகளால், அந்தணன் மண்ணை எடுத்து வைத்தல் வேண்டும் என்பதை யுணர்க.

---

ஆறும் விநியோகம்.

அரசனுக்குரிய மந்திரங்களுள்

முதல் மந்திரம்

सीदहोतस्वउलोके चिकित्वान्सादया यज्ञं सुकृतस्य योनौ ।
देवावीर्देवान्हविषा यजास्यग्ने बृहद्यजमाने वयोधाः ।

என்பது.

உரை.

அறிவுமிக்க ஹோதாவே! (ஹோமத்தைச் செய்வோய்!) நீ, உத்தர வேதியாகிய உனதிடத்தில் உட்காருவாயாக. தேவர்கட்குப் பிரியமாகிய நீ, அவியால் தேவர்களைப் பூசிப்பாயாக. அக்கினியே! நீ, எசமானனுக்கு நீண்ட ஆயுளைக் கொடுப்பாயாக என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்.

निहोता होतृषदने विदानस्त्वेषो दीदिवाꣳ असदत्सुदक्षः ।
अदब्धव्रतप्रमतिर्वसिष्ठस्सहस्रं भरश्शुचिजिह्वो अग्निः ।

என்பது.

உரை.

தேவர்களை யழைப்பதும், இடத்தை யுணர்வதும், ஒளி யுடையதும், தேவர்கட்கு அவி கொடுப்பதும், மிக வன்மை யுடையதும், கெடாத கருமத்தில் புத்தியை வைப்பதும், அதிசயமாய் வசிப்பதும், ஆயிரக் கணக்கான அவிகளைப் பாதுகாப்பதும், புநிதமாகிய நாக்கை யுடையதுமாகிய அக்கினி, தான் இருத்தற்குரிய உத்தர வேதியாகிய இடத்தில் இயற்கையாய் இனிது அமர்ந்திருக்கின்றது என்பது.

---

மூன்றும் மந்திரம்.

सꣳसीदस्व महाꣳ असि शोचस्व देववीतमः । विधूममग्ने अरुषं
मियेध्य सृजप्रशस्तदर्शतं ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, இந்தத் தாமரை யிலையின் மீது உட்காருவாயாக. நீ மகானுயிருக்கின்றாய். தேவர்களைக் குறித்துச் செல்வதில் மிகச் சிறந்தோனுயிருக்கின்றாய். அத்தகைய நீ ஒளியுடன் விளங்குவாயாக. சிறந்ததும் மேதாவியுமாகிய அக்கினியே! நீ, பார்த்தற்குரியதும் பொற்புடையதுமாகிய புகையைத் தோற்றுவிப்பாயாக என்பது.

---

தொடுதல்)

நான்காம் மந்திரம்.

जनिष्वाहि जेन्यो अग्रे अह्नां हितो हितेष्वरुषो वनेषु । दमे दमे सप्तरत्नादधानोग्निर्होता निषसादाय जीयान् ॥

என்பது.

உரை.

அக்கினியே! நீ, வெற்றிச் சீலமுடையவனும், அவியை யுண்ணுந் தேவர்களுள் எவர் உனக்கு இனிது செய்கின்றாரோ, அவருக்கு இனியோனுமாயிருக்கின்றாய். வனங்களுள் சாந்தமா யிருக்கின்றாய். அதாவது தாவாக்கினியாய் எரிப்பதில்லை யென்பதாம். இவ் வக்கினி எசமானனுடைய ஒவ்வொரு வீட்டிலும் இருக்கின்றது. இது, இரத்தினங்கள் போன்ற ஏழு நாக்குக்களை யுடையது என்பது.

சாயணபாடியக் கருத்து.

அநுஷ்டுப்ச் சந்தமுடைய இந்த நான்கு மந்திரங்களாலும், கெல்லிய மண்ணை யெடுத்து மான்தோலின் மீதுள்ள தாமரை யிலையில் அரசன் வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூக்திரத்தைத் தழுவி, 'जनिष्वाहि' என்பது முதலிய ஈற்று மந்திரத்தை மீண்டும் ஓதிக்கொண்டு, எடுத்து வைத்த மண்ணைத் தொட்டுப் போற்றுதல் வேண்டு மென்பதாம்.

மூன்றும் அநுவாகம் முடிந்தது.

நான்காம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

संमृत्स्वनेऽपो निनयेत् सुजा संभृतवन्धनम् ।
उदु द्वाभ्यां समुत्थाय सजातस्त्वा हरेन्मृदम् ॥ १ ॥
स्थिरो गर्दभ आधाय शिव आहितमन्त्रणम् ।
प्रैतु त्रिभिः शनैर्याति ह्योषद्वाभ्यामिमां मृदम् ॥ २ ॥
उपाहरे दोषधीषु मन्त्राद्वादशवर्णिताः ।

புத்தில் தண்ணீரை விடுதல். கயிற்றால் எடுத்த மண்ணை வைத்திருக்கும் மான் தோலைக் கட்டுதல். இரண்டு மந்திரங்களால் எடுத்துக்கொண்டு எழுந்திருத்தல். மண்ணைக் கொண்டு வருதல். கழுதையின் மேல் வைத்தல். அம் மண்ணைப் போற்றுதல். மூன்று மந்திரங்களால் திரும்பி வருதல். இரண்டு மந்திரங்களால் நெல்களின் மேல் இறக்கி வைத்தல் என்பது.

நான்காம் காண்டம் முதற் பிரபாடகம்

நான்காம் அநுவாகம்.

மூன்று பத்தாதிக்கு மேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

---

மண்ணைக் கொண்டு வருவதற்குரிய மந்திரங்கள்.

सन्ते वायुर्मातरिश्वादधातूत्तानायै हृदयं यद्विलिष्टम् । देवानां यश्चरति प्राणथेन तस्मै च देवि वषडस्तु तुभ्यम् । सुजातो ज्योतिषा सह शर्मवरूथमाऽसदस्सुवः । वासो अग्ने विश्वरूपꣳ संव्यँयस्व विभावसो । उदु तिष्ठस्वध्वरावानो देव्या कृपा । दृशे च भासा बृहता सुशुक्वनिराऽग्ने याहि सुशस्तिभिः ॥ १ ॥ ऊर्ध्व ऊषुण ऊतये तिष्ठा देवो न सविता । ऊर्ध्वो वाजस्य सनिता यदञ्जिभिर्वाघद्भिर्विह्वयामहे । स जातो गर्भो असि रोदस्योरग्ने चारुर्विभृत ओषधीषु । चित्रश्शिशुः परितमाꣳस्यक्तः प्रमातृभ्यो अधिकनिक्रदद्गाः । स्थिरो भव वीड्वङ्ग आशुर्भव वाज्यर्वन् । पृथुर्भव सुषदस्त्वमग्नेः पुरीषवाहनः । शिवो भव ॥ २ ॥ प्रजाभ्यो मानुषीभ्यस्त्वमङ्गिरः । मा द्यावापृथिवी अभिशूशुचो माऽन्तरिक्षं मा वनस्पतीन् । प्रैतु वाजी कनिक्रदन्नानदद्रासभः पत्वा । भरन्नग्निं पुरीष्यं मा पाद्यायुषः पुरा । रासभो वाङ्कनिक्रदत्सुयुक्तो वृषणा रथे । स वामग्निं पुरीष्यं माशुर्दूतो वहादितः । वृषाऽग्निं वृषणं भरन्नपाङ्गर्भꣳ समुद्रियम् । अग्न आयाहि ॥ ३ ॥ वीतयं ऋतꣳ सत्यम् । ओषधयः प्रतिगृह्णीताग्निमेतꣳ शिवमायन्तमभ्यत्र युष्मान् । व्यस्यन्विश्वा

கொண்டு வருதல்)

अर्मतीररांतीर्निषीदन्नो अपंदुर्मतिंहनत् । ओषधयः प्रतिमोदध्व-
मेनं पुष्पावतीस्सु पिप्पलाः । अयं वो गर्भ ऋत्वियः प्रत्नं सधस्थ
माऽसदत् ॥ ४ ॥

மூன்றும் அநுவாகத்தில் மண்ணைக் கெல்லுதல் சொல்லப்பட்டது. இதில், மண் கொண்டு வருதல் கூறப்படுகின்றது,

முதல் விநியோகம்.

மண்ணில் நீர் தெளித்தல்.

மந்திரம் :

संते वायुर्मातरिश्वादधातु त्तानायै हृदयं यद्विलिष्टम् । देवानां यश्चरति प्राणथेन तस्मै च देवि वषडस्तु तुभ्यम् ।

என்பது.

உரை.

பூமியே! உனது இருதயம் போன்றுள்ள மண் கெல்லிய விடத்தை, வானில், உயிர்களனைத்தையும் இவ்வளவென்று அளந்து கொண்டு வசிக்கின்றதும், தேவர்களுடைய பிராணனாக விருப்பதுமாகிய வாயு, புல் துரும்புகளுடன் தெளிக்கப்பட்ட இந்த நீரால், முன் போல் பள்ளமில்லாமற் செய்க. பூமியே! உனக்கு, துரும்புகளுடன் கூடிய இந்த நீர் அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புல் துரும்பு முதலியவைகளை, முன் மண் கெல்லிய பள்ளத்தில் போட்டு அதில் தண்ணீரைத் தெளித்தல் வேண்டு மென்பதாம். ஈண்டுப் பூமியாகிய தேவியை கெல்லிய கொடுமை சாந்தமாதற் பொருட்டு இது செய்யப்படுகின்றதென்பதை யுணர்க.

---

இரண்டாவது விநியோகம்.

மண்ணை முட்டையாகக் கட்டுதல்.

மந்திரம் :

सुजातो ज्योतिषा सह शर्मवरूथमासदस्सुवः । वासो अग्ने विश्वरूपं संव्ययस्व विभावसो ।

என்பது.

உரை.

அக்கினியே! நன்கு உதித்த நீ, உனது ஒளியுடன் கூட சுகமாம்படி மான் தோலாற் செய்த வீட்டை யடைவாயாக. ஒளியாகிய தனத்தை யுடையோய்! பல்வகைகளை யுடைய மான் தோலாகிய ஆடையை அணிந்து கொள்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பட்டு, மஞ்சி, எருக்கு என்பவைகளுள் எதாகினும் ஒரு கயிற்றால் அம் மண்ணை மூட்டைகளாகக் கட்டுதல் வேண்டும்.

மந்திர மோதாமல் அம் மண் மூட்டையை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

மூன்றும் விநியோகம்.

மண்ணை எடுத்துக் கொண்டெழுதல்

முதல் மந்திரம்.

उदुतिष्ठस्वध्वरावानो देव्या कृपा । दृशे च भासा बृहता सुशक्वनिराग्ने याहि सुशस्तिभिः ।

என்பது.

உரை.

வேள்வியை நடாத்தும் அக்கினியே! நீ, எழுந்திருப்பாயாக, எழுந்து விளையாட்டாகிய கிருபையால் பரிபாலிப்பாயாக. சுவாலைகளுக்கு வசிதையாகிய அக்கினியே! நீ, நல்ல கீர்த்தியுடன் அனைவரும் உன்னைப் பார்ப்பதன் பொருட்டு வருவாயாக என்பது.

இரண்டாவது மந்திரம்

ऊर्ध्व ऊषुण ऊतये तिष्ठा देवो न सविता । ऊर्ध्वो वाजस्य सनिता यदञ्जिभिर्वाघद्भिर्विह्वयामहे ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, எம்மைப் பாதுகாத்தற் பொருட்டு, மேலே யெழுந்து நின்று சவிதா தேவன் எம்மைப் பாதுகாப்பது போல் மேலே யெழுந்து நிற்பாயாக. மேலெழுந்து நின்று உணவுப்பொருளை யளிப்பாயாக. மந்திரங்களால் வேள்விச் செயலாளர்கள் அழைத்தற் பொருட்டு எழுந்து நிற்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களிரண்டாலும் எழுந்திருத்தல் வேண்டு மென்பதாம்.

### நான்காம் விநியோகம்.

மண்ணைக் கழுதையிடங் கொண்டு போதல்.

மந்திரம் :

सजातो गर्भो असि रोदस्योरग्ने चारुर्विभृत ओषधीषु । चित्रश्शिशुः परितमाँस्यक्तः प्रमातृभ्यो अधि कनिक्रदद्गाः ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, போற்றத்தக்கோனும், கொடி செடிகளில் காடாக்கினியாக விருந்து போஷிக்கின்றவனும், பல்வகைச் சுவாலைகளால் விசித்திர வர்ணனும், சிசுவாக இருக்கின்றாய். மாதாவாகிய கொடி செடிகளைக் குறித்து குழந்தை, தாயினிடத்திற் செல்வதுபோல் செல்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கழுதையை நோக்கி மண் மூட்டையைக் கொண்டு போதல் வேண்டும் என்பதாம்.

---

### ஐந்தாம் விநியோகம்.

மண் மூட்டையைக் கழுதையின் மீது வைத்தல்.

மந்திரம் :

स्थिरोभव वीड्वङ्ग आशुर्भव वाज्यर्वन् । पृथुर्भवसुषदस्त्वमग्नेः पुरीषवाहनः ।

என்பது.

உரை.

அக்கினிக்குக் காரணமாகிய மண்ணைச் சுமக்குங் கழுதையே! நடையில் வலிமையுடைய! நீ, அசைந்து நடக்காதவனாய், பரந்த கையுடையவனும், அக்கினிக்கு நல்ல ஆசனமு மாவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கழுதையின் முதுகின் மீது அம் மண் மூட்டையை வைத்தல் வேண்டுமென்பதாம். அன்றி, இக் காரணம்பற்றியே இக் காலத்தும் கழுதை சுமை சுமப்பதில் மிகச் சிறந்ததாயிருக்கின்றது என்பதை யுணர்க.

---

### ஆறும் விநியோகம்.

வைத்த மண்ணைப் போற்றுதல்

மந்திரம் :

शिवो भव प्रजाभ्यो मानुषीभ्यस्त्वमङ्गिरः । मा द्यावापृथिवी अभिशोशुचो मान्तरिक्षं मावनस्पतीन् ।

என்பது.

உரை

அங்கிரச ரிஷியால் முதலில் தேடப் பெற்றமையால் 'அங்கிரா' என்னும் பெயர்பூண்ட அக்கினியே! நீ, மனிதர்களைக் குறித்துப் பொறுமை யுடையோடுவாயாக. மற்றும், வான் மண்ணினைக் குறித்தும் தாப மடையாதே. அந்தரிக்ஷத்தைக் குறித்தும் தாப மடையாதே. வனஸ்பதிகளை நோக்கியும் தாபங்கொள்ளாதே என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், கழுதையின் முதுகின் மீது வைத்த மண்ணைத் தொட்டுப் போற்றுதல் வேண்டும் என்பதாம்.

---

ஏழாம் விநியோகம்.

திரும்பி வரும் மூன்று மந்திரங்களுள்

முதல் மந்திரம்

प्रैतु वाजी कनिक्रदन्नानदद्रासभः पत्वा । भरन्नग्निं पुरीष्यं मापाद्यायुषः पुरा ।

என்பது.

உரை.

இந்தக் குதிரை, கனைத்துக் கொண்டு களிப்புடன் முதலில் செல்க. பிறகு, கழுதை கத்திக்கொண்டு பின்செல்க. அது மண் சுமந்ததாமாயினும் மிருத்துவால் இறவாததாகுக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

रासभो वां कनिक्रदत्सुयुक्तो वृषणारथे । सवामग्निं पुरीष्य
माशुर्दूतोवहादितः । என்பது.

உரை

வேண்டியவற்றை யளிக்கும் குதிரை கழுதைகளே! உங்களுக்குள் களிப்புடன் கத்துவதாகிய கழுதை, மட் பாரமாகிய இரதத்தில் பூட்டப்பட்டிருக்கிறது. அத்தகைய கழுதை, அரசனால் அனுப்பிய தூதனைப்போல் விரைவில் நடப்பதாய் இவ்விடத்திலிருந்து மண்ணாகிய அக்கினியைத் தாங்கிச் செல்க என்பது.

---

மூன்றாம் மந்திரம்

वृषाग्निं वृषणं भरन्नपां गर्भᳪ समुद्रियम् । अग्न आयाहि वीतय
ऋतᳪ सत्यम् । என்பது.

கொண்டு வருதல்)

உரை.

பய்னை யளிப்பதில் வன்மையுடைய கழுதை, மேக நீரிலுள்ள மின்ன லும், கடலில் வடவானலமாயு மிருக்கின்ற மண்வடிவ அக்கினியைத் தாங்கிக் கொண்டு செல்க. அத்தகைய அக்கினி, மண்ணையும் விண்ணையும் அறி விப்பதாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும், குதிரை கழுதைகளுடன் மெதுவாய் வேட் போன் வரல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைக் கழுவி, மண் கொண்டு வரும்போது பகைவன் எதிர்ப்படில், இரண்டாமநுவாகம் ஏழாம் விநியோகத்தை இங்கு உபயோகித் துக் கொள்க. அதன் பொருளும் விநியோகமும் அங்குக் கூறப்பட்டன.

உத்தர விகாரத்தில், ஒரு இடஞ் செய்து அதில் பூக்களையுடைய கொடி செடிகளைப் பரப்பி வைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

எட்டாம் விநியோகம்.

மண்ணை இறக்கி வைத்தல்

முதல் மந்திரம்

ओषधयः प्रतिगृह्णीताग्निमेतꣳ शिवमायन्तमभ्यत्र युष्मान् ।
व्यस्यन्विश्वा अमतीररातीर्निषीदिनो अपदुर्मतिꣳ हनत् ।

என்பது.

உரை

கொடி செடிகளே! நீங்கள், உங்களை நோக்கி வந்திருக்கும் சாந்தமாகிய அக்கினியை ஏற்றுக் கொள்வீர்களாக. இவ் வக்கினி இங்கிருந்து கொண்டு பகையாகிய பிணியைப் போக்குவதுடன் எமது மதியின் மறதி சோம்பல் முதலியவைகளைக் கெடுப்பதாமாகுக என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

ओषधयः प्रतिमोदध्वमेनं पुष्पावतीस्सु पिप्पलाः । अयं वो गर्भ
ऋत्वियः प्रत्नꣳ सधस्थमासदत् ।  என்பது.

உரை.

பூக்களையும் பழங்களையு முடைய கொடி செடிகளே! இவ் வக்கினியைக் குறித்து நீங்கள் களிப்படைவீர்களாக. இவ் வக்கினி, உங்களுடைய இருது காலங்களில் கருப்பமாகி அதற்குரிய பழைய இடத்தை யடைந்து விட்டது என்பது.

சாயணபாடியக் கருத்து.

*இவ் விரண்டு மந்திரங்களாலும், பரப்பி வைத்துள்ள கோடி செடிகளின் மேல் அம் மண்ணை இறக்கி வைத்து விடல் வேண்டு மென்பதாம்.*

*ஈண்டுப் பிரணயனஞ் செய்திருக்கும் ஆகவனீய அக்கினியை எடுத்து விடல் வேண்டும். சமுதையையும் அவிழ்த்து விட்டு விடல் வேண்டும்.*

நான்காம் அநுவாகம் முற்றிற்று.

---

*ஐந்தாம் அநுவாகம்.*

விடயச் சுருக்கம்.

विपा विस्त्रंसये दापस्त्रिभिर्मृदिजलं क्षिपेत् ।
मित्रोद्वाभ्यां शर्करादि योगो रुद्रेति संक्षिपेत् ॥ १ ॥
संसृस्त्रिभिर्मृत्तिकां तामुखाकर्त्रे प्रयच्छति ।
मखपिण्डकृतियज्ञ चर्मेपर्णाभिमर्शनम् ॥ २ ॥
कुर्याद्वसचतुर्भिस्तां ध्रुवाऽसित्यनुपद्यते ।
अदि रास्नामदि विलं कुर्यात्कृत्वाव तामुखाम् ॥ ३ ॥
सिकतासु स्थापयति मन्त्रा एकोनविंशतिः ।

*மண் மூட்டையை அவிழ்த்தல், மண்ணில் நீர் விடுதல், மான் மயிர் முதலியவைகளைக் கலத்தல், பிசைதல், செய்வோனிடத்திற் கொடுத்தல், உண்டை செய்தல், தொடல், தொட்டி செய்தல், வரம்பு கட்டல், பள்ளம் பண்ணல், மணலில் வைத்தல் என்பது,*

---

நாலாங் காண்டம் முதற் பிரபாடகம்

ஐந்தாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகளுக்கு மேல் நான்கு பதங்களைக் கொண்டது.

---

உகா (தொட்டி) செய்தற்குரிய மந்திரங்கள்.

विपाज॑सा पृथुना॒ शोशु॑चानो॒ बाध॑स्व द्वि॒षो र॒क्षसो॒ अमी॑वाः । सुशर्म॑णो बृह॒तश्शर्म॑णिस्याम॒ग्ने र॒हꣳसु ह॒वस्य॒ प्रणी॑तौ । आपो॑ हि॒ष्ठा म॑योभुव॒स्ता न॑ ऊ॒र्जे द॑धातन । म॒हेरणा॑य॒ चक्ष॑से । यो व॑श्शिव-

तमोरसस्तस्य भाजयते हनः । उशतीरिव मातरः । तस्मा अरङ्गमा मवो यस्यक्षयाय जिन्वथ । आपो जन यथाचनः । मित्रः ॥ १ ॥ सꣳसृज्य पृथिवीं भूमिञ्च ज्योतिषा सह । सुजातञ्जातवेदसमग्निं वैश्वानरं विभुम् । अयक्ष्माय त्वा सꣳसृजामि प्रजाभ्यः । विश्वेत्वा देवा वैश्वानरास्सꣳसृजन्त्वानुष्टुभेन छन्दसाऽङ्गिरस्वत् । रुद्रास्सं-भृत्य पृथिवीं बृहज्ज्योतिस्समीधिरे । तेषां भानुरजस्र इच्छुक्रो देवेषु रोचते । सꣳसृष्टां वसुभीरुद्रैः धीरैः कर्मण्यां मृदम् । हस्ताभ्यां मृद्वीं कृत्वा सिनीवाली करोतु ॥ २ ॥ ताम् । सिनीवाली सुकपर्दा सुकुरीरास्वौपशा । सातुभ्यमदिते मह ओखान्दधातु हस्तयोः । उखां करोतु शक्त्या बाहुभ्यामदितिर्धिया । माता पुत्रं यथोपस्थे साऽग्निं बिभर्तुगर्भआ । मखस्य शिरोऽसि यज्ञस्य पदेस्थः । वसवस्त्वा कृण्वन्तु गायत्रेण छन्दसाऽङ्गिरस्वत्पृथिव्यसि रुद्रास्त्वा कृण्वन्तु त्रैष्टुभेन छन्दसाऽङ्गिरस्वदन्तरिक्षमसि ॥ ३ ॥ आदि-त्यास्त्वा कृण्वन्तु जागतेन छन्दसाऽङ्गिरस्वद्यौरसि विश्वेत्वा देवा वैश्वानराः कृण्वन्त्वानुष्टुभेन छन्दसाऽङ्गिरस्वद्दिशोऽसि ध्रुवा सि धारया मयि प्रजाꣳ रायस्पोषङ्गौपत्यꣳ सुवीर्यꣳ सजातान् यजमा-नायादित्यै रास्ना स्यादितिस्ते बिलं गृह्णातु पांक्तेन छन्दसा ङ्गिर-स्वत् । कृत्वायसा मही मुखां मृन्मयीं योनिमग्नये । तां पुत्रेभ्य-स्सम्प्रायच्छददितिश्श्रपयानिति ॥ ४ ॥

நான்காம் அநுவாகத்தில் மண் கொண்டு வருதல் கூறப்பட்டது. இதில், நெருப்பு உண்டாக்குதற்கு தொட்டி (உகா) செய்தல் கூறப்படுகின்றது.

### முதல் விநியோகம்

#### கயிற்றை அவிழ்த்தல்

மந்திரம்:

विपाजसा पृथुना शोशुचानो बाधस्वद्विषो रक्षसो अमीवाः ।
सुशर्मणो बृहतश्शर्मणि स्यामग्ने रहꣳ सुहवस्य प्रणीतौ ।

என்பது.

#### உரை.

அக்கினியே! வன்மை மிகுதியால் பரந்து விளங்குகின்ற நீ, பகைவரையும், அசுரரையும் பிணிகளையும் போக்குவாயாக. மலர்ந்த முகமுடையதும் இனிது அழைத்தற்குரியதுமாகிய அக்கினியின் வழிபாட்டில் யான், இன்புற்றிருக்கின்றேன் என்பது.

#### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மண் மூட்டையைக் கட்டி யிருந்த கயிற்றை அவிழ்த்து விடல் வேண்டும் என்பதாம்.

---

### இரண்டாம் விநியோகம்.

#### மண்ணில் நீர் தெளித்தல்

#### முதல் மந்திரம்

आपोहिष्ठा मयो भुवस्तास ऊर्जे दधातन । महे रणाय चक्षसे ।

என்பது.

#### உரை

தண்ணீரே! நீ, இன்பை அநுபவிக்கும்படி செய்வாயாக. நீராடல் அருந்தல் முதலியவைகளால் நீரால் இன்ப முண்டாதல் வெளிப்படை. இரசத்தை அநுபவிக்கும்படி வைப்பாயாக. மற்றும், பரதத்துவத்தைக் காணுதற்குரியோராய் எம்மைச் செய்வாயாக என்பது.

---

#### இரண்டாம் மந்திரம்.

योवश्शिवतमो रसः तस्य भाजयतेह नः । उशतीरिव मातरः ।

என்பது.

#### உரை.

மிகச் சாந்தமுடையதும் சுகத்திற்கு முக்கிய காரணமுமாகிய யாதொரு ரசம் உண்டோ, அதை, பிரியமிக்க மாதாவின் முலைகளை குழந்தை யடைவது போல் அடைவோமாக என்பது.

---

மூன்றும் மந்திரம்

तस्मा अरंगमामचो यस्य क्षयाय जिन्वथ । आपो जन यथाचनः ।

என்பது.

உரை.

இரசமுடைமையால் நீ பிரியமாவாயாக. அத்தகைய இரசத்தின் பொருட்டு உன்னை இனிது அடைவோம். மற்றும், தண்ணீரே! எமக்குப் பிரசைகள் உண்டாகும்படி செய்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மூன்று மந்திரங்களாலும், மண்ணில் நீரை விடுதல் வேண்டுமென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்.

மண்ணில் மான் மயிர் முதலியவைகளைச் சேர்த்தல்

முதல் மந்திரம்

मित्रस्सꣳसृज्य पृथिवीं भूमिंच ज्योतिषा सह । सुजातं जातवेदसमग्निं वैश्वानरं विभुम् ।

என்பது.

உரை

அனைவருக்கும் ஆப்தனாகிய மித்திர தேவதை, பரந்த இம் மண்ணை, கருமான் மயிர் முதலியவைகளுடன் கூடும்படிச் செய்து அக்கினியை யுண்டாக்கிற்று. அதாவது, அக்கினி என்னும் உகாவை உண்டாக்கியது என்பதாம். எவ்விதமாகிய அக்கினியை யுண்டாக்கிற்றெனின்? தோன்றியவைகளை யெல்லா முணர்கின்றதும், அனைவருக்கும் உதவி செய்யும் வகையில் எங்கும் பரந்திருக்கின்றதுமாகிய அக்கினியை என்க.

---

இரண்டாம் மந்திரம்.

अयक्ष्मायत्वा सꣳसृजामि प्रजाभ्यः । विश्वेत्वा देवा वैश्वानरास्सꣳसृजन्त्वानुष्टुभेन छन्दसाङ्गिरस्वत् ।

என்பது.

(உகாவைச்

## உரை.

அக்கினியே! உன்னை, உயிர்களின் பிணி நீக்குதற் பொருட்டு, கருமான் மயிர் முதலியவைகளுடன் அங்கிரச ரிஷி சேர்த்தது போல் சேர்க்கின்றேன். நலஞ் செய்பவர்களான தேவர்களெல்லாரும், அநுஷ்டுப் சந்த வுதவியால் உன்னைச் சேர்த்து வைப்பார்களாக என்பது.

## சாயணபாடியக் கருத்து

இவ் விரண்டு மந்திரங்களாலும், கருமான் மயிர், ஆட்டு மயிர், நீண்ட காலம் வரையிலிருந்து போய்க் கிடந்த மண்வாய்க்குள்ளிருந்த மட்பாண்ட ஓட்டுச் சல்லித்தூள், பூமிக்குள்ளிருந்த சிறிய கற்களின் தூள், உமி, மூங்கிலின் வித்தூள், புரசம்பட்டைக் கஷாயம் என்பவைகளை, உறுதியின் பொருட்டு அம் மண்ணுடன் சேர்த்துக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

## நான்காம் விநியோகம்

### மண்ணைப் பிசைதல்

மந்திரம்:

रुद्रास्संभृत्य पृथिवीं बृहज्ज्योतिस्समीधिरे । तेषां भानुरजस्रमिच्छुक्रो देवेषु रोचते ।

என்பது.

## உரை

உருத்திரர்கள் என்னுந் தேவர்கள், உகா செய்யவேண்டிய மண்ணை, குழைவாம்படி பிசைந்து பேரொளியுடைய அக்கினியை வளர்த்தனர். அந்த உருத்திரர்களுடைய இவ் வக்கினி, எப்போதும், பெரும் ஒளியோடுகூடத் தேவர்களிடத்தில் விளங்குகின்றது என்பது.

## சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வேள்வித்தலைவன் மண்ணை நன்றாய்ப் பிசைதல் வேண்டுமென்பதாம்.

---

## ஐந்தாம் விநியோகம்

### வேள்வித்தலைவனிடங் கொடுத்தலில்

### முதல் மந்திரம்.

மந்திரம்:

सꣳसृष्टां वसुभीरुद्रैर्धीरैः कर्मण्यां मृदम् । हस्ताभ्यां मृद्वीं कृत्वा सिनीवाली करोतु ताम् ।

என்பது.

செய்தல்)

உரை.

முன் மந்திரத்தாற் பெறப்பட்ட புத்திமான்களான வசுக்களாலும், உருத்திரர்களாலும், மான் மயிர் முதலியவைகளைச் சேர்த்துப் பிசைந்து உகா செய்தற்குரியதாகிய மண்ணை, 'சினீவாலி' என்னும் தேவதை மீண்டும் தனது கைகளாற் பிசைந்து குழைவாக்கி உகையைச் செய்வதாகுக என்பது,

இரண்டாவது மந்திரம்.

सिनीवाली सुकपर्दा सुकुरीरा स्वौपशा । सा तुभ्यमदिते मह्य ओखां दधातु हस्तयोः ।

என்பது.

உரை.

அழகிய தலைமயிர் முடிக்க, வலை முதலிய அலங்காரங்களுடன் கூடிய பூமிதேவியாகிய மாபெரும் சினீவாலி தேவியே! உனது, கைகளால் உகையை எடுத்துக் கொள்வாயாக என்பது.

மூன்றும் மந்திரம்.

उखां करोतु शक्त्या बाहुभ्यामदितिर्धिया । माता पुत्रं यथोपस्थे साग्निं बिभर्तु गर्भआ ।

என்பது.

உரை.

அதிதி தேவியானவள், புத்தி வலியாலும் கைகளின் ஆற்றலாலும் தேக வன்மையாலும், தாய் குழந்தையை மடியில் வைத்துப் பாதுகாப்பதுபோல் உகாவை தனது மடியின்மீது வைத்துப் பாதுகாப்பாளாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மூன்று மந்திரங்களாலும், குழைத்த மண்ணை, வேள்வித்தலைவனுடைய மனைவி ஒருத்தியாயிருந்தால் வேட்போனிடத்தில் உகா (தொட்டி) செய்தல் வேண்டும். மனைவிகள் பலர்களாயிருப்பாரேல், அவர்களுள் மூத்த மனையாளிடத்திற் கொடுத்து உகாவைச்செய்தல் வேண்டுமென்பதை யுணர்க.

ஆறும் விநியோகம்.

மண்ணை உருண்டையாக்கல்.

மந்திரம்:

मखस्य शिरोसि ।

என்பது.

உரை.

*மண்ணுருண்டையே! நீ, வேள்வியின் சிரசாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், பிசைந்த மண்ணை உருண்டையாக்கல் வேண்டுமென்பதாம்.*

ஏழாம் விநியோகம்.

மந்திரம் :

**यज्ञस्य पदेस्थः ।**

*என்பது.*

உரை.

*மான் தோல் தாமரையிலை யென்னுமிருவர்களே! நீங்கள், வேள்வியின் பாதங்களாக இருக்கின்றீர்கள் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மான் தோலேயும் தாமரை யிலையையும் தொடல் வேண்டும். அல்லது, மண்ணை இரண்டு விரலால் அழுத்தல் வேண்டு மென்பதாம்.*

எட்டாம் விநியோகம்.

மந்திரங்கள் நான்கால் உகாச் செய்தலில்
முதல் மந்திரம்.

वसवस्त्वा कृण्वन्तु गायत्रेण छन्दसाङ्गिरस्वत्पृथिव्यसि, ध्रुवासि धारया मयि प्रजाꣳ रायस्पोषं गौपत्यꣳ सुवीर्यꣳ सजातान् यजमानाय ।

*என்பது.*

உரை.

*உகாவே! (தொட்டியே!) வசுக்கள் என்னுந் தேவர்கள், காயத்திரிச் சந்த வுதவியால் அங்கிரச ரிஷிபோல, உன்னைச் செய்வார்களாக. நீ, பூமி வடிவா யிருக்கின்றாய். மற்றும், உகாவே! நீ, உறுதியுடையதா யிருக்கின்றாய். ஆதலின், உன்னைச்செய்கின்ற வேட்போனாகிய என்க்கு, பிரசை, தனம், கோ, நல்ல வீரம், சகோதரர் என்பவற்றைக் கொடுப்பாயாக, வேள்வித்தலைவ னுக்கும் இவைகளைக் கொடுப்பாயாக என்பது.*

செய்தல்)

இரண்டாவது மந்திரம்

रुद्रास्त्वा कृण्वन्तु त्रैष्टुभेन छन्दसाङ्गिरस्वदन्तरिक्षमसि, ध्रुवासि धारयामयि प्रजा॰ रायस्पोषं गौपत्य॰ सुवीर्य॰ सजातान्यजमानाय ।

என்பது.

உரை.

உகாவே! உன்னை, திருஷ்டுப் சந்த வுதவியால் உருத்திரர்கள் செய்வார்களாக. நீ அந்தரிட்சமாயிருக்கின்றாய் என்பது. ஏனையவைகளை முன்போல் வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க என்பது.

---

மூன்றாம் மந்திரம்.

आदित्यास्त्वा कृण्वन्तु जागतेन छन्दसाङ्गिरस्वद्यौरसि, ध्रुवासि धारयामयि प्रजा॰ रायस्पोषं गौपत्य॰ सुवीर्य॰ सजातान्यजमानाय ।

என்பது.

உரை.

உகாவே! உன்னை, ஆதித்தர்கள், சாகதிச் சந்த வுதவியாற் செய்வார்களாக. நீ, சுவர்க்கமாயிருக்கின்றாய் என்பது. ஏனையவைகளை முன்போல் வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க.

---

நான்காம் மந்திரம்.

विश्वेत्वा देवा वैश्वानराः कृण्वन्त्वानुष्टुभेन छन्दसाङ्गिरस्वद्दिशोसि ध्रुवासि धारयामयि प्रजा॰ रायस्पोषं गौपत्य॰ सुवीर्य॰ सजाान्यजमानाय ।

என்பது.

உரை.

உகாவே! உன்னை, வைசுவாநரர்(அனைவருக்கும் நலஞ் செய்கின்ற) தேவர்கள், அநுஷ்டுப் சந்த வுதவியால் செய்வார்களாக. நீ, திசையாயிருக்கின்றாய் என்பது. ஏனையவைகளை முன்போல் வருவித்துப் பொருளுரைத்துக் கொள்க.

சாயணபாடியக் கருத்து

இந் நான்கு மந்திரங்களாலும், வேட்போன், உகாவைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

(உகாவைச்

சூத்திரப்படி, வேள்வித்தலைவன் இந் நான்கு மந்திரங்களாற் போற்றல் வேண்டுமென்பதையு முணர்க. ஈண்டு, உகா என்னும் அந்தத் தொட்டி, ஒன்றன் மேலொன்று, மூன்று, அல்லது, ஐந்தை அடுக்கி வைத்தது போலவும், ஒட்டைச்சாண் உயரம், ஒரு முழம், நற் சதுரம், அல்லது, வட்டம், அல்லது நாற்கோண வடிவமுமாக இருத்தல் வேண்டும் என்க.

ஒன்பதாம் விநியோகம்

வரம்பு கட்டல்

மந்திரம் :

अदित्यै रास्नासि ।

என்பது.

உரை

வரம்பே ! நீ, பூமி தேவி வடிவாகிய உகையின் எழுதவமா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் தொட்டியின் கழுத்தில் கயிறு போன்று வரம்பு செய்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி தொட்டியின் நான்கு பக்கங்களிலும் முலைபோல் இரண்டிரண்டு குமிழ்கள் செய்தலும் வேண்டும் என்க.

---

பத்தாம் விநியோகம்.

பள்ளம் பண்ணுதல்

மந்திரம் :

अदितिस्ते विलं गृह्णातु पाङ्क्तेन छन्दसाङ्गिरस्वत् ।

என்பது.

உரை

உன்னிடத்தில் பூமியானது பங்க்தி என்னும் சந்த உதவியால் பள்ளஞ் செய்க என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தொட்டியின் நடுவில் பள்ளஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

செய்தல்)

பதினோராவது விநியோகம்.

மணல் மீது வைத்தல்

மந்திரம்:

कृत्वायसा मही मुखां मृन्मयीं योनिमग्नये । तां पुत्रेभ्यस्संप्रायच्छ
ददितिश्श्रपयानिति ।

என்பது.

உரை.

இவ் வதிதி தேவியானவள், மண்ணா லாக்கப்பட்டதும், அக்கினிக்குக் காரணமுமாகிய பெரியதோர் உகாவை (தொட்டியை) உண்டாக்கி, தனது புத்திரர்கள் போன்ற மனுவுக்குக் கொடுத்துவிட்டனள். எப்படிக் கொடுத்தன ளெனின்? 'இதை உலர்த்துவீர்களாக' என்று கூறிக் கொடுத்தனள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மணல் மீது அத் தொட்டியை வடக்கில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

சூண்டுச் சூத்திரத்தைத் தழுவி, 'मित्रैतान्त उखां परिददामि अभित्या एषा मासेदि' என்னும் சூத்திர மந்திரத்தால், அதிற் சூரியன் படும்படி வைத்தலும் வேண்டு மென்பதையு முணர்க.

தொட்டி செய்து எஞ்சிய மண்ணை மந்திர மின்றியே அஷாடா, என்னும் முக்கோண வடிவச் செங்கல்லாகச் செய்து, அதையும் மணலில் வைத்துச் சூரியன் படும்படியுஞ் செய்தல் வேண்டும். இக் கல் மகாக்கினி சயனத்தில் 'பாதேஷ்டிகை' என்னும் பெயருடன் வைக்கப்படுவதாம்.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

ஆறாம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

वसवः सप्तभिर्धूपोऽदितिस्त्वेसवदं खनेत् ।
देवीखां तत्र संस्थाप्य धिषणेति चतुष्टयात् ॥ १ ॥

अग्निं क्षिपेन्मन्त्रभेदो वरूजनपदद्वयात् ।
मित्रत्रयेणोपचारो देव उद्वासये दुखाम् ॥ २ ॥

अपेति शिकतास्वेतां निधाय वसवेत्यतः ।
चतुष्टयादजा क्षीरं सिञ्चेदद्वार्यैशतिर्मिताः ॥ ३ ॥

ஏழு மந்திரங்களால் செங்கற் சூளை போடுதல், குழியை வெட்டுதல், உகையை அக்குழியில் வைத்தல், நாலு மந்திரங்களால் தீயை உகையின் மேல் வைத்தல், மூன்று மந்திரங்களால் உபசரித்தல், உகையை எடுத்தல், உகையை மணலின்மேல் வைத்தல், நான்கு மந்திரங்களால் ஆட்டுப்பாலை உகையில் நிறைய விடுதல் என்பது.

---

## நான்காம் காண்டம் முதற் பிரபாடகம்
## ஆறும் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிகளுக்கு மேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது.

---

உகா (மண் தொட்டி) வை சமற்காரஞ்செய்தற்குரிய மந்திரங்கள்.

वसंवस्त्वा धूपयन्तु गायत्रेण छन्दसाङ्गिरस्वद्रुद्रास्त्वा धूपयन्तु त्रैष्टुभेन छन्दसाऽङ्गिरस्वदादित्यास्त्वा धूपयन्तु जागतेन छन्दसाऽङ्गिरस्वद्विश्वेत्वा देवा वैश्वानरा धूपयन्त्वानुष्टुभेन छन्दसाऽङ्गिरस्वदिन्द्रस्त्वा धूपयत्वङ्गिरस्वद्विष्णुस्त्वा धूपयत्वङ्गिरस्वद्वरुणस्त्वा धूपयत्वङ्गिरस्वददितिस्त्वा देवी विश्वदेव्यावती पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वत्खनत्ववट देवानान्त्वा पत्नीः ॥ १ ॥ देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वद्दधतूखे धिषणास्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थे ङ्गिरस्वदभीन्धतामुखेमास्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थे ङ्गिरस्वच्छ्रपयन्तूखेवरूत्रयो जनयस्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थे ङ्गिरस्वत्पचन्तूखे । मित्रैता मुखां पचैषामाभेदि । एतान्ते परिददाम्यभित्त्यै । अभीमाम् ॥ २ ॥ महिनादिवं मित्रो बभूव सप्रथाः । उतश्रवसा पृथिवीम् । मित्रस्य चर्षणीधृतश्श्रवो देवस्य सानसिम् । द्युम्नञ्चित्रश्रवस्तमम् । देवस्त्वा सवितोद्वपतु सुपाणिस्स्वंगुरिः । सुबाहुरुत-

சமற்காரம்)

शक्त्या । अपद्यमाना पृथिव्याशादिश आपृण । उत्तिष्ठ बृहती

भवोर्ध्वा तिष्ठ ध्रुवा त्वम् । वसवस्त्वा च्छृन्दन्तु गायत्रेण छन्दसा

ङ्गिरस्वद्रुद्रास्त्वा ऽच्छृन्दन्तु त्रैष्टुभेन छन्दसाऽङ्गिरस्वदादित्या-

स्त्वाऽच्छृन्दन्तु जागतेन छन्दसाऽङ्गिरस्वद्विश्वेत्वा देवा वैश्वानरा

आच्छृन्दन्त्वानुष्टुभेन छन्दसाऽङ्गिरस्वत् ॥ २ ॥

ஐந்தாம் அநுவாகத்தில், உகா என்னும் மண் கொட்டியைச் செய்தல் கூறப்பட்டது. இதில், அதனுடைய ஸம்ஸ்காரம் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

உகாவை, ஏழு மந்திரங்களால் புகையிற் காட்டுதலில்

முதல் மந்திரம்

वसवस्त्वा धूपयन्तु गायत्रेण छन्दसाऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை

உகாவே! உன்னை, எட்டு வசுக்களும், காயத்திரிச் சந்தத்தால், அங்கிரச ரிஷிபோல புகை பிடிப்பார்களாக என்பது.

ஈண்டு, காருகபத்தியத்திலிருந்து எடுத்து அக்கினியை வடக்கில்வைத்து, அவ்வக்கினியில் குதிரைச் சாணத்தை வைத்துப் புகை புண்டாக்கி அப் புகையில் உகாவைக் காட்டுதல் வேண்டு மென்பதை யுணர்க.

---

இரண்டாம் மந்திரம்.

रुद्रास्त्वा धूपयन्तु त्रैष्टुभेन छन्दसाऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இதில் உருத்திரர்கள் திருஷ்டுப் சந்தத்தால் என்பது விசேடம் ஏனைய வைகள் முன் போன்றன என்பது.

---

மூன்றும் மந்திரம்

आदित्यास्त्वा धूपयन्तु जागतेन छन्दसाऽङ्गिरस्वत् ।

என்பது.

(உகாவின்

உரை

இதில் ஆதித்தியர்கள், சாகதச் சந்தந்தால் என்பது விசேடம், ஏனையவை முன் போன்றன என்பது.

---

நான்காம் மந்திரம்

विश्वेत्वा देवा वैश्वानरा धूपयन्तु आनुष्टुभेन छन्दसाऽङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இதில் விசுவ தேவர்கள் அநுஷ்டுப் சந்தந்தால் என்பது விசேடம், ஏனையவை முன் போன்றவை என்பது.

---

ஐந்தாம் மந்திரம்.

इन्द्रास्त्वा धूपयत्वङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இந்திரன், உன்னை, அங்கிரச ரிஷிபோல் புகை காட்டுவானாக என்பது.

---

ஆறும் மந்திரம்

विष्णुस्त्वा धूपयत्वाङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இதில் விஷ்ணு என்பது விசேடம் ஏனையது முன் போல் என்பது.

---

ஏழாம் மந்திரம்.

वरुणस्त्वा धूपयत्वङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இதில் வருணன் என்பது விசேடம், மற்றையது முன் போன்றது.

சாயணபாடியக் கருத்து.

மேற் கூறிய ஏழு மந்திரங்களாலும், குதிரைச் சாணப் புகையில் அந்த மண் தொட்டியை புகை பிடித்தல் வேண்டு மென்பதாம்.

இவ் வக்கினியை இத்துடன் தள்ளி விடல் வேண்டும் என்பதை யுணர்க.

---

சமற்காரம்)

### இரண்டாவது விநியோகம்.

#### குழி கெல்லுதல்

மந்திரம் :

अदितिस्त्वा देवी विश्वदेव्यावती पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वत्खनत्ववट ।

என்பது.

உரை.

குழியே! உன்னை, எல்லாத் தேவர்கட்கும் உபசாரஞ் செய்யுந் தன்மையை யுடைய அதிதி தேவி, பூமியின்மேல், அங்கிரச ரிஷி செய்ததுபோற் செய்வாளாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காருகபத்தியத்திற்குக் கிழக்கில் ஒரு பள்ளங் கெல்லுதல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, உகா, சிவப்பாதற் பொருட்டு, கரும்புத் தோவை முதலியவற்றை அப்பள்ளத்தில் நிரப்பி வைத்துக் கொள்ளல் வேண்டு மென்பதையு முணர்க.

---

### மூன்றும் விநியோகம்.

#### உகாவை வைத்தல்

மந்திரம் :

देवानां त्वा पत्नीर्देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वद्दधतूखे ।

என்பது.

உரை.

உகாவே! உன்னை, எல்லாத் தேவர்கட்கும் உபசாரஞ் செய்யுந் தன்மையை யுடைய தேவ பத்தினிகள் பள்ளத்தில் வைப்பார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உகாவை, அப் பள்ளத்தில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, மந்திரமின்றியே, அஷாடா, என்னுஞ் செங்கல்லையும் அதனுடன் குழியில் வைத்து, முன்போல், கரும்புத் தோகை முதலியவைகளைக் கொண்டு குழியை மூடி விடல் வேண்டும்.

பிறகு, காருகபத்தியத்திலிருந்து தீயை எடுத்துக்கொண்டு வரல் வேண்டும்.

---

(உகாவின்

நான்காம் விநியோகம்

தீ வைத்தலில்

முதல் மந்திரம்.

धिषणास्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वदभीन्धतामुखे ।

என்பது.

உரை

எல்லாத் தேவிகளின் உபகாரத்தைக் கொண்டவளும், வித்தையின் அபி மானி தேவதையுமாகிய 'திஷணை' என்னும் தேவி, பூமியின் மீது, அங்கிரச ரிஷி போல் இந்த உகாவைச் சுடுவாளாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

ग्नास्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वच्छ्रपन्तूखे ।

என்பது.

உரை

இதில் சங்கோபிமானி தேவிகள் என்பது விசேடம், ஏனையவை முன் போன்றன.

---

மூன்றும் மந்திரம்

वरूत्रयस्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वत्पचन्तूखे ।

என்பது.

உரை.

ஹோதா கணத்தை அபிமானிக்கின்ற 'வரூ' என்னும் மூன்று தேவி கள், உகா பக்குவமாயிற்று? என்று பார்த்துக்கொள்வார்களாக என்பது விசேடம். ஏனையவை முன்போன்றன.

---

நான்காம் மந்திரம்

जनयस्त्वा देवीर्विश्वदेव्यावतीः पृथिव्यास्सधस्थेऽङ्गिरस्वत्पचन्तूखे ।

என்பது.

உரை.

'ஜனய:' என்னும் தேவ பத்தினிகள் என்பது விசேடம், ஏனையவைகள் முன்போன்றன.

சமற்காரம்)-

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்கள் நான்காலும், எடுத்துக்கொண்டு வந்த தீயைச் சூளையில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்.

சூளைத் தீயைச் சமப்படுத்தல்

முதல் மந்திரம்

मित्रैता मुखां पचैषामा भेदि। एतान्ते परिददाम्यभित्यै।

என்பது.

உரை

அணைவருக்கு நலஞ் செய்யும் மித்திரதேவதையே! நீ, இந்த உகாவைப் பக்குவஞ் செய்வாயாக. இது உடைதல் கூடாது. உடையாம லிருத்தற் பொருட்டே உன்னிடங் கொடுக்கின்றேன் என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

अभीमां महिना दिवं मित्रो बभूव सप्रथाः। उत श्रवसा पृथिवीं।

என்பது.

உரை.

பெருங் கீர்த்தியையுடைய மித்திரன், மகிமையால் சுவர்க்கம்போன்றதும் கீர்த்தியால் பூமி போன்றதுமாகிய இந்த உகாவை அடர்ந்தனன் என்பது.

---

மூன்றும் மந்திரம்

मित्रस्य चर्षणीधृतश्श्रवो देवस्य सानसिम्। द्युम्नञ्चित्र श्रवस्तमम्।

என்பது.

உரை.

மக்களைத் தாங்கும் மித்திர தேவனுடைய மகிமை பெரிதாயிருக்கிறது. பயனை யளித்தல், தனத்தைக் கொடுத்தலால் பெரிய கீர்த்தியை யுடைய மித்திர தேவன் இந்த உகாவை நன்கு பக்குவஞ் செய்வானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும், சூளையில் உகா வேகும்போது தீயைச் சமப்படுத்தி விடல் வேண்டு மென்பதாம்.

---

### ஆறும் விநியோகம்.

உகாவை எடுத்தல்

மந்திரம் :

**देवस्त्वा सवितो द्वपतु सुपाणिस्वंगुरिः । सुबाहुरुत शक्त्या ।**

*என்பது.*

உரை

*உகாவே! உன்னை, நல்ல கைகளையும், மணிக் கட்டுகளையும், தோள்களையும் விரல்களையு முடைய சவிதா தேவதை பள்ளத்திலிருந்து வலியால் மேலே யெடுக்குக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் வெந்து போன உகாவைக் குழியினின்றும் வெளியி லெடுத்தல் வேண்டு மென்பதாம்.*

---

### ஏழாம் விநியோகம்.

மணலின் மீது வைத்தல்

மந்திரம் :

**अपद्यमाना पृथिव्याशा दिश आपृण । उत्तिष्ठ बृहती भवोर्ध्वा**
**तिष्ठ ध्रुवा त्वम् ।**

*என்பது.*

உரை

*உகாவே! நீ, பூமியில் உடையாதிருந்தனை. கிழக்கு முதலிய திசைகளில் பரவுவாயாக. பள்ளத்திலிருந்து வெளியில் எழும்புவாயாக. எழுந்து, மேலே நிலையை யடைவாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், எடுத்த உகாவை, வடக்கில் மணலின் மீது வைத்தல் வேண்டு மென்பதாம். முன்போல் சூரியன் படும்படியும் வைத்தல் வேண்டும்.*

---

### எட்டாம் விநியோகம்.

உகாவில் வெள்ளாட்டுப் பாலை விடுதலில்

முதல் மந்திரம்

**वसवस्त्वाच्छृन्दन्तु गायत्रेण छन्दसाङ्गिरस्वत् ।**

*என்பது.*

சமற்காரம்)

உரை.

உகாவே! உன்னை, வசு, என்னும் தேவதை, காயத்திரிச் சந்தத்தால் அங்கிரசரிஷி போல் பாலால் நனைக்குக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

रुद्रास्त्वाच्छृन्दन्तु त्रैष्टुभेन छन्दसाङ्गिरस्वत् ।

என்பது.

உரை

இதில், உருத்திரர்கள் திருஷ்டுப் சந்தத்தால் என்பது விசேடம். ஏனையவை முன் போன்றன.

---

மூன்றும் மந்திரம்

आदित्यास्त्वाच्छृन्दन्तु जागतेन छन्दसाङ्गिरस्वत् ।

என்பது.

உரை

ஆதித்தர்கள், சகதிச் சந்தத்தால் என்பது விசேடம். ஏனையவை முன் போன்றன.

---

நான்காம் மந்திரம்

विश्वेत्वा देवा वैश्वानरा आच्छृन्दन्त्वानुष्टुभेन छन्दसाङ्गिरस्वत् ॥

என்பது.

உரை

விசுவ தேவர்கள், அநுஷ்டுப் சந்தத்தால் என்பது விசேடம். ஏனையவை முன் போன்றன.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் நான்காலும், சுட்டெடுத்த உகாவை ஆட்டுப் பாலால் நனைத்தல் வேண்டும். அல்லது, அதன்மேல் ஆட்டுப்பாலைத் தெளித்தல் வேண்டும் என்பதாம்.

ஆறும் அநுவாகம் முடிந்தது.

---

## ஏழாம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

समास्त्वा सामिधेन्यः स्युर्दशैता आग्निके पशौ ।

*பத்துச் சமித்துக்களை மந்திரங்களால் தீயில் வைத்தல் வேண்டும் என்பது.*

---

## நான்காம் காண்டம் முதற் பிரபாடகம்

## ஏழாம் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிகளுக்கு மேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

---

ஐவகைப் பசுவின் அங்கமாகிய சமித்துக்களைத் தீயில் வைத்தற்குரிய மந்திரங்கள்.

समास्त्वाऽग्न ऋतवो वर्धयन्तु संवत्सरा ऋषयो यानि सत्या । सन्दिव्येन दीदिहि रोचनेन विश्वा आभाहि प्रदिशः पृथिव्याः । सञ्चेध्यस्वाग्ने प्रचबोधयैन मुच्चतिष्ठ महते सौभगाय । माचरिषदुपसत्ता ते अग्ने ब्रह्माणस्ते यशसस्सन्तु माऽन्ये । त्वामग्ने वृणते ब्राह्मणा इमे शिवो अग्ने ॥ १ ॥ संवरणे भवानः । सपत्नहानो अभिमातिजिच्चस्वे गये जागृह्य प्रयुच्छन् । इहैवाग्ने अधिधारया रयिं मात्वानिक्रन्पूर्वचितो निकारिणः । क्षत्रमग्ने सुयममस्तु तुभ्यमुपसत्ता वर्धतान्ते अनिष्टृतः । क्षत्रेणाग्ने स्वायुस्सꣳरभस्व मित्रेणाग्ने मित्रधेये यतस्व । सजातानां मध्यमस्था एधि राज्ञामग्ने विहव्यो दीदिहीह । अति ॥ २ ॥ निहो अतिस्रिधोऽत्यचित्तिमत्यरातिमग्ने । विश्वाह्यग्ने दुरिता सहस्वाथास्मभ्यꣳ सह वीराꣳ रयिन्दाः । अनाधृष्यो जातवेदा अनिष्टृतो विराडग्ने क्षत्रभृद्दीदि-

மந்திரங்கள்)

हीह॰। विश्वा आशाः प्रमुञ्चन्मानुषीर्भियश्शिवाभिरद्यपरि पाहि नो वृधे। बृहस्पते सवितर्बोधयैनꣳ संशितश्चित्सन्तराꣳ सꣳशिशाधि। वर्धयैनं महते सौभगाय॥ ३॥ विश्वे एनमनुमदन्तु देवाः। अमुत्र भूयादथयद्यमस्य बृहस्पते अभिशस्तेरमुञ्चः। प्रत्यौहतामश्विना मृत्युमस्माद्देवानामग्ने भिषजाशचीभिः। उद्वयन्तमसस्परि पश्यन्तो ज्योतिरुत्तरम्। देवन्देवत्रा सूर्यमगन्म ज्योतिरुत्तमम्॥४॥

---

ஈண்டு, மகாக்கினி சயனத்திற்கு அங்கமாகிய பசுபந்த யாகம், ஐவகைப் பசுக்களை யுடையதென்றும், ஒரு பசுவை யுடையதென்றும் இருவகைப் படும். இவற்றுள், ஐவகைப் பசுக்களாவன, மனிதன், குதிரை, காளை, செம் மறியாடு, வெள்ளாடு என்பவைகள். இவைகளைச் செய்யவேண்டிய முறைகளை மேல்வரும் இரண்டாம் பிரபாடகம் பத்தா மநுவாகத்திலும், சூத்திர முதலிய வற்றிலுங் காண்க. மற்றும், ஐந்து பசுக்களைக்கொண்டு யாகஞ் செய்யு மிடத் தில், ஐவகைப் பசுக்கட்கும் ஒப்பாயுள்ளதோர் ஆட்டுக்கடாவைக் கொண்டுஞ் செய்யலாம். எவ்வாறெனின்? ஆட்டுக்கடா ஒன்றே மீசை யிருத் தலின் மனிதனுக்கும், கொம்பில்லாததாய் இருத்தலின் குதிரைக்கும், கீழ் ஈற்றில் பற்கள் இருத்தலின் காளைக்கும், கொளும்புகள் இரண்டிருத்தலின் செம்மறி யாட்டிற்கும், சாதி ஒற்றுமையால் வெள்ளாட்டிற்கும் ஒற்றுமை யிருத்தலி னென்க.

அஃதன்றியும், இந்தப் பிராசாபத்திய பசுவிற்குப் பதிலாக வாயவீய பசு வுஞ் செய்யலாம், இதன் விரிவை பிராமணத்திலும் சூத்திரத்திலுங் காண்க. இவ்வாறு செய்யில் விரோதமல்லவா எனின்றே! ஆம். அதற்கு, பிராசாபத்திய பசுச் செய்யும்போது வாயவீய புரோடாசமும், வாயவீய பசுச் செய்யும் போது பிராசாபத்திய புரோடாசமுஞ் செய்யில் விரோதம் நீங்கு மென்க. ஆனால் வாயவீய பசுவிற்கு யாஜ்யா புரோநுவாக்கியங்கள் பிராமணத்திலுள்ள வைகள். பிராசாபத்திய பசுவிற்கு இதிற் கூறிய யாஜ்யா புரோநு வாக்கியங் கள். வாயவீய பசுவிற்கு வெண்மை நிறமுடைமையின் அக்கினிக்கு ஒப்பாகும் என்பதையு முணர்க. இக்காலத்தில் பெரும்பான்மை வாயவீய பசுவே ஆசரிக்கப்படுகின்றது. ஆனாலும், மேல் வரும் மகாக்கினி சயனத்திற்கு அங்கமாக இந்த ஏழாம் அநுவாகத்திற் கூறப்படும் பசுபந்த யாகம் பிரசாபத் திய பசுயாகமேயாம். எல்லா வகையாலும், இவ்வாறு பசுபந்த யாகஞ்

செய்து அப் பசுக்களின் தலைகளை யறுத்து மண் பூசி வைத்து, மகாக்கினி சயனத் தொடக்கத்தில் அக்கினி சயனத்தின் கீழ் பூமியில் அந்தத் தலைகளைப் புதைத்து வைத்தல் வேண்டுமாதலின் இது அங்கமா மென்பதை யுணர்க. பசுக்களின் தலைகளைக் கொன்று வருமுறைகளை, பிராமணத்திலும் சூத்திரத்திலுங் காண்க.

சங்கல்ப முதலியன

'प्रजापत्येन पशुपन्थेन यक्ष्ये' (பிரசாபதிக்குரிய ஆட்டுக்கடாவைக் கொண்டு வேட்பேன்) என்று, சங்கற்பஞ் செய்து கொண்டு, காருகபத்தியத் தீயை சமாபரோபணஞ் (கட்டையில், அல்லது ஆன்மாவில் ஏறும்படி) செய்து கொண்டு, யாகஞ் செய்யு மிடத்திற்குப் போய், அக்கினியைக் கடைந்து அதன் மீது சமித்தை வைத்து, ஷட்டோதா (ஆறு முறை கூப்பிட்டுப் பதில் சொல்லல்) முதல் அனைத்தையும் நிருட பசுபந்த யாகத்தைப் போலவே செய்து கொள்ளல் வேண்டும். பிறகு, 'प्रजापतये त्वा जुष्टमपाकरोमि' என்று, பிராசாபத்தியப் பசுவைத் தருப்பையால் தொட்டு, அதாவது உபாகரணஞ் செய்துவிட்டு, ஏனைய நியோசன முதலிய விடங்களிலும் இவ்வாறே கூறல் வேண்டும். ஈண்டு, ஆபஸ்தம்ப ஹௌத்ரமா யிருந்தால், அதாவது ஆபஸ்தம்பர் கூறியபடி ஹோதா மந்திரம் ஓதுவதா யிருந்தால், 'प्रवो वाजाः' என்பது முதலிய சாமிதேனி (சமித்துக்களை வைக்கும்) மந்திரங்கள் பதினொன்றையும் ஓதி விடல் வேண்டும்.

---

முதல் விநியோகம்

சமித்துக்களை வைக்கும் மந்திரங்களுள்

முதல் மந்திரம்

समास्त्वाग्न ऋतवो वर्धयन्तु संवत्सरा ऋषयो यानिसत्या। संदिव्ये
नदीदिहिरोचनेन विश्वा अभाहि प्रदिशः पृथिव्याः।

என்பது.

உரை

அக்கினியே! வருடம், இருது, மாதம், பட்சம் என்னும் கால விசேடங்களும், சத்திய வாக்குக்களும் உன்னை வளர்க்குக. வளர்ந்த நீயும், சுவர்க்கத்தை விளக்கும் ஒளியால் விளங்குவாயாக. மற்றும், உனது ஒளியால் பூமியின் திக்குக்களையும் விளக்குவாயாக என்பது.

---

### இரண்டாவது மந்திரம்

संश्रेध्यस्वाग्ने प्रचबोधयैन मुच्चतिष्ठ महते सौभगाय ।
माचरिषदुपसत्ताते अग्ने ब्रह्माणस्ते यशसस्सन्तु मान्ये ।

என்பது.

### உரை.

அக்கினியே! நீ, தானுகவே ஒளிர்வாயாக. எசமானனுக்கு பெரும் பாக்கியத்தின் பொருட்டு எழுவாயாக. அக்கினியே! உனது தொண்டனைத் துன்புறுத்தாதே. உன்னுடைய வேள்விச் செயலாளர்கள் கீர்த்தியுடையவர்களாகுக. உன்னை வழிபடாதவர்கள் கீர்த்தியுடையாதவராகுக என்பது.

---

### மூன்றும் மந்திரம்.

त्वामग्ने वृणते ब्राह्मणा इमे शिवो अग्ने संवरणे भवानः ।
सपत्नहानो अभिमातिजिच्चस्वेगये जागृह्य प्रयुच्छन् ।

என்பது.

### உரை

அக்கினியே! உன்னை, வேள்வித்தலைவன், வேள்விச் செயலாளர்கள் முதலானோர்கள் பூசிக்கின்றனர். அக்கினியே! எமது பிழைகளை பொறுத்துக்கொண்டு சாந்தமாவாயாக. மற்றும், எமது பகைவரை யொழிப்போனுகவும், பாவங்களைப் போக்குவோனுகவுமிருந்து தனது வீட்டுக்குள் விழித்துக் கொண்டிருப்பாயாக என்பது.

---

### நான்காம் மந்திரம்.

इहैवाग्ने अधि धारया रयिं मात्वा निक्रन्पूर्वचितो निकारिणः ।
क्षत्रमग्ने सुयममस्तु तुभ्यमुपसत्ता वर्धतान्ते अनिष्टृतः ।

என்பது.

### உரை.

அக்கினியே! வீட்டிலேயே தனத்தை மிகுதியாய்த் தேடுவாயாக. முன்னர் அக்கினி சயனஞ் செய்தவர்கள், நான் இப்போது செய்யும் அக்கினி சயனத்தைத் தடுக்காதவர்களாக. அக்கினியே! உனது வன்மை நிலையுடையதாகுக. உனது தொண்டன், ஒருவராலும் துன்புறுத்தப்படாதோனுய்ப் பெருகுவானுக என்பது.

---

ஐந்தாம் மந்திரம்.

क्षत्रेणाग्ने स्वायुस्सꣳ रभस्व मित्रेणाग्ने मित्रधेये यतस्व ।
सजातानां मध्यमस्था एधिराज्ञामग्ने विहव्यो दीदिहीह ।

என்பது.

உரை

அக்கினியே! உனது வன்மையால் எனது ஆயுளைப் பெருக்குவாயாக. அக்கினியே! எம்மைப் பாதுகாப்பதில், அநுக்கிரக புத்தியால் முயற்சிப்பாயாக. பிரசாபதியின் முகத்திற் றோன்றியவர்களாலும், உன்னுடன் கூடவே உதித்தவர்களாலும் அந்தணர்களை எப்போதும் போற்றி வைத்துக் கொள்வாயாக. அக்கினியே! நீ, அரசர்கட்கு, இப் பூமியில், பல்வகை வேள்விகளைச் செய்விப்போனா யிருந்து விளங்குவாயாக என்பது.

---

ஆறும் மந்திரம்

अतिनिहो अतिस्रिधोत्यचित्तिमत्यरातिमग्ने । विश्वाह्यग्ने दुरिता सहस्वाथास्मभ्यꣳ सह वीराꣳ रयिं दाः ।

என்பது.

உரை

அக்கினியே! தாழ்ந்த பிறப்பைத் தரும் பாவங்களையும், பிணிகளையும் போக்குவாயாக. கருமத்தை ஆசரிப்பதிலுள்ள மறதியை நீக்குவாயாக. கருமத்திற்குப் பகையாயிருப்பதை நீக்குவாயாக. அக்கினியே! தீமை தரும் பாவங்களெல்லாவற்றையும் போக்குவாயாக. புத்திரர்களுடன் தனத்தை யளிப்பாயாக என்பது.

---

ஏழாம் மந்திரம்.

अनाधृष्यो जातवेदा अनिष्टृतो विराडग्ने क्षत्रभृद्दीदिहीह । विश्वा आशाः प्रमुञ्चन्मानुषीर्भियश्शिवाभिरद्य परिपाहिनो वृधे ।

என்பது.

உரை

மேல் ஒருவராலுந் தாழ்த்தப்படாததும், தோன்றியவைகளை யுணர்கின்றதும், முன்னும் ஒருவராலுந் தாழ்த்தப்படாததும், பல்வகையாய் விளங்குவதும், வன்மையை நிறையக் கொடுப்பதுமாகிய அக்கினியே! நீ, சாந்தமாய்

மந்திரங்கள்)

இக் கருமத்தை முன்னிட்டு, தீய தொழிலில் விருப்பம் பிணி முதலியவைகளை நீக்கி என்னைப் பாதுகாப்பாயாக என்பது.

எட்டாம் மந்திரம்.

बृहस्पते सवितर्बोधयैनꣳ सꣳशितञ्चित्सन्तराꣳ सꣳशिशाधि ।
वर्धयैनं महते सौभगाय विश्व एन मनुमदन्तु देवाः ।

என்பது.

உரை.

பிருகஸ்பதி, சவிதா தேவன் என்பவர்களுக்கு ஒப்பாகிய அக்கினியே! கருமஞ் செய்பதில் வேள்வித்தலைவனை அறிவுடையவனாகச் செய்வாயாக. மற்றும், உபதேச முடையவனாகச் செய்வாயாக. பெரும் பாக்கியனாகச் செய்வாயாக. எல்லாத் தேவர்களும் நல்லவர்கள் என்று கொண்டு களிப்படைவாயாக என்பது.

ஒன்பதாம் மந்திரம்.

अमुत्रभूयादध यद्यमस्य बृहस्पते अभिशस्ते रमुञ्चः । प्रत्यौहता
मश्विना मृत्युमस्माद्देवानामग्नेभिषजाशचीभिः ।

என்பது.

உரை.

பிருகிஸ்பதிக்கு ஒப்பாகிய அக்கினியே! சுவர்க்கத்தில் நீண்டகால மிருப்பதற்கு எமவாதனையை நீக்கினை. இனி கவலையில்லை யென்க. அக்கினியே! தேவர்கட்கு வைத்தியஞ் செய்யும் அசுவினிகள், எமது வேள்வித்தலைவனை, அவமிருத்துவினின்றும் பாதுகாப்பார்களாக என்பது.

பத்தாம் மந்திரம்

उद्वयं तमसस्परि पश्यन्तो ज्योतिरुत्तरम् । देवं देवत्रा सूर्यमगन्म
ज्योतिरुत्तमम् ॥

என்பது.

உரை.

இருளைப் போக்கும் தன்மையால் எல்லாவற்றிற்கு மேலாக ஒளியை, பார்க்கின்ற யாம், தேவர்களுக்குள் சூரியனாயிருக்கின்ற சிறந்த அக்கினியை அடைந்தோம் என்பது.

சாயணபாடியக் கருத்து

மேற்கூறிய மந்திரங்கள் பத்தையுங் கூறி, சமித்துக்களை வைப்பதை முடித்து விடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, சுருச்யாகார ஹோமஞ் செய்யும்போது மேல்வரும், அ.நு-8 மந்தி-13-னால் ஆகார ஹோமஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'वागसि प्राजापत्या' என்பது முதலிய மந்திரத்தால், ஓமத்தைப் போற்றுதலும் வேண்டும்.

ஏழாம் அநுவாகம் முடிந்தது.

---

## எட்டாம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

ऊर्ध्वाः प्रयाज याज्याः स्युर्द्वादशाऽप्रीति नामिकाः ।
हिर स्रुवाघार होमो वः प्राणेति द्वयं द्वयम् ॥ १ ॥
याज्यानुवाक्ये हि वपा पुरोडाश हविःषु ताः ।
यश्चिद्विकल्पितो मन्त्र इति विंशति रीरिताः ॥ २ ॥

ஆப்பிரிகைகள் என்னும் பசுப் பிரயாஜங்கள் பத்தையுஞ் செய்தல், ஆகார ஹோமஞ் செய்தல், வபை, புரோடாசம் அவிகள் என்பனவைகளுக்கு முறையே இரண்டிரண்டாக ஆறு யாஜ்யாநுவாக்கியங்கள். ஈற்றிற்கு விகல்பம் என்பது.

---

நான்காம் காண்டம் முதற் பிரபாடகம்

எட்டாம் அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகளுக்கு மேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

---

ஆப்பிரி என்னும் பிரயாஜ யாஜ்யங்களைக் கூறு மந்திரங்கள்.

ऊर्ध्वा अस्य समिधो भवन्त्यूर्ध्वा शुक्रा शोचीꣳष्यग्नेः ।
द्युमत्तमा सुप्रतीकस्य सूनोः । तनूनपादसुरो विश्ववेदा देवो देवेषु
देवः । पथ आनक्तिमध्वा घृतेन । मध्वा यज्ञन्नक्षसे प्रीणानो
नराशꣳसो अग्ने । सुकृद्देवस्सविता विश्ववारः । अच्छायमेति

शवंसा घृतेनेडानो वह्निर्नमसा । अग्नि॑ᳪ स्रुचो अध्वरेषु प्रयत्सु ।
स यक्षदस्य महिमानमग्नेस्सः ॥ १ ॥ ईमन्द्रासु प्रयसः । वसुश्चे-
तिष्ठो वसुधातमश्च । द्वारो देवीरन्वस्य विश्वे व्रतादन्ते अग्नेः ।
उरुव्यचसोधाम्ना पत्यमानाः । ते अस्ययोषणे दिव्येन योना
वुषासानक्ता । इमं यज्ञमवतामध्वरन्नः । दैव्या होता रावूर्ध्वमध्वर-
न्नोऽग्नेर्जिह्वामभिगृणीतम् । कृणु तन्नस्स्विष्टिम् । तिस्रो देवीर्बर्हि-
रेदᳪ सदन्त्विडा सरस्वती ॥ १ ॥ भारती । महीगृणाना । तन्नस्तु-
रीपमद्भुतं पुरुक्षुत्वष्टा सुवीरम् । रायस्पोषं विष्यतुनाभिमस्मे ।
वनस्पतेऽवसृजा रराणस्त्मना देवेषु । अग्निर्हव्यᳪ शमिता सूदयाति ।
अग्ने स्वाहा कृणु हि जातवेद इन्द्राय हव्यम् । विश्वे देवा हविरि-
दञ्जुषन्ताम् । हिरण्यगर्भस्समवर्ततोग्रे भूतस्य जातः पतिरेक
आसीत् । सदाधार पृथिवीन्द्याम् ॥ २ ॥ उतेमाङ्कस्मै देवाय हविषा
विधेम । यः प्राणतो निमिषतो महित्वैकइद्राजा जगतो
बभूव । य ईशे अस्यद्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा
विधेम । य आत्मदा बलदायस्य विश्व उपासते प्रशिषं यस्य
देवाः । यस्य छायाऽमृतं यस्य मृत्युः कस्मै देवाय हविषा विधेम ।
यस्ये मेहि मवन्तो महित्वा यस्य समुद्रᳪ रसया सह ॥ २ ॥ आहुः ।
यस्येमाः प्रदिशो यस्य बाहूकस्मै देवाय हविषा विधेम । यं क्रन्दसी
अवसातस्तभाने अभ्यैक्षेतां मनसा रेजमाने । यत्राधिसूर उदितौ-
व्येति कस्मै देवाय हविषा विधेम । येनद्यौ रुग्रा पृथिवीच दृढे
येन सुवः स्तभितं येन नाकः । यो अन्तरिक्षे रजसो विमानः

कस्मै देवाय हविषा विधेम । आपो ह्यन्महतीर्विश्वम् ॥ ४ ॥
आयन्दक्षन्दधाना जनयन्तीरग्निम् । ततो देवानान्निरवर्ततासुरेकः
कस्मै देवाय हविषा विधेम । यश्चिदापो महिना पर्यपश्यद्दक्षन्द-
धाना जनयन्तीरग्निम् । यो देवेष्वधिदेव एक आसीत्कस्मै देवाय
हविषा विधेम ॥ ५ ॥

ஏழாம் அநுவாகத்தில், அக்கினி சயனத்திற்கு அங்கமாகிய பசுவின் சமித்து மந்திரங்கள் கூறப்பட்டன. இதில், ஆப்பிரி என்னும், பிரயாஜ யாஜ்யாவாக்கியங்கள் கூறப்படுகின்றன. ஆப்பிரி = பிரியத்தை உண்டாக்குவன.

---

முதல் விநியோகம்

முதல் மந்திரம்

ऊर्ध्वा अस्य समिधो भवन्त्यूर्ध्वा शुक्रा शोचींष्यग्नेः ।
द्युमत्तमा सुप्रतीकस्य सूनोः ।

என்பது.

உரை.

எல்லாப் பிரயாஜை ஹோமங்கட்கும் அக்கினி ஒன்றே பல்வகை வடிவாய் ஒரு தேவதையாயிருக்கின்றது. அவற்றுள், இது 'சமித்' என்னும் அக்கினி விசேடமாம். சமித் = மிகப் பிரகாசித்தல். மலர்முகம் புத்திரனைப் போல் இன்பந்தரும் சமித் என்னும் இவ்வக்கினியின், மேனோக்கின்ற வடிவங்கள், எமது நலத்தின் பொருட்டு மேலே யெழுவனவாகுக. அங்ஙனம் மேலேயெழுவதால், வெண்மையான உத்தமச் சுவாலைகள் அதிசயமாய் உண்டாகுக என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

तनूनपादसुरो विश्ववेदा देवो देवेषु देवः । पथ आनक्ति मध्वा घृतेन ।

என்பது.

உரை.

பிராணனை யளிப்பதும், தேவத்தன்மையை யுடையதும் தேவர்களாலும் பூசிக்கப் பெறுவதுமாகிய தநூநபாத் (உடம்பைப் பாதுகாக்கின்றது) என்னும்

மந்திரங்கள்)

அக்கினி விசேடமானது, சுவர்க்கத்திற்குச் சாதனமான அவிகளை, இன்சுவை யுடைய நெய்யால் நனைக்குக என்பது. இம் மந்திரம், தநூநபாத் என்னும் அக்கினியை வழிபடும் பிருகு கண முதலானவர்களுக்கு மாத்திரம் உரியது.

மூன்றும் மந்திரம்

मध्वा यज्ञन्नक्षसे प्रीणानो नराशꣳसो अग्ने । सुकृद्देवस्सविता विश्ववारः ।

என்பது.

உரை

குறைவைப் போக்குவதும், விளக்க முடையதும், எம்மைக் கருமத்திற் செலுத்துவதும் பாவங்களனைத்தையும் போக்குவதுமாகிய நராசம்ஸ மென்னும் அக்கினியே! நீ, மனிதர்களாற் போற்றத்தக்க இன்சுவையுடைய நெய்யால் களிப்புற்று இந்த வேள்வியை யடைவிப்பாயாக என்பது, இம் மந்திரம் வசிஷ்டகணத்தார் முதலானோர்க்கு மாத்திரம் உண்டு.

நான்காம் மந்திரம்

अच्छायमेति शवसा घृतेनेडानो वह्निर्नमसा । अग्निꣳ स्रुचो अध्वरेषु प्रयत्सु ।

என்பது.

உரை

துதிப்பிரியமானதால் 'இடா' என்னும் பெயர்பூண்ட அக்கினி வன்மை யுடையதா யிருந்து வேள்வியை யடைவதற்குச் செல்கின்றது. அத்தகைய அக்கினியை வேள்விகளில் அடைந்தபோது சுருவிலுள்ள நெய்யால் வழிபாடு செய்வோம் என்பது.

ஐந்தாம் மந்திரம்.

स यक्षदस्य महिमानमग्नेस्स ईमन्द्रासु प्रयसः । वसुश्चेतिष्ठो वसुधातमश्च ।

என்பது.

உரை

'பர்ஹி' என்னும் அக்கினி விசேடம். இந்தப் பொது அக்கினியின் மகிமையைப் பூசை செய்க, பர்ஹி என்னும் அக்கினி யிருந்த வழிபாட்டோடு கூடியதாம். மற்றும், இவ்வக்கினியே மக்களை வாழ்விப்பதும் சிறப்பாக வுணர்வதும், எசமானன் பொருட்டு தனத்தை வைத்திருப்பதுமாம் என்பது.

ஆறும் மந்திரம்

द्वारो देवीरन्वस्य विश्वे व्रता ददन्ते अग्नेः । उरुव्यच सोधाम्ना पत्यमानाः ।

என்பது.

உரை

விரிந்த ஒளியையுடைய, துவாரம் என்னும் பெண் வடிவையுடைய ஒரு அக்கினி விசேடமானது முதலில் அக்கினியின் விரதத்தை ஆசரிக்கின்றது. பிறகு அதைத் தழுவி அவ்வக்கினிக்குரிய கருமங்கள் அவிகளாற் செய்யப் படுகின்றன என்பது.

ஏழாம் மந்திரம்

ते अस्य योषणे दिव्येन योना वुषासा नक्ता । इमं यज्ञमवतामध्वरन्नः ।

என்பது.

உரை.

தம்முள் ஒன்றற்கொன்று கூடியுள்ளவைகளும், விண்ணுலகிலுள்ள திருமேனிபோன்ற திருமேனிகளையுடையவைகளுமான உஷாக்கால அக்கினியும், நக்தா என்னும் இராத்திரி கால அக்கினியும், எம்முடைய இந்த வேள்வியை இவ்விடத்தில் கொலையின்றிப் பாதுகாப்பனவாகுக என்பது.

எட்டாம் மந்திரம்.

दैव्या होता रावूर्ध्वं मध्वरन्नोऽग्नेर्जिह्वा मभिगृणीतम् । कृणु तन्नस्स्विष्टिम् ।

என்பது.

உரை

தெய்வீகமான ஹோதாக்களென்னும் இரண்டு அக்கினிகளே ! நீங்கள், சுவாலையாகிற நாக்கைக் குறித்து மேலெழும்பும் எம்முடைய இந்த வேள்வியை பிரகடனஞ் செய்துவைப்பீர்களாக. மற்றும், குறையை நீக்கி இவ் வேள்வியை இனிது செய்வீர்களாக என்பது.

ஒன்பதாம் மந்திரம்.

तिस्रो देवीर्बर्हिरेदं सदन्त्विडा सरस्वती । भारती महीगृणाना ।

என்பது.

மந்திரங்கள்)

உரை.

இடா, சரசுவதி, பாரதி என்னும் பெயர்பூண்ட அக்கினி மூர்த்திகள் மூவர்களும், இந்த வேள்வியை யடைவார்களாக. வந்த ஒவ்வொருவரும் வேள்வியை மிகப் பிரகடனஞ் செய்வார்களாக என்பது.

---

பத்தாம் மந்திரம்.

तन्नस्तुरीपमद्भुतं पुरुक्षुत्वष्टा सुवीरम्। रायस्पोषं विष्यतु नाभिमस्मे।

என்பது.

உரை.

'துவஷ்டா' என்னும் ஒரு அக்கினி விசேடமானது, விரைவில் அடையத் தக்கதும், சோ, குதிரை முதலிய பல்வகையானதால் அதிசய முடையதும், பலராற் போற்றத்தக்கதும், வீரமாகிய குழந்தையை யுடையதும், வண்டியின் ஆரக்கால்போல் சுற்றத்தார்கட்குப் பற்றுக்கோடா யுள்ளதுமாகிய ஐசுவரி யத்தை எமக்கு அளிக்குக என்பது.

---

பதினோராம் மந்திரம்.

वनस्पतेऽवसृजा रराणस्त्मना देवेषु। अग्निर्हव्यꣳ शमिता सूदयाति।

என்பது.

உரை.

வனஸ்பதி என்னும் அக்கினி விசேடமே! நீ, ஈகையுடையதாயிருந்து எம்மால் வேட்கப்படுகின்றவைகளுள் கொடுத்த அவியை தானகவே உண் டாக்குவாயாக. எம்மாற் போற்றப்பெற்ற இவ்வக்கினி, பாவத்தைப் போக்கு வதாய் எமது அவிகளைத் தேவர்களுக்கு உரித்தாக்குக என்பது.

---

பன்னிரண்டாம் மந்திரம்.

अग्ने स्वाहा कृणुहि जातवेद इन्द्राय हव्यम्। विश्वे देवाहविरिदञ्जुषन्ताम्।

என்பது.

உரை.

சுவாஹாகாரத்தை அபிமானிக்கும் சாதவேதம் என்னும் அக்கினி, இந்திரன் பொருட்டு இந்த அவியை சுவாகாகாரஞ் செய்க. எல்லாத் தேவர்க ளும் அவ்வக்காலத்தில் யாம் கொடுக்கும் அவியை அருந்துவார்களாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

*மேற்கூறிய இப் பன்னிரண்டு மந்திரங்களாலும் பதினொரு பிரயாஜை களைச் செய்தல் வேண்டுமென்பதாம்.*

*பிரயாஜைகள் பதினொன்று இருக்க, மந்திரங்கள் பன்னிரண்டானது எவ்வாறெனின்? இரண்டாவது மந்திரத்தையும் மூன்றாவது மந்திரத்தையும் ஒவ்வொரு குலத்தார்கள் ஏற்றுக் கொள்ளுதலால் பதினொன்று என்பது பொருத்தமாம் என்பதை யுணர்க.*

---

### இரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

**हिरण्यगर्भस्समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् । सदाधार पृथिवीन्द्यामुते माङ्कस्मै देवाय हविषा विधेम ।**

என்பது.

### உரை

*பிரமாண்டத்தில் கருப்பமாய் இருத்தலின் பிரமாவுக்கு இரணிய கருப்ப ரென்று பெயர். அத்தகைய பிரமர் சிருட்டிக்கு முன் தேகத்தோடு கூடின வராயினர். அப்பிரமரே, உண்டாகிய உலகங்களனைத்திற்கும் இறைவராவார். அவரே, வானையும் மண்ணையுந் தாங்குகின்றவர். ஆகாரமென்னும் அவியால் அவருக்கு வழிபாடு செய்கின்றோம் என்பது.*

### சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால் ஆகாரஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம். இது, முன் ஆகார ஹோமத்திற்கு விநியோகப்பட்டது.*

*இனி பிரசாபத்திய பசுவிற்கே யாஜ்யாநு வாக்கியங்கள் உரியன. அவற்றுள்ளும் வபைக்குக்கூற வேண்டியவைகளுள், வேட்போன், '*प्रजापतये छागस्य वपाया मेदसोऽनुब्रूहि*' என்று ஏவிய பிறகு மைத்திராவருணன் கூற வேண்டியவைகளாம் என்பதை யுணர்க.*

---

### மூன்றாம் விநியோகம்.

முதலாவது புரோநுவாக்கிய மந்திரம்.

**यः प्राणतो निमिषतो महित्वैकइद्राजा जगतो बभूव । यईशे अस्य द्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा विधेम ।**

என்பது.

உரை.

பிரசாபதி ஒருவரே, கண் திறக்கும் உயிர்களனைத்திற்கும் தமது மகிமையால் அரசனாயிருக்கின்றார்: இதுபற்றியே, இரு கால்களாயுடைய மக்கட்கும், நான்கு கால்களை யுடைய விலங்குகட்கும் நியமஞ் செய்வதில் அவர் வல்லுநர். அத்தகைய தேவருக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

இரண்டாவது யாஜ்யா மந்திரம்.

य आतमदा बलदा यस्य विश्व उपासते प्रशिषं यस्य देवाः । यस्य
छायाऽमृतं यस्य मृत्युः कस्मै देवाय हविषा विधेम ।

என்பது.

உரை.

உடம்பினுள் சீவனும் ஆன்மாவைக் கொடுக்கின்றவனும், வன்மையைக் கொடுக்கின்றவனும், எல்லாராலும் மீறப்படாத ஆணையை யுடையவனும், முத்தியை நிழலைப் போல் சுவாதீனமாகவுடையவனும், உயிர்களின் இறப்பையும நிழல் போல் சுவாதீனமாக இருக்கப் பெற்றவனுமாகிய பிரசாபதி தேவனுக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

புரோடாச யாஜ்யா வாக்கியங்களுள்
முதல் மந்திரம்

यस्ये मेहि मवन्तो महित्वा यस्य समुद्रं रसया सहा आहुः ।
यस्ये माः प्रदिशो यस्य बाहूकस्मै देवाय हविषा विधेम ।

என்பது.

உரை.

இமயமலை முதலிய மலைகளனைத்தையும் சுவாதீனமாக வுடையவரும், பூமியுடன் இருக்கும் கடலையும் சுவாதீனமாக வுடையவரும், காணப்படும் திசைகளைச் சுவாதீனமாகவுடையவரும், இரண்டு தோள்களையும் கர்மா கருமங்களாக வுடையவருமாகிய பிரஜாபதி தேவருக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

यं क्रन्दसी अवसातस्तभाने अभ्यैक्षेतां मनसा रेजमाने । यत्राधिसूर
उदितौव्येति कस्मै देवाय हविषा विधेम । என்பது.

உரை

தேவர்களும், மனிதர்களும் நிலைத்தற் பொருட்டு திரவியவைகளான வானும் மண்ணும், தம்மைப் பாதுகாக்க வேண்டுமென்று நியமித்தலால் கேட்டுக் கொள்ளப் பெற்றவரும், சூரியன் உதிப்பதற்கு ஆதாரமாயிருக்கின்றவருமாகிய பிரமாவுக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

அவிகளின் யாஜ்யா வாக்கியங்களுள்

முதல் மந்திரம்

येनद्यौरुग्रा पृथिवीच दृढे येन सुवस्स्तभितं येन नाकः। यो अन्तरिक्षे रजसो विमानः कस्मै देवाय हविषा विधेम।

என்பது.

உரை

பாவிகளால் அடைதற்குரிய வானையும் மண்ணையும் திரவியவரும், புண்ணியஞ் செய்தவர்கட்குச் சுவர்க்க சுகத்தை நியமித்தவரும், துன்பமின்றிய முத்தியை ஞானிகட்கு நியமித்தவரும், எட்ச கந்தருவர் முதலானோருக்கு விமானங்களை யுண்டாக்கியவருமாகிய பிராசபதி தேவருக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

இரண்டாவது மந்திரம்

आपोह यन्महतीर्विश्वायन्दक्षन्दधाना जनयन्तीरग्निम्। ततो देवानाग्निरवर्ततासुरेकः कस्मै देवाय हविषा विधेम।

என்பது.

உரை

நீரை உலகமாய்ச் செய்தவரும், அக்கினி சயனத்தில் வல்லுநராகிய வேள்வித்தலைவனை உண்டாக்கியவரும், சயனஞ் செய்யும் அக்கினியை உண்டாக்கியவரும், எல்லாத் தேவர்களும் வாழ்தற்குரிய பிராண வடிவருமாகிய பிரசாபதிக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

---

இதற்கே விகல்ப மந்திரம்.

यश्चिदापो महिना पर्यपश्यद्दक्षन्दधाना जनयन्तीरग्निम्। यो देवेष्वधि देव एक आसीत्कस्मै देवाय हविषा विधेम।

என்பது.

மந்திரங்கள்)

உரை.

அக்கினியை உண்டாக்கும் நீரை, தனது மகிமையால் உலகமாக்குவதன் பொருட்டு நோக்கியவரும், தேவர்கட்குள் மிகச் சிறந்தவருமாகிய பிரசாபதி தேவருக்கு அவியால் வழிபாடு செய்கின்றோம் என்பது.

எட்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அநுவாகத்தின் அநுபந்தம்.

பிராசாபத்திய பசுபந்த யாகம் செய்யப்பட்ட தக்ஷிணையாக ஆட்டினைக் கொடுத்தல் வேண்டும்.

மற்றும், ' वायव्यम् (प्राजापत्य) द्वादशकपालं ' அதாவது பிரசாபதி தேவதைக்கு பன்னிரண்டு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்தல் முதல் ' ऐन्द्रप्राण: ' என்பது வரையில் செய்து கொண்டு, ஆட்டுக் கடாவின் தலையை வெட்டி அதில் மண்ணைப் பூசி வைத்து விடல் வேண்டும். ஏனைய கிரியைகளையும் பசுபந்தத்திற் செய்ததுபோலவே செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

பசு முடிந்ததும், பிரவர்க்யம், சம்பரணஞ் செய்தல் அக்கினிஷ்டோமத்திற் கூறியவாறேயாம்.

பிறகு, நாந்தி செய்தல் வேண்டும். மீண்டும், ' आज्यं पशव: ' என்பது முதலியவைகளைச் சோமயாகத்திற்கு செய்தபடியே செய்தல் வேண்டும்.

இனி, (1) अग्निं वैश्वानरं द्वादशकपालं, (2) आमा वैष्णव मेकादशकपालं, (3) अदित्यै चरुम् , அதாவது, வைசுவாநரனுக்கு மண் அகல்கள் பன்னிரண்டு வைத்துப் புரோடாசஞ் செய்தும், அக்கினிக்கும் விஷ்ணுவிற்கும் பதினொரு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்தும், அதிதி தேவதைக்குப் பொங்கல் செய்தும் நிகழ்ணிய இஷ்டிகளை முடித்து விட்டு, பிராக்வம்சம் அதாவது கிழக்கு சாலியாக மூங்கில்களைப் போட்டுக் கட்டும் கொட்டகை போடுதல் முதல் தீக்ஷாகுதி வரை சோமயாகத்திற்குச் சொல்லியவாறே செய்து கொள்ளல் வேண்டும். அதாவது ' आकूत्यै प्रयुजे ' என்பது முதலான ஐந்து ஆகுதிகளையுஞ் செய்து கொள்ளல் வேண்டும். இனி மேல்வரும் அநுவாகத்தால் அக்கினியை உண்டாக்கல் வேண்டும் என்க.

---

ஒன்பதாம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

आकूतिं सप्तभिर्दीक्षाहुतिर्मास्विति च हूयात् ।
पूर्वाग्नौ प्रणक्योखां मित्राङ्गारैः समिध्यते ॥ १ ॥
द्रप्सः क्रमुकमाधत्ते परवैकङ्कतीं परम् ।
शमीमयीं सीदजातं तिसृभिश्चोपतिष्ठते ॥ २ ॥
नवमेत्वनुवाकेऽस्मिन्मन्त्राः षोडश वर्णिताः ।

தீக்ஷாகுதிகளைச் செய்தல், உகாவை ஆகவனீயத் தீயில் வைத்தல், நெருப்பைச் சேர்ந்து வைத்தல், இறைப்புளித் தூள் முஞ்சம் புல்களை நெய்யில் தோய்த்து வைத்தல், சொத்தைக்காய் குச்சிலை வைத்தல், வன்னிக் குச்சிலை வைத்தல், எழுந்த தீயைப் போற்றுதல்.

---

நான்காங் காண்டம் முதற் பிரபாடகம்

ஒன்பதாம் அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகளுக்கு மேல் இருபது பதங்களைக் கொண்டது.

---

உகா, என்னும் மண் தொட்டியில் அக்கினியை யுண்டாக்குதற்குரிய மந்திரங்கள்.

आकूतिमग्निं प्रयुज॒ꣳ स्वाहा मनो मेधामग्निं प्रयुज॒ꣳ स्वाहा चित्तं विज्ञातमग्निं प्रयुज॒ꣳ स्वाहा वाचो विधृतिमग्निं प्रयुज॒ꣳ स्वाहा प्रजापतये मनवे स्वाहाऽग्नये वैश्वानराय स्वाहा विश्वे देवस्य नेतुर्मर्तो वृणीत सख्यꣳ विश्वे राय इषुध्यसि द्युम्नं वृणीत पुष्यसे स्वाहा मा सु भित्था मा सु रिषो दृꣳहस्व वीडयस्व सु । अम्ब धृष्णु वीरयस्व ॥ १ ॥ अग्निश्चेदं करिष्यथः । दृꣳहस्व देवि पृथिवि स्वस्तय आसुरी माया स्वधया कृताऽसि । जुष्टं देवानामिदमस्तु हव्यमरिष्टा त्वमुदिहि यज्ञे अस्मिन् । मित्रैता मुखान्तपैषामा

(தீயுண்டாக்கல்)

भेदि। एतां ते परिददाम्यभित्यै। ह्वन्नः स्मापरांसुतिः प्रत्नो होता वरेण्यः। सहसस्पुत्रो अद्भुतः। परस्या अधिसंवतोऽवराँ अभ्या ॥ २ ॥ तर। यत्राह मस्मिताँ अत्र। परमस्याः परावतो रोहिदश्व इहागहि। पुरीष्यः पुरुप्रियोऽग्ने त्वं तरामृधः। सीद त्वं मातुरस्या उपस्थे विश्वान्यग्ने वयुनानि विद्वान्। मैनामर्चिषा मा तपसाऽभिशूशुचोऽन्तरस्याँ शुक्रज्योतिर्विभाहि। अन्तरग्ने रुचा त्वमुखायै सदनेस्वे। तस्यास्त्वँ हरसा तपञ्जातवेदश्शिवो भव। शिवो भूत्वा मह्यमग्नेऽथो सीदशिवस्त्वम्। शिवाः कृत्वा दिशः सर्वाः स्वाँ योनिमिहाऽसदः ॥ ३ ॥

எட்டாம் அநுவாகத்தில், ஆப்பிரியங்கள் என்னும் யாஜ்யாநுவாக்கியங்கள் கூறப்பட்டன. உகாவில் தீயுண்டாக்கல், இதில் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

ஏழு மந்திரங்களால் ஆறதுதிகள் செய்வதில்

முதல் மந்திராகுதி

आकूतिमग्निं प्रयुजँ स्वाहा।

என்பது

உரை

அநுட்டானத்தைப் பற்றிய எமது சங்கற்பத்தை உண்டாக்கி வைக்கும் அக்கினியைக் குறித்து இவ்வாகுதி அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

வேட்போன், இம் மந்திரத்தால், முதலாவது ஆகுதியைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

வேள்விக்கிலேவன், 'अग्नय इदं' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

இரண்டாவது மந்திராகுதி.

मनोमेधामग्निं प्रयुज॰ स्वाहा ।

என்பது.

உரை

அநுட்டிக்கத்தக்கவைகளை நினைக்கும் மனம், நினைத்தவைகளை உள்ளத்தில் வைக்கும் வல்லமைத் தன்மை எல்லாம் இவ்விரண்டையும் செய்விக்கும் அக்கினியைக் குறித்து இவ்வாகுதி அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் இரண்டாமாகுதியைச் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ்செய்தல் வேண்டும்.

மூன்றும் மந்திராகுதி.

चित्तं विज्ञातमग्निं प्रयुज॰ स्वाहा ।

என்பது.

உரை

சித்தம் அறியாத கருமாநுட்டானத்தை அறியவும், அறிந்து அநுட்டிக்கவும் செய்விக்கும் அக்கினிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மூன்று மாகுதியைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய்தல்வேண்டும்.

நான்காம் மந்திராகுதி.

वाचो विधृतिमग्निं प्रयुज॰ स्वाहा ।

என்பது.

உரை

மந்திரத்தை ஓதுவதில் வாக்கிற்கு மிக வல்லமைத்தன்மையைச் செய்விக்கும் அக்கினிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், நான்காமாகுதியைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'அக்னய இதம்' என்று தியாகஞ் செய்தல் வேண்டும்.

தீயுண்டாக்கல்)

ஐந்தாவது மந்திராகுதி.

प्रजापतये मनवे स्वाहा ।

என்பது.

உரை

மனிதர்களை யுண்டாக்கும் பிரசாபதி தேவதைக்கு இது அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.

வேள்வித்தலைவன், 'பிரசாபதய இதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

---

ஆறுவது மந்திராகுதி

अग्नये वैश्वानराय स्वाहा ।

என்பது.

உரை

எல்லா மக்கட்கும் அநுக்கிரகஞ் செய்யும் வைசுவாநர அக்கினிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஆறுவது ஆகுதியைச் செய்தல் வேண்டுமென்பதாம். வேள்வித்தலைவன், 'அக்னயே வைசுவாநராயேதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

---

ஏழாவது மந்திராகுதி.

विश्वेदेवस्य नेतुर्मर्तो वृणीतसख्यं विश्वेश्वराय इपुष्यसि द्युम्नं वृणीत पुष्यसे स्वाहा ।

என்பது.

உரை

உலகத்தை அடக்கியாளும் தேவனுடைய அநுக்கிரகத்தை, வேள்வித் தலைவனாகிய மனிதன் வேண்டுகின்றான். உலகனத்திற்கு நீ இறைவனாயிருக்கின்றாய். அதியால் புஷ்டியடைகின்றாய். வேள்வியைக் காப்பாற்றுதற் பொருட்டுத் தனத்தை வேண்டுகின்றான். இந்த அவி உனக்கு அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் சுருவில் பன்னிருமுறை நெய் யெடுத்துக்கொண்டு ஏழாமாகுதியைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

வேள்வித்தலைவன், 'यतं प्राण' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும்.

மற்றும், 'कालमने सवित्र इदम्' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

சண்டுச் சூத்திரப்படி, கருமான் கோலால் வேள்வித் தலைவனுக்குத் தீட்சை செய்து வைப்பது முதற் கொண்டு, விரல்களை மடக்கிக் கொள்ளும் வரை சோமயாகத்திற் செய்தது போன்றே செய்தல் வேண்டும்.

பிறகு, சணல் பஞ்சு முதலிய மெல்லிய தூசுக்களை உகாவில் நிறைத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

இரண்டாம் விநியோகம்.

உகாவைத் தீயில் வைத்தல்

முதல் மந்திரம்

मा सु भित्थामासुरिपो दृꣳहस्व वीडयस्व सु । अम्वधृष्णु वीरयस्व अग्निश्चेदं करिष्यथः ।

என்பது.

உரை

உகாவே! (மண் தொட்டியே!) நீ, இரண்டாய் உடைந்து போகாதே மற்றும், கிழிப்போய் விடாதே. உடையாமலிருக்க உறுதி கொள்வாயாக. உடையாதிருக்க, தனது அங்கங்களை வசப்படுத்திக் கொள்வாயாக. தைரியமுடையாளே! நீ, அன்னை போல், வீரமாந் தன்மையுடன் இதில் இருப்பாயாக. அக்கினியும் நீயும் சேர்ந்து எமது கருமத்தைச் செய்வீர்களாக என்பது.

---

இரண்டாவது மந்திரம்

दृꣳहस्व देवि पृथिवि स्वस्तय आसुरी माया स्वधया कृताऽसि ।
जुष्टन्देवानामिदमस्तु हव्यमरिष्टा त्वमुदिहि यज्ञे अस्मिन् ।

என்பது.

உரை

மண்வடிவாகிய உகா தேவியே! நீ, எசமானன் பொருட்டு உடையாதிருப்பாயாக. உணவுப் பொருள் நிமித்தமாக, ஆசுரிமாயா போல் இரண்டு மூலைகளுடன் நீ உண்டாயிருக்கின்றாய்; உன்னிடத்திலிருந்து உண்டாக்கப்பட்ட அவிகள் தேவர்கட்குப் பிரியமாயிருக்கின்றன. நீ; ஒருவராலேனும் துன்புறுத்தப்படாதவளாய் இவ் வேள்வியில் எழுந்திருப்பாயாக என்பது.

தீயுண்டாக்கல்)

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும், உகாவை ஆகவனீயத் தீயின் மீது எடுத்து வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

நெருப்பைத் தள்ளிவிடல்

மந்திரம் :

मित्रैता मुखांतपैयामाभेदि । एतां ते परिददाम्यभित्त्यै ।

என்பது.

உரை

மித்திர தேவதையே! நீ, இந்த உகாவைச் சூடாக்குவாயாக. இது உடையாமலிருக்குக. உடையாமலிருத்தற் பொருட்டு இதை உனது கையில் கொடுக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உகாவின் நாற்புறமும் வலமாக நெருப்பைத் தள்ளி வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

இழைப்புளிச் சிராயையும் முஞ்சிப்புல்லையும் போடுதல்

மந்திரம் :

द्रन्नः सर्पिरासुतिः प्रत्नोहोता वरेण्यः । सहसस्पुत्रो अद्भुतः ।

என்பது.

உரை

வனத்திலுள்ள தருவையே அன்னமாக வுடையதும், நெய்யாகாரத்தை யுடையதும், பழைமையானதும், தேவர்களை யழைப்பதும், போற்றத்தக்கதும், வன்மையினின் புதல்வனும், இடைவிடாமல் பெருகுகின்றவன். அதிசய வடிவுடையதுமானது. அதாவது இப்போது இதில் பற்றிக் கொள்ளும் தீ யென்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இழைப்புளித்தூளையும், முஞ்சம் புல்லையும் நெய்யிற் றோய்த்து உகாவிற்குட் போடல் வேண்டு மென்பதாம்.

இவ்வாறு செய்யவே, தீயின் சூட்டு மிகுதியால் உகைக்குள்ளிருக்கும் தாள் முதலியவைகளுள் தானாகவே தீயுண்டாகிவிடும். உடனே முன்னுள்ள ஆகவனீயத் தீயை அணைத்துவிடல் வேண்டும்.

---

ஐந்தாம் விநியோகம்

சோத்தைக் கிளாச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

परस्या अधिसंवतोऽवराꣳ अभ्यातर । यत्राहमस्मिताꣳ अव ।

என்பது.

உரை

தேவாராதனைக்கிரியைகளுட் சிறந்த வேள்விக் கருமத்திற்குத் தலைவனாகிய அக்கினியே! நீ, மிகத் தாழ்ந்த எம்மைக் குறித்து இங்கு வந்து துன்பத்தைப் போக்குவாயாக. எமது சுற்றத்தாரையும் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உண்டாகிய தீயில் சொத்தைக் கிளாமரச் சமித்தை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்.

வன்னிச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

परमस्याः परावतो रोहिदश्व इहागहि । पुरीष्यः पुरुप्रियोऽग्ने त्वन्तरामृधः ।

என்பது.

உரை

வெண்மைநிறக் குதிரையை யுடையதும், உகாவாகிய மண்ணிற்கு உரியதும், வேள்வித்தலைவனுக்கு மிகப் பிரியமுடையதுமாகிய நீ, தூரத்திலிருந்து இங்கு வருவாயாக. வந்து பகைவரை நீக்கி வைப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வன்னிச் சமித்தை அத் தீயில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

தீயுண்டாக்கல்)

ஏழாம் விநியோகம்.

உண்டாகிய தீயைப் போற்றல்

முதல் மந்திரம்.

सीदत्वं मातुरस्या उपस्थे विश्वान्यग्ने वयुनानि विद्वान् । मैनामर्चिषामा तपसाऽभिशू शुचोऽन्तरस्याꣳ शुक्रज्योतिर्विभाहि ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, உன்னுடைய சுவாலையின் சூடால், ஞான வுபாயங்களனைத்தையும் சூடாக்கி விடாதே, மற்றும், கொளுத்தி விடாதே. மற்றோ, மாதாவைப் போன்ற இந்த உகாவில் ஒளியுடன் விளங்குவாயாக என்பது.

---

இரண்டாவது மந்திரம்.

अन्तरग्ने रुचा त्व सुखायै सदने स्वे । तस्यास्त्वꣳ हरसा तपञ्जातवेदः शिवो भव ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, உகாவின் நடுவாகிய தனதிடத்தில் ஒளியுடன் இருப்பாயாக. தோன்றியவைகளை யுணர்வோய்! ஒளிர்வதாகிய நீ, அந்த உகாவிற்குச் சுகங் கொடுப்போனாகுதி என்பது.

---

மூன்றும் மந்திரம்

शिवो भूत्वा मह्यमग्नेऽथो सीदशिवस्त्वम् । शिवाः कृत्वा दिशस्सर्वाः स्वां योनि मिहासदः ॥

என்பது.

உரை.

அக்கினியே! நீ, எம்பொருட்டுச் சாந்தவடிவாய், மங்கலமாகி, அதின்வருக்கும் பொறுமையுடையதாயிருப்பாய், எல்லாத்திசைகளையும் சாந்தமாக்கிவிட்டு உன்னிடத்தில் அதாவது உகாவில் வந்து உட்கார்ந்து கொள்வாயாக என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம்மூன்று மந்திரங்களாலும், உகாவில் உண்டாகி யிருக்கின்ற அக்கினியைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

ஒன்பதாம் அநுவாகம் முற்றிற்று.

## பத்தாம் அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

यदग्ने पञ्चभिः काष्टं वह्नावौदुम्बरं क्षिपेत् ।
दꣳष्ट्राऽऽश्वत्थीमादधाति येज वैकङ्कतीं तथा ॥ १ ॥
योऽस्मभ्यं शमीकाष्ठं संशितद्वय वाचनम् ।
दशा रुक्मं निजे कण्ठे बद्ध्वा विश्वेति मन्त्रतः ॥ २ ॥
साग्न्युखा शिक्यपाशं तु स्वास्यत्र प्रतिमुञ्चते ।
नक्तोऽजिनं चोपरिष्टात्सुपर्णोऽग्निमवेक्षते ॥ ३ ॥
सुपर्णः साग्निरुत्तिष्ठेन्मन्त्राः पञ्चदशेरिताः ।

*ஐந்து அத்திச்சுப்பில்களைத் தீயில் வைத்தல், அரசஞ்சுப்பிலை வைத்தல், வன்னிச்சமித்தை வைத்தல், வெள்வித்தலைவன் ஓதல், பொன்தகட்டைக் கட்டிக் கொள்ளல், உகாவைக் கழுத்திற் கட்டிக் கொள்ளல், மான்தோலைக் கட்டிக் கொள்ளல், அக்கினியைப் பார்த்தல், தீயை எடுத்துக்கொண்டு எழுந்திருத்தல் என்பது.*



## நான்காங் காண்டம் முதற் பிரபாடகம்

## பத்தாம் அநுவாகம்

நால்கு பஞ்சாதிகட்கு மேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.



### உகாத் தீயை கழுத்திற் கட்டிக் கொள்ளுதற்குரிய மந்திரங்கள்.

यदग्ने यानि कानि चाऽऽते दारूणि दध्मसि । तदस्तु तुभ्य-
मिद्घृतं तज्जुषस्व यविष्ठ्य । यदत्त्युपजिह्विका यद्वम्रो अतिसर्पति ।
सर्वं तदस्तु ते घृतन्तज्जुषस्व यविष्ठ्य । रात्रिꣳरात्रिमप्रयावं भरन्तो-
ऽश्वायेव तिष्ठते घासमस्मै । रायस्पोषेण समिषा मदन्तोऽग्ने मा ते
प्रतिवेशा रिषाम । नाभा ॥ १ ॥ पृथिव्यास्समिधानमग्निꣳ राय-

(… தரித்துக் கொள்ளல்)

स्पोषाय बृहते हवामहे । इदं मदं बृहदुक्थं यजत्रञ्जेतारमग्निं पृत-
नासु सासहिम् । यास्सेना अभीत्वरीराव्याधिनीरुगणा उत । ये-
स्तेना येच तस्करास्ताꣳस्ते अग्नेऽपि दधाम्यास्ये । दꣳष्ट्राभ्यां मलि-
म्लूञ्जम्भ्यैस्तस्कराꣳ उत । हनूभ्याꣳस्तेनान् भगवस्ताꣳस्त्वं खाद
सुखादितान् । ये जनेषु मलिम्लवस्स्तेनासस्तस्करावने । ये ॥ २ ॥
कक्षेष्वघायवस्ताꣳस्ते दधामि जम्भयोः । यो अस्मभ्यमरातीयाद्यश्च
नोद्वेषते जनः । निन्दाद्यो अस्मान्दिप्साच्च सर्वन्तं मस्मसा कुरु ।
सꣳशितं मे ब्रह्म सꣳशितं वीर्यं बलम् । सꣳशितं क्षत्रजिष्णु यस्या-
हमस्मि । पुरोहितः । उदेषां बाहू अतिरमुद्वर्च उदूबलम् । क्षिणोमि
ब्रह्मणाऽमित्रानुन्नयामि ॥ ३ ॥ स्वाꣳ अहम् । दृशानो रुक्म उर्व्या
व्यद्यौद्दुर्मर्षमायुश्श्रिये रुचानः । अग्निरमृतो अभवद्वयोभिर्यदेन-
न्द्यौरजनयत्सुरेताः । विश्वारूपाणि प्रतिमुञ्चते कविः प्रासावीद्भद्रं
द्विपदे चतुष्पदे । वि नाकमख्यत्सविता वरेण्योऽनुप्रयाणमुषसो विरा-
जति । नक्तोषासा समनसा विरूपे धापयेते शिशुमेकꣳ समीची ।
द्यावाक्षामा रुक्मः ॥ ४ ॥ अन्तर्विभाति देवा अग्निन्धारयन्द्रवि-
णोदाः । सुपर्णोऽसि गरुत्मान् त्रिवृत्ते शिरो गायत्रञ्चक्षुस्स्तोम
आत्मा साम ते तनूर्वामदेव्यं बृहद्रथन्तरे पक्षौ यज्ञायज्ञियं पुच्छ-
ञ्छन्दाꣳस्यङ्गानि धिष्णियाश्शफा यजूꣳषि नाम । सुपर्णोऽसि
गरुत्मान्दिवङ्गच्छसुवः पत ॥ ५ ॥

ஒன்பதாம் அநுவாகத்தில், அக்கினியை யுண்டாக்குதல் கூறப்பட்டது. இதில், அக்கினியைக் கழுத்தில் தரித்துக் கொள்ளுதல் கூறப்படுகின்றது.

---

(தீயைத்

முதல் விநியோகம்.

அத்திமாச்சமித்துக்களைத் தீயில் வைக்கு மந்திரங்களுள்.

முதல் மந்திரம்.

यदग्ने यानि कानि चाऽऽते दारूणि दध्मसि तदस्तु तुभ्यमिद्घृतन्तज्जुषस्व यविष्ठ्य ।

என்பது.

உரை.

*அக்கினியே! உன் பொருட்டு, காடுகளில் தானகவே விழுந்த எம் மாக் குச்சிகள் கொண்டு வந்து வைத்திருக்கின்றேமே. அவைகளெல்லாம் நெய் போல் பிரிய முடையனவாகுக. கட்டிளமைய! அக் குச்சுகளை யருந்துவாயாக என்பது.*

இரண்டாம் மந்திரம்.

यदत्त्युपजिह्विकायद्वम्रो अतिसर्पति । सर्वन्तदस्तुते घृतन्तज्जुषस्व यविष्ठ्य ।

என்பது.

உரை.

*அக்கினியே! உனது பெரிய நாக்கும் சிறிய நாக்குகளும் எந்தப் பெரிய விறகு சிறிய குச்சுகளின் அவயவங்களிலுள்ள சாரத்தை யருந்துகின்றனவோ, அத்தகைய குச்சிகளனைத்தையும் என்பது விசேடம் ஏனையவை முன்போல் என்பது.*

மூன்றும் மந்திரம்

रात्रिं॑ रात्रि मप्रवायं भरन्तोऽश्वायेव तिष्ठतेघासमस्मै । रायस्पोषेण समिषा मदन्तोऽग्नेमा ते प्रतिवेशा रिषाम ।

என்பது.

உரை.

*அக்கினியே! உன்னை யடைந்த யாம், மிகுந்த தனத்தாலும் உணவுப் பொருளாலும் களிப்புடையவராய், இரவு பகல், குதிரை லாயத்திலுள்ள சிறந்த குதிரைக்கு தினந்தோறும் புல் போடுவது போல், உனக்குச் சமித்துக் களைத் தேடிப் போட்டுக்கொண்டு துன்புறுமலிருப்போமாக என்பது.*

தரித்துக் கொள்ளல்)

நான்காம் மந்திரம்

नाभा पृथिव्यास्समिधानमग्निँ रायस्पोषाय बृहते हवामहे । इरं मदं बृहदुक्थं यजत्रञ्जेतारमग्निं पृतनासु सासहिम् ।

என்பது.

உரை

மண் தொட்டியின் நடுவில் விளங்குகின்றதும், சமித்தாகிய அன்னத்தாற் களிப்புறுவதும், மிகுந்த துதிகளை யுடையதும், வேள்விக்குக் காரணமும், அசுரர்களை வெற்றி பெறுவதும், போரில் முன் செல்வதும், எமது குற்றத்தைப் பொறுத்துக் கொள்வதுமாகிய அக்கினியை, தனத்தின் பொருட்டு அழைக்கின்றோம் என்பது.

---

ஐந்தாம் மந்திரம்

यास्सेना अभीत्वरीराव्याधिनी रुगणा उत । ये स्तेनायेच तस्करा-स्ताँ स्ते अग्नेऽपि दधास्यास्ये ।

என்பது.

உரை.

பெருங்கூட்டத்துடன் எம்மை நோக்கி வருகின்ற சேனைகளையும், மறைந்துள்ள கள்வரையும், வெளிப்படையான கள்வரையும், உனது வாயில் போடுகின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இந்த ஐந்து மந்திரங்களாலும், தானாகவே விழுந்த அக்கினிமாக்குச்சில்களை உகாத்தியில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாவது விநியோகம்.

அராகந் சமித்தை வைத்தல்

மந்திரம் :

दँष्ट्राभ्यां मलिम्लूञ्जम्भ्यैस्तस्कराँ उत । हनूभ्याँ स्तेनान् भगव-स्ताँ स्त्वङ्खाद सुखादितान् ।

என்பது.

உரை.

போற்றத்தக்க அக்கினியே! நீ, கடைவாய்ப்பற்களாலும், முன் பற்களாலும் இவெட்டிக் கொள்ளைக்காரரையும், மற்றுமுள்ள கள்வரையும் கடித்துத் துன்புறுத்துவதுடன், இனிமேல் அவர்களை அத்தகைய வாழ்க்கையில் லாதவர்களாகச் செய்வாயாக என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம் மந்திரத்தால், உகாத் தீயில் அரசஞ் சமித்தை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்.

சொத்தைக்களாச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

ये जनेषु मलिम्लवस्तेनासस्तस्करावने । ये कक्षेष्वघायवस्तां॑स्ते दधामि जम्भयोः ।

என்பது.

உரை

கிராமத்திலுள்ள மனிதர்களை வழிக்கொள்ளை யடிக்குங் கள்வர்களையும், வழியில் இருந்து கொண்டு கொல்வதற்கு விரும்பும் புலி முதலியவைகளையும் அக்கினியே ! உனது கடைவாய்ப்பற்களிற் கொடுக்கின்றேன் என்பது.

சாயணபாஷ்யக் கருத்து

இம் மந்திரத்தால், சொத்தைக்களாச் சமித்தை உகாத் தீயில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்.

வன்னிச் சமித்தை வைத்தல்

மந்திரம் :

यो अस्मभ्यमरातीयाद्यश्च नो द्वेषते जनः । निन्दाद्यो अस्मान्दिप्साच्च सर्वन्तं मस्मसा कुरु ।

என்பது.

உரை

அக்கினியே ! நீ, பொறாமைப்படுகின்றவர்கள், பழிப்பவர்கள், காரியத்தைக் கெடுப்பவர்கள், கொல்ல விரும்புகின்றவர்கள் என்னும் நான்கு வகைப் பகையினரையும் சாம்பராக எரித்து விடுவாயாக என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம் மந்திரத்தால், வன்னிச் சமித்தை உகாத் தீயில் வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

தரித்துக் கொள்ளல்)

ஐந்தாம் விநியோகம்

எசமானனுடைய சேபம்

மந்திரம் :

संशितं मे ब्रह्म संशितं वीर्यं बलम्। संशितं क्षत्रं जिष्णु यस्याह मस्मि पुरोहितः।

என்பது.

உரை

எனது பிராமணத்தன்மை நன்கு எடுத்துக் கூறியதாகப்பட்டது. அதாவது சாத்திரப் போக்காகச் செய்யப்பெற்றது. இந்திரிய வன்மையும், தேக வன்மையும், ஒரு செயலைச் செய்வதில் வன்மையுமுடையதாகச் செய்யப்பட்டது. யான் அரசனுக்குப் புரோகிதனா யிருக்கின்றேன். எனது அரச சம்பந்தத்தன்மை வெற்றியுடையதாகுக என்பது.

இரண்டாவது மந்திரம்

उदेषां बाहू अतिरमुद्वर्च उदूबलम्। क्षिणोमि ब्रह्मणाऽमित्रानुन्नयामि स्वाँ अहम्।

என்பது.

உரை

எம்மைச் சேர்ந்த அரசன், பிராமணன் முதலானோர்களுக்குள், யான் ஒருவனே கை வலுத்தவனா யிருக்கின்றேன். மற்றும், இவ்வாறே, அழகு, வன்மைகளும் வலுவை யடைந்தன. பகைவரை ஒழிப்பேன், என்னைச் சேர்ந்தவர்களை உயர்த்துவேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

வேட்போன் இம் மந்திரங்களை எசமானன் செபிக்கும்படி செய்தல் வேண்டு மென்பதாம்

பிறகு, வேள்வித்தலைவன், மந்திரமோதாமல், இரண்டு அத்திச் சமித்துக்களைத் தீயில் வைத்தல் வேண்டும்.

மற்றும், 'मातेवपुत्रं पृथिवीपुरीष्यमग्निं' என்பது முதலிய ருத்திர மந்திரத்தால், முஞ்சிப்புல்லால், பன்னிரண்டு, அல்லது, ஆறு கால்கள் போட்டுப் பின்னிய உறியில் தீத் தொட்டியை வைத்தல் வேண்டும்

## ஆறாம் விநியோகம்.

### பொன் தகட்டைக் கட்டிக் கொள்ளல்

மந்திரம் :

दृशानो रुक्म उर्व्या व्यद्यौद्दुर्मर्षमायुः श्रिये रुचानः । अग्निरमृतो अभव-
द्वयोभिर्यदेनन्द्यौ रजनयत्सुरेताः ।

என்பது.

உரை

காணப்படும், பொன் தகடாகிய அணி விசேடமானது, பழிப்பற்ற வாழ்க்கையை விரும்பிக்கொண்டு பேரொளியால் விளங்குகின்றது. உணவுப் பொருளுடன் கூட அக்கினி யென்னும் பொன் தகடு அமுதமாகி விட்டது. விண்ணிலுள்ள தேவகணங்களால் உண்டாக்கியதால் அமுதத்தன்மை பொருந்தும் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இருபத்தொரு வடுவுள்ள ஒரு தகட்டை நூலிற் கோர்த்து, வடுவுட் புறமாயிருக்கும்படி கழுத்திற் கட்டிக் கொள்ளல் வேண்டுமென்பதாம். பொன் தகட்டை அக்கினி என்றது உபசாரம். இது, அக்கினியைக் கட்டிக் கொள்வதற்கு அங்கமாம்.

~~~

## ஏழாம் விநியோகம்.

### உறிக் கயிற்றைக் கட்டிக் கொள்ளல்

மந்திரம் :

विश्वा रूपाणि प्रतिमुञ्चते कविः प्रासावीद्भद्रन् द्विपदे चतुष्पदे ।
विनाकमख्यत्सविता वरेण्योऽनुप्रयाण मुषसो विराजति ।

என்பது.

உரை

கவியும், மேம்பட்டதுமாகிய சவிதா தேவதை, உலக வடிவை விளக்குகின்றது. மற்றும், மக்கள் விலங்குகள் அனைத்தையும் தத்தமது செய்கையை விளக்குவதால் மேன்மையையுந் தேடிக் கொண்டது. சுவர்க்கத்தையும் விளக்கின்றது. உஷாக்காலங் கழிந்தவுடன் மிக வொளிர்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தீத் தொட்டி வைத்திருக்கும் உறியின் கயிற்றைக் கழுத்திற் கட்டிக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

———
~~~

தரித்துக் கொள்ளல்)

எட்டாம் விநியோகம்.

கருமான் தோலைக் கட்டிக் கொள்ளல்

மந்திரம் :

नक्तोषासा समनसा विरूपे धापयेते शिशुमेक ँ समीची । द्यावाक्षामा रुक्मो अन्तर्विभाति देवा अग्निन्धारयन्द्रविणोदाः ।

என்பது.

உரை

ஒன்றற்கொன்று ஒரே விதமாகிய புத்தியை யுடையனவைகளும், மாறுபட்ட உருவ முடையனவைகளும், அழகுள்ள முடையனவைகளுமாகிய பகல் இரவுகள், குழந்தையாகிய அக்கினியின் தாய்ப்பாலைக் கொடுத்தன. அக் குழந்தையாகிய தீ, சுவர்க்கத்திற்கும் மண்ணிற்கும் நடுவாகிய வானில் பொன் தகடாக விளங்குகின்றது. இவ்வக்கினி விசேடமாக விளங்குகின்றது. செல்வம் வாயிலாகத் தனத்தைக் கொடுக்கும் செல்வத்தலைவனுடைய பிராணன் இவ்வக்கினியைத் தரித்துக்கொண்டது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கருமான்தோலையும் கழுத்திற் கட்டிக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்.

உகாத் தீயை நோக்குதல்

மந்திரம் :

सुपर्णोऽसि गरुत्मान् त्रिवृत्ते शिरो गायत्रं चक्षुस्तोम आत्मा सामते तनूर्वामदेव्यं बृहद्रथन्तरे पक्षौ यज्ञायज्ञियं पुच्छच्छन्दाँ स्यङ्गानि धिष्णियाश्शफा यजूँषिनाम ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, கருடன் போன்று பறவை வடிவாயிருக்கின்றாய். பகிழ்ப்பவமானத்தில் திரிவிருத் (மும்முறை திருப்புதல்) ஸ்தோமம் (துதிக் கொத்து) தலையாம். காயத்திரி யென்னும் சாமம் கண்கள், பதினைந்து முறை திருப்பிப்பாடும் துதிக்கொத்தே சிவான்மா. வாமதேவ்யசாமம் என்பது உடலாம். பிருகத்ரதந்தர மென்னுஞ் சாமம் சிறகுகள். யக்ஞாயக்ஞீய மென்

ஹுஞ் சாமம் வால். காயத்திரி முதலான சந்தங்கள் இருதய முதலிய அங்கங்கள். சோமசம்பந்தமான மகாவேதியிலுள்ள ஹோதாவின் மேடை முதலியவைகள் நகங்கள். யசுர்கள் நாமங்கள் ஆதலின் பறவை வடிவும் அமையும் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், உகா என்னும் தொட்டியிலுள்ள தீயை நோக்கல் வேண்டுமென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்.

தீத்தொட்டியை எடுத்துக்கொண்டு எழுந்திருத்தல்

மந்திரம்:

सुपर्णोऽसि गरुत्मान्दिवङ्गच्छ सुवः पत ॥

என்பது.

உரை.

அக்கினியே! நீ, கருடன் போல் பறவையாகி யிருக்கின்றாய். வானிற் செல்வாயாக. அதிலிருந்து சுவர்க்கத்திற்குச் செல்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் தீத்தொட்டியை எடுத்துக் கொண்டு எழுந்திருத்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, மந்திரமோதாமலே, முதலில் உகாவை எடுத்துக் கொள்ளல் வேண்டுமென்பதை யுணர்க.

பத்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## பதினோராம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

अथ याज्या वैश्वदेवे चातुर्मास्यादि पर्वणि ।
अग्ने सोम अनुवाक्येते अग्नीषोमाज्य भागयोः ॥ १ ॥
अग्निर्भुवस्तथाग्ने वे त्वं नो यातेच सौमिके ।
तत्सेति युग्मं सावित्रे चोद सारस्वते तथा ॥ २ ॥
पूषा पौष्णे मारुते ते विश्वे द्वे वैश्वदेविके ।
द्यावा द्यावापृथिव्ये स्यादग्निं स्विष्टकृतो यजेः ॥ ३ ॥
शंवाजे वाजिनो मन्त्रा द्वाविंशति रुदीरिताः ॥

சாதுர்மாசிய பருவ அவிகளுக்கு, 'ஆக்னேயம்' சோம, 'அக்கினி' சோமம், என்பன ஆஜ்யபாகங்களின் யாஜ்யா புரோநுவாக்கியங்கள், அக்கினி, த்வம், சொம்யத்தின் யாஜ்ய புரோநுவாக்கியங்கள், தத், அசித்தி, சாவித்திர புரோநுவாக்கியங்கள், சோத, பாவீரவி, சாரஸ்வத புரோநுவாக்கியங்கள், பூஷா, சுக்கிர, முதலியன, பூஷாவின் சரு, புரோநுவாக்கியங்கள், விசுவே தேவா, முதலியன வைசுவதேவ ஆமிட்சைக்குப் புரோநுவாக்கியங்கள் என்பது.

---

## நான்காங் காண்டம் முதற் பிரபாடகம்

## பதினோராம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்கு மேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

---

சாதுர்மாசியத்திலுள்ள வைசுவதேவ மென்னும் பருவ அவிகளின் யாஜ்யாநு வாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்.

अग्नेयं यज्ञमध्वरं विश्वतः परिभूरसि । सइद्देवेषु गच्छति । सोमयास्ते मयो भुवं ऊतयस्सन्ति दाशुषे । ताभिर्नोऽविता भव । अग्निर्मूर्धा भुवः । त्वन्नस्सोमयाते धामानि । तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियो योनः प्रचोदयात् । अचित्तीयच्चकृमा दैव्ये जनेदीनैर्दक्षैः प्रभूती पूरुषत्वता ॥ १ ॥ देवेषुच सवितर्मानुषेषुच त्वन्नो अत्र सुवतादनागसः । चोदयित्री सूनृतानाञ्चेतन्ती सुमतीनाम् । यज्ञन्दधे सरस्वती । पावीरवीकन्याचित्रायुस्सरस्वती वीरपत्नी धियन्धात् । ग्नाभिरच्छिद्रꣳ शरणꣳ सजोषा दुराधर्षं गृणते शर्मयꣳसत् । पूषागा अन्वेतु नः पूषा रक्षत्वर्वतः । पूषा वाजꣳसनोतु नः । शुक्रन्ते अन्यद्यजतन्ते अन्यत् ॥ २ ॥ विषु

रूपे अहनीद्यौरिवासि । विश्वाहि माया अवसि स्वधावो भद्रा ते पूषन्निहरातिरस्तु । तेऽवर्धन्तस्वतवसो महित्वनाऽऽनाकन्तस्थुरुरुचक्रिरेसदः । विष्णुर्यद्धावद्वृषणं मदच्युतं वयोनसीदन्नधि-बर्हिषि प्रिये । प्रचित्रमर्कं गृणते तु रायमारुताय स्वतवसे भरध्वम् । ये सहाꣳसि सहसा सहन्ते ॥ ३ ॥ रेजते अग्ने पृथिवी मखेभ्यः । विश्वदेवा विश्वदेवाः । द्यावा नः पृथिवी इमꣳ सिध्रमद्यदिवि-स्पृशम् । यज्ञन्देवेषु यच्छताम् । प्रपूर्वजे पितरानव्यसीभिर्गीर्भिः कृणुध्वꣳसदने ऋतस्य । आनो द्यावापृथिवी दैव्येन जनेन यातं महिवां वरूथम् । अग्निꣳस्तोमेन बोधय समिधानो अमर्त्यम् । हव्या देवेषु नो दधत् । सहव्य वाडमर्त्य उशिग्दूतश्चनो हितः । अग्निर्धियासमृण्वति । शन्नो भवन्तु वाजे वाजे ॥ ४ ॥

---

தலைப்புச்சொற்களின் பிரபாடகத் தொகை எண் (11)

युञ्जान इमामगृभ्णन्देवस्य संते विपाज्जसा वसवस्त्वा समास्त्वोर्ध्वा अस्याकूतिं यदग्ने यान्यग्नेयं यज्ञमेकादश ॥

பஞ்சாதி எண். (46)

युञ्जानो वर्मचस्य आदित्यास्त्वा भारती स्वाꣳ अहꣳ षट्चत्वारिꣳशत् ॥ युञ्जानो वाजे वाजे ॥

பத்தாம் - அநுவாகத்தில் இவைத் தரித்துக்கொள்ளல் கூறப்பட்டது. இதில், சாதுர்மாஸியத்தைச் சேர்ந்த வைசுவதேவ மென்னும் முதலாவது பருவத்தில் விதிக்கப்பட்ட அவிகளின் யாஜ்யாநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன.

---

வாக்கியங்கள்)

முதலாவது

அவற்றுள், இதில் முதலாவது ஆஜ்ய பாகத்தின் விதிவாக்கியத்தால் வந்ததை நீக்குவதற்கு மற்றொரு புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

अग्ने यं यज्ञमध्वरं विश्वतः परिभूरसि । सइद्देवेषु गच्छति ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, கொலையின்றிய எவ் வேள்வியை எல்லா வகையாலும் அடைந்தவனா யிருக்கின்றாயோ, அவ் வேள்வியே, தேவர்கட்கு அவிர்ப்பாகமாய்ச் செல்கின்றது என்பது.

---

இரண்டாவது

இரண்டாவது ஆஜ்ய பாகத்தின் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

सोमयास्ते मयो भुव ऊतयस्सन्ति दाशुषे । ताभिर्नोऽविता भव ।

என்பது,

உரை.

சோமமே! நீ, அவியளித்த எசமானனைப் பாதுகாப்பதற்கு என்ன வகைகளிருக்கின்றனவோ, அவைகளால் எம்மைப் பாதுகாப்பாற்றுவோனாகுதி என்பது.

---

மூன்றாவது

'ஆக்னேய அஷ்டாகபாலம் நிர்வபதி' என்னும் அவிகளில் உள்ள யாஜ்ய, புரோநு வாக்கியங்களின் முதற் சொற்கள் கூறப்படுகின்றன.

மந்திரம் :

अग्निर्मूर्धा भुवः ।

என்பது.

உரை.

'அக்கினி: மூர்த்தா' என்றது, புரோநுவாக்கியம். 'புவ: யக்ஞஸ்ய' என்பது, யாஜ்யா வாக்கியம் என்பது.

இவ்விரண்டும், இஷ்டி விஷயத்தில் ஹோதாவின் காண்டத்திற் கூறப் பட்டுள்ளன, இவைகளின் உரையை ஆண்டுக் காண்க.

---

நான்காவது

'சௌம்யம் சரும்' என்னும், அவிகளின் யாஜ்ய புரோநு வாக்கியங் களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன.

மந்திரம் :

त्वं नस्सोम याते धामानि ।

என்பது.

உரை

'த்வம் ந: ஸோம' என்பது புரோநு வாக்கியம். 'யாதே தாமாநி' என் பது யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டும், 'ஸப்ரத்நவன்னிகாவ்ய' என்னும், அநுவாகத்திற் கூறப்பட்டுள்ளன ஆண்டுக் காண்க.

---

ஐந்தாவது

'சாவித்ரம் த்வாதசகபாலம்' என்பதின் அவிகட்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம :

तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि । धियो योनः प्रचोदयात् ।

என்பது.

உரை

யாதொரு சவிதா தேவதை எமது புத்தியை ஏவுகின்றதோ, போற்றத் தக்க அந்த சவிதா தேவதையின் ஒளியைத் தியானிக்கின்றோம் என்பது.

---

ஐந்தாவது

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

अचित्तीयच्चकृमा दैव्ये जने दीनैर्दक्षैः प्रभूती पूरुषत्वता । देवेषु च सवितर्मानुषेषु च त्वन्नो अत्र सुवतादनागसः ।

என்பது.

வாக்கியங்கள்)

உரை.

உடம்பு கருவி முதலியவைகளில் யான் என்னும் உறுதியாகிய மயக்கத்தால், இது செயத்தக்கது இது செயத்தகாதது என்று அறியாததால் விடயங்களையே மேற்கொண்டு இவ்வுடம்பில் யாம் என்ன பாவஞ் செய்துள்ளோமோ, அவைகள் நீங்கும்படி செய்வாயாக என்பது.

ஆறுவது

'சாரஸ்வதம் சரும்' என்பதின், புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

चोदयित्री सूनृतानाञ्चेतन्ती सुमतीनाम् । यज्ञन्दधे सरस्वती ।

என்பது.

உரை

இன்சொற்களைச் சொல்விப்பவளும், எமது நற்புத்திகளை யறிபவளுமாகிய சரசுவதிதேவி இவ் வேள்வியைத் தாங்கிக்கொண்டிருக்கின்றாள் என்பது.

ஏழாவது

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

पावीरवी कन्या चित्रायुस्सरस्वती वीरपत्नी धियन्धात् । ग्नाभिर-
च्छिद्रꣳ शरणꣳ सजोषा दुराधर्षं गृणते शर्मयꣳसत् ।

என்பது.

உரை.

பரிபாலிப்போர்களையும் வீரர்களையும் உண்டாக்குகின்றவளும், அழகுடையவளும், அழிவில்லாத ஆயுளுடையவளும், வீரர்களைப் பாதுகாக்கின்றவளும், கிருபிச்சந்தங்களோடு கூடியவளுமாகிய சரசுவதி, எமது புத்தியை, கருமங்களில் சாக்கிரதையாக இருக்கும்படி செய்வாளாக. மற்றும், வேள்வித் தலைவனிடத்தில் ஒத்த பிரீதி யுடையவளாய்த் துதிக்கப் பெற்று, கெடாததும், பாதுகாப்பதும், பிறரால் தாழ்த்தப்படாததுமாகிய சுகத்தையு மளிப்பாளாக என்பது.

எட்டாவது

'பௌஷ்ணம் சரும்' என்பதற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

पूषागा अन्वेतु नः पूषा रक्षत्वर्वतः । पूषा वाजꣳ सनोतु नः ।

என்பது.

உரை.

இந்தப் பூஷா தேவதை எமது பரிபாலனத்தின் பொருட்டு எமக்குப் பின்னுற் செல்க. மற்றும், எமக்கு வேண்டிய உணவுப் பொருளைத் தேடுவதாகுக என்பது.

---

ஒன்பதாவது

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

शुक्रन्ते अन्यद्यजतन्ते अन्यद्विषु रूपे अहनीद्यौरिवासि । विश्वाहि
माया अवसिस्वधावो भद्राते पूषन्निह रातिरस्तु ।

என்பது.

உரை.

பூஷா தேவதையே, உனது சுக்த வடிவம் உதயத்தில் சிவப்பு நிறம், உச்சியில் வெண்மை நிறம் என்றிவ்வாறு பல்வகைத்தானது. உனது பூசையும், காலையில், 'மித்ரஸ்ய சர்ஷணீ த்ருத' என்பது, முதலிய மந்திரத்தாற் செய்யப்படுகின்றது. உச்சியில், 'ஆசத்யேன' என்பது முதலியதாற் செய்யப் படுகின்றது என்றிவ்வாறு பல்வகைப்படுகின்றது. உன்னாலாக்கப்பட்ட காலமும், இருள்சூழ்ந்தது இரவென்றும், வெளிச்சமுடையது பகலென்றும் பல்வகைப்படுகின்றது. இவ்வாறிருந்தும், நீ வான்போல் யாண்டும் பொதுவாகவே யிருக்கின்றாய். பொருள்களை விளக்கறியும் புத்திவிருத்திகளையும், உணவு முதலிய பொருள்களையும் நீ பாதுகாக்கின்றாய். உன்னுடைய தனம் பயன்தருவதாக ஆகுக என்பது.

---

பத்தாவது

'மாருதம் சப்த கபாலம்' என்பதற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

வாக்கியங்கள்)

மந்திரம் :

तेऽवर्धन्तस्वतवसो महित्वनाऽऽनाकन्तस्थु रुरुचक्रिरेसदः । विष्णु-
र्यद्धावद्वृषणं मदच्युतं वयो नसीदन्नधिबर्हिषि प्रिये ।

என்பது.

உரை.

வன்மையைச் சுவாதீனமாகவுடைய மருத்துக்களே! நீங்கள், தமது மகிமையால் வளர்கின்றீர்கள். சுவர்க்கத்தில், வேள்வித்தலைவனுக்கு இடத்தைச் செய்கின்றீர்கள். வேண்டியதை யளிப்பதும், களிப்பைத்தருவதுமாகிய கருப்பை, விஷ்ணுவால் பாதுகாக்கப்படுகின்றது. அந்தக் கருப்பையின் மீது பறவைபோன்று உட்கார்ந்திருக்கின்றீர்கள் என்பது.

---

பதினோராவது

அதற்கே யாஜ்யா வாக்கியுங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

प्रचित्रमर्कं गृणतेतु रायमारुताय स्वतवसे भरध्वम् । ये सहांसि
सहसा सहन्ते रेजते अग्ने पृथिवीमखेभ्यः ।

என்பது.

உரை

அவியை யீதற் பொருட்டுத் துதிக்கப்படுகின்றவர்களும், மிக விரைவிற் செல்கின்றவர்களும், தத்தமது வன்மையைச் சுவாதீனமாக வுடையவர்களு மான மருத்துக் கணங்களின் பொருட்டு, மருத்துக்களின் வன்மைகளால் பகைவரின் வன்மைகளை யடக்க விரும்பும் வேட்போன் வேள்வித்தலைவர்களே! நீவிர், பல்வகை ஆராதனையைத் தேடுவீர்களாக. அக்கினியே! நீ, இவ் வேள்வி எவ்வாறு முடியுமோ, அவ்வாற்றால் முயல்வதைப் பார்ப்பாயாக என்பது.

---

பன்னிரண்டாவது

'வைசுவ தேவீம் ஆமீக்ஷாம்' என்பதற்குப் புரோநு வாக்கியங்களின் தலைப்புக் கூறப்படுகின்றது.

மந்திரம் :

विश्वे देवा विश्वे देवाः ।

என்பது.

உரை.

*'விசுவே தேவா ருதாவ்ருத' என்பது புரோநுவாக்கியம், 'விசுவே தேவா ச்ருணுத' என்பது யாஜ்யா வாக்கியம். இது, 'நவோ நவோ பவதி' என்னும் அநுவாகத்தில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளது ஆண்டுக் காண்க என்பது.*

---

பதின்மூன்றுவது

*'த்யாவா பிருதிவ்யம் ஏக கபாலம்' என்பதற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது.*

மந்திரம் :

**द्यावानः पृथिवी इम॰ सिध्रमद्यदिविस्पृशम् । यज्ञन्देवेषु यच्छताम् ।**

*என்பது.*

உரை.

*விண் மண் என்னும் இரண்டு தேவதைகளும், இப்போது பயன்தரு வதும், சுவர்க்கத்தைத் தொட்டுக்கொண் டிருப்பதுமாகிய வேள்வியை தேவர் கட்குச் சமர்ப்பணமாக்குக என்பது.*

---

பதிநான்காவது

மந்திரம் :

**प्रपूर्वजे पितरानव्यसीभिर्गीर्भिः कृणुध्व॰ सदने ऋतस्य । आनोद्या पृथिवी दैव्येन जनेन यातं महिवां वरूथम् ।**

*என்பது.*

உரை

*வேள்விச் செயலாளர்களே, வேள்வித்தலைவர்களே! நீவிர், முதலில் உண் டானவைகளும், அன்னை பிதாக்களைப் போன்றவைகளுமான வானையும் மண் ணையும் புதிய மந்திரங்களாற் போற்றுவீர்களாக. விண் மண்களே! நீங்கள், தேவ புருடர்களோடு வருவீர்களாக. உங்களுடைய வேள்விச்சாலை மிகப் போற்றத்தக்கது என்பது.*

---

பதினைந்தாவது

*அதிலேயே சுவிஷ்டகிருத் யாகத்திற்குப் புரோநுவாக்கியங் கூறப்படு கின்றது.*

வாக்கியங்கள்)

மந்திரம் :

अग्निं स्तोमेन बोधय समिधानो अमर्त्यम् । हव्यादेवेषु नो दधत् ।

என்பது.

உரை.

வேள்வித்தலைவ! நீ, நன்கு வளர்ந்ததும், இறப்பிலாததும் சுவிஷ்டகிருத் வடிவுடையதுமாகிய அக்கினிக்கு 'எமது அவிகளைத் தேவர்கட்குச் சேர்ப்பாயாக' என்று போற்றிக் களிப்பித்து அறிவுறுத்துவாயாக என்பது.

---

பதினாறாவது

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

सहव्य वाडमर्त्य उशिग्दूतश्च नो हितः । अग्निर्धिया समृण्वति ।

என்பது.

உரை.

அவிகளை ஏற்றுச் செல்வதும், இறவாததும், அநுக்கிரகத்திற்கு முன் விரும்புவதும், தேவர்களை அழைப்பதும், வேள்வித்தலைவனுக்கு நலஞ் செய்வதுமாகிய அக்கினி, கருணையுடைய மனதோடு இங்கு வருவதாகுக என்பது.

---

பதினேழாவது

'வாஜினோ எஜதி' என்று, விதிக்கப்பட்ட கருமத்தின் யாஜ்யாநு வாக்கியங்களின் தலைப்புக் கூறப்படுகின்றது.

மந்திரம் :

शन्नो भवन्तु वाजे वाजे ॥

என்பது.

உரை

'சந்நோ பவந்து வாஜிந:' என்பது புரோநு வாக்கியம், 'வாஜேவாஜே அவத வாஜிந:' என்பது, யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டும், 'தேவஸ்யாஹம் சவிது:' என்னும் அநுவாகத்தில் விரிவாய்க் கூறப்பட்டுள்ளன ஆண்டுக் காண்க என்பது.

பதினோராம் அநுவாகம் முற்றிற்று.

நான்காங் காண்டம் முதற் பிரபாடகம் முடிந்தது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## நான்காங் காண்டம்-இரண்டாம் பிரபாடகம்.

---

விடயச் சுருக்கம்.

आद्य प्रपाठके ह्युख्यो योऽग्निस्सोऽयं प्रपञ्चितः ।
प्रपाठके द्वितीये तु स्याद्देव यजनग्रहः ॥ १ ॥
चयनार्थस्तत्र चानुवाका एकादशे रिताः ।
आसन्द्यां स्थापनं वात्स प्रसूक्तेन ह्युपस्थितिः ॥ २ ॥
उखाग्नेर्नयनं गार्हपत्याग्निचयनं भुवः ।
कर्षणं चौषधीवापो लोष्टक्षेपादिकं तथा ॥ ३ ॥
रुक्मादेरुपधानं स्वयमातृण्णादिकस्य च ।
निधानं पशुशीर्षाणां याज्या अर्था उदीरिताः ॥ ४ ॥

*முதற் பிரபாடகத்தில், உகாக்கினி யுண்டாக்கல் கூறப்பட்டது. இரண்டாம் பிரபாடகத்தில், மகாக்கினி சயனத்திற்குரிய இடத்தை ஏற்படுத்தல் கூறப்படுகின்றது.*

*இவ் விரண்டாம் பிரபாடகம் பதினொரு அநுவாகங்களையுடையது. அவற்றுள், தீயை நாற்காலியில் வைத்தல், போற்றல், எடுத்துக் கொண்டு போதல், காருகபத்தியத் தீயின் சயனம், (செங்கல் கற்களை அடுக்கல்,) மகாக்கினி சயனத்திற்குரிய கருடன் போன்ற இடத்தை உழுதல், விதைகளை விதைத்தல், மண்ணாங்கட்டிகளை யெடுத்தெறிதல், பொன் தகட்டை வைத்தல், சுக்கான் கற்களை வைத்தல், ஆட்டுக் கடாவின் தலைகளை வைத்தல் என்பன முறையே பதினொரு அநுவாகத்தின் பொருள்கள்.*

---

## முதல் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

विष्णुश्चतुर्भिराक्रामोदक्रन्देत्यनुवत्यथ ।
अग्ने चतुर्भिरावृत्त उदुपाशं विमुञ्चति ॥ १ ॥
आत्वोख्यमाहरेदग्नेऽभ्युपस्थाय चतुष्टयात् ।
सीदेत्यादेस्तथाऽऽसन्द्यां सादयेत्षोडशोदिताः ॥ २ ॥

*நாற்காலியின்மீது வைத்தல்)*

*கிழக்கில் நான்கடி எடுத்து வைத்தல், நான்காமடியில் நின்றுக்கொண்டு மந்திரம் ஓதல், வலமாய் வருதல். உகாக் கயிற்றை அவிழ்த்தல், உகாக்கினியைக் கொண்டுவருதல், போற்றுதல், நாற்காலியில் வைத்தல் என்பது.*

---

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்,

## முதல் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்கு மேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

---

நாற்காலியின் மீது அக்கினியை வைத்தற்குரிய மந்திரங்கள்.

विष्णोः क्रमोऽस्यभिमातिहा गायत्रं छन्द आरोह पृथिवी-
मनुविक्रमस्व निर्भक्तस्सयन् द्विष्मो विष्णोः क्रमोऽस्यभिशस्तिहा त्रै-
ष्टुभं छन्द आरोहान्तरिक्ष मनुविक्रमस्व निर्भक्तस्सयन् द्विष्मो
विष्णोः क्रमोऽस्यरातीयतो हन्ता जागतं छन्द आरोह दिव मनु-
विक्रमस्व निर्भक्तस्सयन् द्विष्मो विष्णोः ॥ १ ॥ क्रमोऽसि
शत्रूयतो हन्ताऽऽनुष्टुभं छन्द आरोह दिशोऽनुविक्रमस्व निर्भक्त-
स्सयन् द्विष्मः । अक्रन्ददग्निस्स्तनयन्निव द्यौः क्षामारेरिहद्वीरुध-
स्समञ्जन् । सद्यो जज्ञानो विहीमिद्धो अख्यदारोदसी भानुना
भात्यन्तः । अग्नेऽभ्यावर्तिन्नभिन आवर्त स्वायुषा वर्चसा सन्या
मेधया प्रजया धनेन । अग्ने ॥ २ ॥ अङ्गिरश्शतन्ते सन्त्वावृतस्सह-
स्रन्तउपावृतः । तासां पोषस्य पोषेण पुनर्नो नष्टमाकृधि पुनर्नो
रयिमाकृधि । पुनरूर्जा निवर्तस्व पुनरग्न इषाऽऽयुषा । पुनर्नः
पाहि विश्वतः । सहरय्या निवर्तस्वाग्ने पिन्वस्व धारया । विश्व-
प्स्निया विश्वतस्परि । उदुत्तमं वरुणपाशमस्मदवाधमम् ॥ ३ ॥
विमध्यमꣳश्रथाय । अथावयमादित्य व्रतेतवानागसो अदितये-

स्याम। आ त्वाऽहार्षमन्तरभूर्ध्रुवस्तिष्ठाविचाचलिः। विशस्त्वा सर्वा वाञ्छन्त्वस्मिन्राष्ट्रमधिश्रय। अग्रे बृहन्नुषसामूर्ध्वो अस्थान्निर्जग्मिवान्तमसो ज्योतिषाऽऽगात्। अग्निर्भानुना रुशता स्वङ्ग आ जातो विश्वा सद्मान्यप्राः। सीद त्वं मातुरस्याः॥ ४॥ उपस्थे विश्वान्यग्ने वयुनानि विद्वान्। मैनामर्चिषा मा तपसाऽभिशूशुचोऽन्तरस्याꣳ शुक्रज्योतिर्विभाहि। अन्तरग्ने रुचा त्वमुखायै सदने स्वे। तस्यास्त्वꣳ हरसा तपञ्जातवेदश्शिवो भव। शिवो भूत्वा मह्यमग्नेऽथो सीद शिवस्त्वम्। शिवाः कृत्वा दिशस्सर्वास्स्वां योनिमिहासदः। हꣳसश्शुचिषद्वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत्। नृषद्वरसदृतसद्व्योमसदब्जा गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत्॥ ५॥

முதல் அநுவாகத்தில் தீயை நாற்காலியில் வைத்தல் கூறப்படுகின்றது. அதில், அவ்வக்கினியை எடுக்கப்போதல் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

முதலாவது அடியெடுத்து வைத்தல்

மந்திரம்:

विष्णोः क्रमोस्यभिमातिहा गायत्रं छन्द आरोह पृथिवीमनुविक्रमस्व निर्भक्तस्स यं द्विष्मः।

என்பது.

உரை

முதலாவது அடியெடுத்து வைக்கலே! நீ, வேள்விக்ககலவனுடைய பாவத்தைத் தொலைக்கும் கால் அடியாக இருக்கின்றாய். காயத்திரிச் சந்தத்தை அநுக்கிரகிக்குந் தன்மையாற் கொள்வாயாக. அத்தகைய நீ, பூமிவடிவ தேவதையாகிய இவ்விடத்தை யடைவாயாக. எவனை யாம் வெறுக்கின்றோமோ, அந்த அன்பில்லாதவன், இவ்விடத்திலிருந்து நீக்கப்பட்டவனாயினன் என்பது.

---

உகாத்தியை வைத்தல்)

இரண்டாவது அடி யெடுத்து வைத்தல்

மந்திரம் :

विष्णोः क्रमोस्यभिशस्तिहा त्रैष्टुभं छन्द आरोहान्तरिक्ष मनुविक्रमस्व
निर्भक्तस्सयं द्विष्मः ।

என்பது.

உரை

இரண்டாவது யெடுத்துவைக்கும் கால் அடியே! நீ, பொய் சொல்வோ னைத் தொலைப்பதா யிருக்கின்றாய். அத்தகைய நீ, திருஷ்டுப் சந்தத்தை அநுக்கிரமிக்கும் தன்மையில் அடைவாயாக. அந்தரிக்ஷமாகிய இவ்விடத்தை யடைவாயாக. எவனை யாம் வெறுக்கின்றோமோ, அத்தகைய, எமது வருவா யைக் கெடுப்போனாகிய பகைவன் இவ்விடத்திலிருந்து நீக்கப்பட்டவனாயினன் என்பது.

---

மூன்றுவது அடி யெடுத்து வைத்தல்

மந்திரம் :

विष्णोः क्रमोस्यराती यतो हन्ता जागतं छन्द आरोह दिवमनु-
विक्रमस्व निर्भक्तस्सयं द्विष्मः ।

என்பது.

உரை

மூன்றுமுறை யெடுந்து வைக்கும் கால் அடியே! நீ, எமது வருவாயைத் தடைசெய்வோனைத் தொலைப்பதா யிருக்கின்றாய். அத்தகைய நீ, சுவர்க்கத்தை யடைவாயாக. சகதிச் சந்தத்தை அநுக்கிரகிக்கும் தன்மையால் ஏற்றுக் கொள்வாயாக. எம்மால் வெறுக்கப்பட்டவன் இங்கிருந்து நீங்கி விட்டவ னாயினன் என்பது.

---

நான்காவது அடி யெடுத்து வைத்தல்

மந்திரம் :

विष्णोः क्रमोसि शत्रूयतो हन्ताऽऽनुष्टुभं छन्द आरोह दिशोऽनुविक्रमस्व
निर्भक्तस्सयं द्विष्मः ।

என்பது.

உரை.

நான்காமுறை யெடுத்து வைக்கும் கால் அடியே! நீ, பகைவனைத் தொலைப் பதா யிருக்கின்றாய். அத்தகைய நீ, அநுஷ்டுப் சந்தத்தை அநுக்கிரகிக்கும்

தன்மையால் ஏற்றுக்கொள்வாயாக. திசைகளை யடைவாயாக. எவனை யாம் வெறுக்கின்றோமோ, அவனை இவ்விடத்திலிருந்து நீக்குவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் நான்காலும், நான்கு அடிகள் எடுத்து வைத்து, கிழக்கு நோக்கிப் போதல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது வினியோகம்.

ஓதுதல்

மந்திரம் :

अक्रन्ददग्निस्तनयन्निव द्यौः क्षामा रेरिहद्वीरुधस्समञ्जन् । सद्यो जज्ञानो वि हीमिद्धो अख्यदा रोदसी भानुना भात्यन्तः ।

என்பது.

உரை

இவ்வக்கினி, பயிர் வாடுவதைப் போக்குவதற்கு வானில் மேகம் முழங்குவது போல் எமது துன்பைப் போக்குவதன் பொருட்டு கர்ச்சிப்பதாகுக. எவ்வாறு செய்து கொண்டு கர்ச்சிப்பதெனின்? கொடிகள் உண்டாகும்போது, பூ காய் முதலியவைகளுடன் காணப்படுவது போல் என்பது. அதாவது எமது அநுகூலங்களை இப்போதே உலகிற்குக் காட்டுவித்துக்கொண்டு கர்ச்சிக்க என்பது.

சாயணபாடியக் கருத்து.

நான்காவது கால் அடியிலேயே நின்று கொண்டு இம் மந்திரத்தை ஓதல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் வினியோகம்.

வலமாய்த் திரும்பி வருதலில்

முதல் மந்திரம்

अग्नेऽभ्यावर्तिन्नभि न आवर्तस्वायुषा वर्चसा सन्यामेधया प्रजया धनेन ।

என்பது.

உரை

சுற்றிவருஞ் சீலமுடைய அக்கினியே! நீ, ஆயுள், அழகு, வன்மை, பொருளீகை, கேட்ட பொருளை உள்ளத்தடைக்குந் தன்மை, புத்திரன், பொன் முதலியவைகளுடன் கூட எம்மைக் குறித்துத் திரும்பி வருவாயாக என்பது.

---

உகாத் தீயை வைத்தல்)

இரண்டாவது மந்திரம்

अग्ने अङ्गिरश्शतन्ते सन्त्वावृतस्सहस्रन्त उपावृतः । तासां पोषस्य पोषेण पुनर्नो नष्टमाकृधि पुनर्नो रयिमाकृधि ।

என்பது.

உரை

அங்கிரஸ் என்னும் அக்கினியே! உன்னுடைய ஆவிருத்திகள் நூற்றுக் கணக்காகுக. உன்னுடைய நெருங்கிய ஆவிருத்திகள் ஆயிரக்கணக்காகுக. இவ்வாறு உனது ஆட்களும் தனங்களும் ஆயிரக்கணக்காய் மீண்டும் மீண்டு வருவனவாக. இவ்வாறு வந்த வகைகளைப் பாதுகாப்பதற்குக் கோடிக்கணக்காக ஆவிருத்திகளாகுக. எமக்கு நஷ்டமான தனங்களையும் மீண்டும் மீண்டும் தருவாயாக என்பது.

---

மூன்றும் மந்திரம்

पुनरूर्जा निवर्तस्व पुनरग्न इषायुषा । पुनर्नः पाहि विश्वतः ।

என்பது.

உரை

யதாம்,
கொ

அக்கினியே! நீ, பால் இரச முதலியவைகளுடன் இங்கு வருவாயாக. அன்னம், மற்றும், ஆயுள் என்பவைகளுடன் கூட மீண்டும் வருவாயாக. யாங்கள் மீண்டும் மீண்டுஞ் செய்த குற்றங்களினின்றும் எம்மைப் பாதுகாப்பாயாக என்பது.

---

நான்காம் மந்திரம்

सहरय्या निवर्तस्वाग्ने पिन्वस्वधारया । विश्वप्स्निया विश्वतस्परि ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, தனத்துடன் கூட வருவாயாக. எல்லாராலும் விரும்பப்படும் மழையின் தாரைகளால், புல், கொடி, மரங்கள் முதலியவற்றின் மேல் நீரைத் தெளிப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் நான்காலும், கழுத்திற் கட்டியிருக்கும் அக்கினியுடன் கூடவே வலமாகச் சுற்றி வரல் வேண்டுமென்பதாம்.

---

## ஐந்தாம் விநியோகம்
### தீத்தொட்டியை அவிழ்த்தல்

மந்திரம் :

उदुत्तमं वरुणपाशमस्मदवाधमं विमध्यमꣳ श्रथाय । अथावयमादित्यव्रते तवानागसो अदितये स्याम ।

என்பது.

### உரை.

வருணனே! நீ, தலையிற் கட்டியுள்ள உனது கயிற்றை அவிழ்த்து அறுத்து விடுவாயாக. நடுவிற் கட்டியுள்ள கயிற்றை அவிழ்த்து அறுத்து விடுவாயாக. பாதத்தில் கட்டியுள்ள கயிற்றை அவிழ்த்து அறுத்து விடுவாயாக. இவ்வாறு மூன்று கயிறுகளையும் அவிழ்த்த பிறகு, சூரியனைப் போன்ற வருணனே! உனது கருமத்தில், இடையில் விடுபடுதலின்றி ஈடுபடுவதற்கு உரியராவோமாக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வேள்வித்தலைவன் கழுத்திற் கட்டியிருந்த தீத்தொட்டியின் உறிக்கயி[illegible] அவிழ்த்துவிடல் வேண்டுமென்பதாம்.

மற்றும், மந்திரபா[illegible]த்திற் கட்டியிருந்த பொன் தகட்டையும், மான் தோலையும் அவிழ்த்[illegible]ல் வேண்டுமென்பதையுமுணர்க.

---

## ஆறும் விநியோகம்.
### அக்கினித் தொட்டியைக் கொண்டு வருதல்

மந்திரம் :

आत्वाहार्षमन्तर भूर्ध्रुवस्तिष्ठाविचाचलिः । विशस्त्वा सर्वावाञ्छन्त्व-स्मिन्राष्ट्रमधिश्रय ।

என்பது,

### உரை

அக்கினியே! உன்னைக் கொண்டு வருகின்றேன். நீ, தொட்டியின் நடுவில் இருக்கின்றாய். அசைவின்றி உள்ளே இருப்பாயாக. எல்லா மக்களும் உன்னை விரும்புவார்களாக. நீ இந்த வேள்வித் தலைவனுக்கு இராச்சியத்தை யளிப்பாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், அவிழ்த்த தீத்தொட்டியைக் கொண்டு வரல் வேண்டுமென்பதாம்.

உகாத்தீயை வைத்தல்)

## ஏழாம் விநியோகம்.

### தீயைப் போற்றுதல்

மந்திரம் :

अग्ने बृहन्नुषसामूर्ध्वो अस्थान्निर्जगन्वान्तमसो ज्योतिषागात्।
अग्निर्भानुना रुशता स्वङ्ग आजातो विश्वा सद्मान्यप्राः। என்பது.

உரை

இருளைப் போக்குவதாம், சுவாலையால் அழகுடையதுமாகிய அக்கினி, காலை நேரத்தில் அக்கினி ஹோத்ர முதலியவைகளினின்று மேல் எழும்புவதாகக் காணப்படுகின்றது. தனது ஒளியால் இருளைப் போக்கிக்கொண்டு நிற்கின்றது. உண்டான ராத்திரிக்காலே எல்லா இடங்களையும் தனது ஒளியாற் கலந்து கொள்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உகாவிலுள்ள தீயைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

சாண், ஒட்டைச்சாண் அளவு உயரமுடையதும், ஒரு முழம் சதுரமுள்ளதுமாகிய ஒரு அத்திமர நாற்காலியைக் கொண்டு வந்து வைத்துக் கொள்ளல் வேண்டும் என்பதையு முணர்க.

---

## எட்டாம் விநியோகம்.

### நாற்காலியின் மீது உகாவை வைத்தலில் முதல் மந்திரம்.

सीद त्वं मातुरस्या उपस्थे विश्वान्यग्ने वयुनानि विद्वान्। मैनामर्चिषा मा
तपसाऽभिशूशुचोऽन्तरस्याᳪं शुक्रज्योतिर्विभाहि। என்பது.

உரை

எல்லா ஞான சாதனங்களையு முணர்ந்த அக்கினியே! நீ, மாதாவிற் கொப்பாகிய இந்த நாற்காலியின் நடுவில் உட்கார்ந்திருப்பாயாக. இந்த உகாவை உனது ஒளியால் [illegible] காதே. மற்றோ, இதன் நடுவில் நல்ல ஒளியுடன் விளங்குவாயாக என்பது.

---

### இரண்டாம் மந்திரம்.

अन्तरग्ने रुचा त्वमुखायै सदने स्वे। तस्यास्त्वᳪं हरसा तपं-
ञ्जातवेदः शिवो भव। என்பது.

(நாற்காலியின்மீது

உரை.

அக்கினியே! நீ, இந்த உகாவின் நடுவாகிய தனதிடத்தில் ஒளியோடு விளங்குவாயாக. எல்லா முணர்ந்தோய்! இந்த உகாவிற்கு, சிறிய ஒளியால் சூடுகாட்டிச் சுகங் கொடுப்பதாகுவாயாக என்பது.

---

மூன்று மந்திரம்.

शिवो भूत्वा मह्यमग्नेथो सीदशिवस्त्वं । शिवाः कृत्वा दिशस्सर्वास्स्वां योनि मिहाऽसदः ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, எம்பொருட்டுச் சாந்த வடிவாகி, பிறகு, எல்லாத் திசைகளிலும் சாந்தத்தை யுண்டாக்கி விட்டு உட்காருவாயாக. அதாவது, எல்லாத் திசைகட்குஞ் சாந்தத்தை யுண்டாக்கி விட்டு தனது இடமாகிய உகா என்னுந் தொட்டிக்குள் வந்து உட்கார்ந்து கொள்வாயாக என்பது.

---

நான்காம் மந்திரம்

हंसश्शुचिषद्वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत् । नृषद्वरस-दृतसद्व्योमसदब्जागोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥

என்பது.

உரை.

ஆகவனீய முதலிய இடங்கட்குச் செல்வதும், அல்லது, பகையைக் கொல்வதும், வேள்வியிலிருப்பதும், எசமானனை வாழ வைப்பதும், அந்தரிட்சத்தில் புகைச்சுவாலையாக விளிப்பதும், தேவர்களை யழைப்பதும், வேள்வி வேதிகையிலிருப்பதும், மக்கள் வயிற்றில் சாடராக்கினியாக இருப்பதும், கற்றோர் வீட்டிலிருப்பதும், வேள்வியில் உண்டாக்கப்படுவதும், வானில் இரவியாயிருப்பதும், மழையில் மின்னல் வடிவாயிருப்பதும், பசு நெய்யில் சுவாலை வடிவாக யிருப்பதும், வேள்வியின் பொருட்டாகவே உண்டாக்கப்படுவதும், மலையில் தாவானல வடிவாய்த் தோற்றுவதுமாகிய அக்கினி, மகாக்கினிசயனத்தோடு கூடிய வேள்வியை உண்டாக்குக என்பது. இந்த நான்கு மந்திரங்களால் உகையை நாற்காலியின் மீது வைத்தல் வேண்டும் என்பதாம்.

முதலாம் அநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

दिवस्परीत्यनुवाके वात्सप्रेणोपतिष्ठते ।

இவ்வநுவாகத்தால் உபஸ்தானம் செய்ய வேண்டும் என்பது.

---

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

## இரண்டாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகட்கு மேல் நான்கு பதங்களைக் கொண்டது.

---

நாற்காலியின் மீதுள்ள அக்கினியைப் போற்றுதற்குரிய மந்திரங்கள்.

दिवस्परि प्रथमञ्जज्ञे अग्निरस्मद्द्वितीयं परि जातवेदाः । तृतीयमप्सु नृमणा अजस्रमिन्धान एनञ्जरते स्वाधीः । विद्मा ते अग्ने त्रेधा त्रयाणि विद्मा ते सद्म विभृतं पुरुत्रा । विद्मा ते नाम परमं गुहा यद्विद्मा तमुत्सं यत आजगन्थ । समुद्रे त्वा नृमणा अप्स्वन्तर्नृचक्षा ईधे दिवो अग्न ऊधन् । तृतीये त्वा ॥ १ ॥ रजसि तस्थिवांꣳ सम्‌तस्य योनौ महिषा अहिन्वन् । अक्रन्ददग्निस्स्तनयन्निव द्यौः क्षामा रेरिहद्वीरुधस्समञ्जन् । सद्यो जज्ञानो विहीमिद्धो अख्यदा रोदसी भानुना भात्यन्तः । उशिक्पावको अरतिस्सुमेधा मर्तेष्वग्निरमृतो निधायि । इयर्ति धूममरुषं भरिभ्रदुच्छुक्रेण शोचिषा द्यामिनक्षत् । विश्वस्य केतुर्भुवनस्य गर्भ आ ॥ २ ॥ रोदसी अपृणाज्जायमानः । वीडुञ्चिदद्रिमभिनत्परायञ्जना यदग्निमयजन्त पञ्च । श्रीणामुदारो धरुणो रयीणां मनीषाणां प्रार्पणस्सोमगोपाः । वसोस्सूनुस्स-

हंसो अप्सु राजा विभात्यग्रं उषसा मिधानः । यस्ते अद्य कृणवद्भद्र-
शोचेऽपूपन्देवघृतवन्तमग्ने । प्रतन्नय प्रतरं वस्यो अच्छाभिद्युम्न-
न्देवभक्तं यविष्ठ । आ ॥३॥ तं भंजसौ श्रवसेष्वग्न उक्थ उक्थ
आभंजशस्यमाने । प्रियस्सूर्ये प्रियो अग्नाभवात्युज्जातेनभिनदद्दु-
ज्जनित्वैः । त्वामग्ने यजमाना अनुद्यून् विश्वावसूनि दधिरेवार्याणि ।
त्वया सह द्रविणमिच्छमाना व्रजङ्गोमन्तमुशिजो विवव्रुः । दृशानो
रुक्म उर्व्याव्यद्यौद्दुर्मर्षमायुश्श्रियेरुचानः । अग्निरमृतो अभवद्वयो-
भिर्यदेनन्द्यौरजनयत्सुरेताः ॥ ४ ॥

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, 'येन देवाः' என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவன், ஒட்டைச்சாண் அளவு கொண்ட சமித்துக்களால் உகையிலுள்ள தீயை வளர்த்தல் வேண்டும்.

மற்றும், சோமயாகத்திற் செய்வது போலவே 'स्वाहा यज्ञं' என்பது முதலிய மந்திரத்தால் விரலை மடக்கல் முதலிய கர்மங்களைச் செய்யத்தொடங்கி, விரதமாகிய பாலை வாங்கி வைத்துக் கொண்டு, அதில், 'अन्नपते' என்பது முதலிய மேல் வரும் மந்திரத்தால் அக்கிச் சமித்தை நனைத்து உகாக்கினியில் வைத்தல் வேண்டும்.

'अग्नये अन्नपतये इदं' என்று, தியாகித்தல் வேண்டும். மற்றும், 'देवस्यत्वा ......हस्ताभ्यां गायत्रेण छन्दसा' என்னும் மந்திரத்தால், மற்றொரு அக்கிச்சமித்தையும் அத் தீயிலேயே ஓமஞ் செய்தல் வேண்டும்.

அதன் பிறகு, கையலம்புதல் முதல், 'सनीहार प्रस्थापनं' 'அதாவது, வேள்விக்குப் பொருளீவோர் ஈவாராக' என்று இரந்து கேட்டல் வரை சோமயாகத்திற் செய்தது போலவே செய்து கொள்ளல் வேண்டும். இரவில் தூங்காதிருத்தல் வேண்டும். இவ்வாறு முதல் நாள் செய்ய வேண்டியதை முடித்த பிறகு, இரண்டாம் நாட் காலையிற் செய்ய வேண்டி கருமங்களையுஞ் செய்து முடித்துக் கொண்டு, வாக்கை அடக்கல் விடுதல் சோமத்தைப் போற்றல் வரையில் சோமத்தைப் போலவே செய்து கொள்ளல் வேண்டும். பிறகு,

போற்றுதல்)

முதல் விநியோகம்

உகாவிலுள்ள தீயைப் போற்றுதல்.

முதல் மந்திரம்

दिवस्परि प्रथमञ्जज्ञे अग्निरस्मद्द्वितीयं परिजातवेदाः । तृतीय मप्सु नृमणा अजस्रमिन्धान एनं जरते स्वाधीः ।

என்பது.

உரை.

முதலில், அக்கினி, சூரிய வடிவாய் வானில் உண்டாயிற்று. பிறகு மண்ணுலகில் உண்டானவற்றையுமாரும் வெளிப்படையான வன்னி வடிவாய் உண்டாயிற்று கடலில் வடவானல வடிவாக இவ்வக்கினி உண்டாயிற்று. இவ்வாறு மூவகைத் தோற்றங்களிலும், வேள்வித்தலைவனிடத்தில் அநுக்கிரக புத்தியையுடைய இவ்வக்கினியை, புரோடாச முதலியவைகளால் வளர்த்து வழிபடுகின்றான் என்பது.

இரண்டாம் மந்திரம்.

विद्मा ते अग्ने त्रेधा त्रयाणि विद्मा ते सद्म विभृतं पुरुत्रा । विद्मा ते नाम परमं गुहा यद्विद्मा तमुत्सं यत आजगन्थ ।

என்பது.

உரை

அக்கினியே! மேலே, கூறிய உனது மூவகை வடிவங்களையும் அறிய விரும்புகின்றோம். மற்றும், காருகபத்தியம், ஆகவனீயம், அந்வாஹார்ய பசனம், ஆக்னீத்ரம், சாமித்திரம் என்னு மிவ்விடங்களில் உள்ள உனது இருப்பையும் உணர விரும்புகின்றோம். மற்றும், 'தேவேத்த' என்பது முதலிய மந்திரங்களிற் கூறப்பட்ட, குகை, குத்தியம், கோப்யம் என்னும் பெயர்களையும் உணர விரும்புகின்றோம். மற்றும், மழையில் மின்னல் வடிவாய்த் தோன்றி வருகின்ற உருவத்தையும் உணர்வோம் என்பது.

மூன்று மந்திரம்.

समुद्रे त्वा नृमणा अप्स्वन्तर्नृचक्षा ईधे दिवो अग्न ऊधन् । तृतीये त्वा रजसि तस्थिवांसमृतस्य योनौ महिषा अहिन्वन् ।

என்பது.

(வைத்த தீயைப்

உரை.

அக்கினியே! கடலில் வடவானலாய் இருக்கின்றதும், மழையில் மின்னலாய் இருக்கின்றதும், இவைகளைக் குறித்து மூன்றாவதாகிய ஒளி மண்டலத்தில் இரவியாய் இருக்கின்றதுமாகிய உன்னை, வேள்விச் செயலாளர்களுக்குள் அநுஷ்டானத்தில் மேன்மையுள்ளவனும், மறையோதுவோர்களுக்குள் மிக நன்றாய் மறை யோதுவோனுமாகிய வேள்வித்தலைவன் என்னும் யான் வளர்க்கின்றேன். வேள்வித்தலைவர்கள், வேள்வியின் வேதியில் உன்னைப் பிரியப்படுத்துகின்றார்கள் என்பது.

நான்காம் மந்திரம்

अक्रन्द दग्निस्तनयन्निवद्यौः क्षामारे रिहद्वीरुधस्समञ्जन् । सद्योज
ज्ञानो विहीमिद्धो अख्यदारोदसी भानुना भात्यन्तः ।

என்பது.

உரை.

இவ்வக்கினி, வானில் மேகம் இடி இடித்து பயிர்களின் பயத்தைப் போக்குவது போல், எமது துன்பத்தை யொழித்தற் பொருட்டும், எமது அநுகூலத்தை அறிவுறுத்துக் கொண்டும் கர்ச்சிக்கின்றது. இது, உண்டாகியவுடனே இருளைப் போக்கி திக்குக்களை விளக்குந் தன்மையாலென்க என்பது.

ஐந்தாம் மந்திரம்

उशिक्पावको अरतिस्सुमेधामर्तेष्वग्निरमृतो निधायि । इयर्ति
धूममरुषं भरिभ्रदुच्छुक्रेण शोचिषा द्यामिनक्षत् ।

என்பது.

உரை

அநுக்கிரகத்தின் பொருட்டு எம்மை விரும்புவதும், பரிசோதனை செய்வதும், வேள்வி செய்யாதவரிடத்தில் அன்பில்லாததும், வழிபடுவோரின் உள்ளக்கருத்தை மனத்திற் கொள்ளும் வன்மை யுடையதும், இறப்பிலாததுமாகிய அக்கினி மக்களிடத்தில் தாபிக்கப்பட்டிருக்கின்றது. அது, கண் முதலியவைகட்கு இடையூறில்லாத புகையை யுண்டாக்கிக் கொண்டு மேலே கிளம்புகின்றது. ஒளி மிகுந்த சுவாலையால் பரவுகின்றது என்பதாம்.

போற்றுதல்)

ஆறும் மந்திரம்

विश्वस्य केतुर्भुवनस्य गर्भ अरोदसी अपृणाज्जायमानः । वीडुं
चिदद्रिमभिनत्परायं जनायदग्निमयजन्त पञ्च ।

என்பது.

உரை.

உலகை யறிவதும், புவனத்தின் கருப்பமும், உண்டான மாத்திரத்தால் வானையும் மண்ணையும் தனதொளியாற் சூழ்ந்து கொள்வதுமாகிய அக்கினி, வெள்ளிக்கலைவன் முதலிய ஐந்து வெள்ளிச் செயலாளர்களால் வேட்கும் போது அருமி வடிவாய் இரவிக்குள்ப் சென்று உறுதியாகிய மலைபோல் மேகத்தைப் பிளந்தது என்பது.

---

ஏழாம் மந்திரம்

श्रीणा मुदारो धरुणो रयीणां मनीषाणां प्रार्पणस्सोमगोपाः । वसो
स्सू नुस्सहसो अप्सु राजा विभात्यग्र उषसा मिधानः ।

என்பது.

உரை.

கோ, குதிரை முதலிய சம்பத்தை நன்கு அளிப்பதும், தனத்தைத் தாங்குவதும், வேண்டியவர்கட்கு சுவர்க்கத்தை யடைவிப்பதும், சோமயாகத்தைப் பாதுகாப்பதும், வசித்தற்குரிய கடைதலின் வன்மையாற் றோன்றுவதும், மண்மழையில் மின்னலாய் விளங்குவதுமாகிய அக்கினி, அதிகாலையில் அக்கினி ஹோத்திர முதலியவைகளால் மிக விளங்குகின்றது என்பது.

---

எட்டாம் மந்திரம்

यस्ते अद्य कृणवद्भद्रशोचे पूपंदेव घृतवन्तमग्ने । प्रतन्नय प्रतरां
घस्यो अच्छाभि सुम्नन्देवभक्तं यविष्ठ ।

என்பது.

உரை

மங்கலத்தைத் தெரிவிப்போய்! தேவா! உனக்கு இப்போது எசமானன் நெய் தடவிய புரோடாசத்தைச் செய்கின்றான். கட்டிளமைய! அக்கினியே! தேவர்களிடத்து அன்புடையனைப் புரோடாசஞ் செய்கின்ற எசமா

(வைத்த தீயைப்

னனுக்கு, ஒளியுடையதும், மிகச் சிறந்ததும், வாழ்வதற்குச் சிறந்த காரண முமாகிய தனத்தை யளிப்பாயாக என்பது.

---

ஒன்பதாம் மந்திரம்

आतं भजसौ श्रवसेष्वग्न उक्थ उक्थ आभजसस्यमाने । प्रियस्सूर्यं
प्रियो अग्नाभवात्युज्जातेनभिनदद्दुज्जनित्वैः ।

என்பது.

உரை

கீர்த்தியடைய வவ்வொரு கர்மங்களிலும், நிட்கேவல்யம் பிரவுக முதலிய சஸ்திரங்க (கீதமில்லாதுதிக) ளில், தேவபக்தனுகிய எசமானனை இடையருது கருமானுட்டான பரனுய்ச் செய்வாயாக. இதனுல், அவ்வக் கருமங்களிற் செலுத்துவாயாக எனவும் அவ்வச் சஸ்திரங்களிற் செலுத்துவாயாக எனவும் வாக்கியமாயினமை காண்க. இவ் வேள்வித்தலைவன் சூரியனிடத்திற் பிரிய முடையவனுருய் புத்திரனுல் வளருவானுக. பௌத்திரனுலும் வளர்வானுக என்பது.

---

பத்தாம் மந்திரம்

त्वामग्ने यजमाना अनुद्यून्विश्वा वसूनि दधिरे वार्याणि । त्वया सह
द्रविण सिच्छमाना व्रजं गोमन्ता मुशिजो विवव्रुः ।

என்பது.

உரை.

அக்கினியே! எல்லா வேள்வித்தலைவர்களும், உன்னையே பின்பற்றிய வர்களாய் எல்லாத் தனங்களையும் பெற்றுக்கொண்டனர். உன்னுடு கூட இருக்கின்ற எசமானர்கள் மீண்டும் மிகுதியான தனத்தை விரும்பியவர்களா யும், அதனுல் முடியும் கருமங்களை விரும்பியவர்களாயு முள்ளவராய் பல்வகை கோச்சாலைகளுடன் கூடிய ஒரு வாழுமிடத்தை வேண்டுகின்றனர் என்பது.

---

பதினேராவது மந்திரம்

दृशानो रुक्म उर्व्या व्यद्यौद्दुर्मर्षमायुः श्रियेरुचानः । अग्नि रमृतो
अभवद्वयोभिर्यदे नंद्यौ रजनयत्सुरेताः ॥

என்பது.

போற்றுதல்)

உரை.

பிறரால் தாழ்த்தப்படாத வாழ்நாளை யடைவதற்கு விரும்பியதாயும், காணப்படும் பொன் போன்று பெரிய ஒளியுடன் விளங்கிக் கொண்டிருக்கின்ற தாயுமுள்ள அக்கினி, உணவுப் பொருளால் அமுதமாய் விட்டது. இவ்வக்கினியை, சுவர்க்கத்தில் வாழ்வோர்கள் இனிது உண்டாக்கினார்களாகையால் அமுதம் என்பது பொருந்தும் என்பது.

சாயணபாடியக் கருத்து.

மேற்கூறிய பதினொரு மந்திரங்களாலும், எஜமானன், உகா என்னும் மண் தொட்டியிலிருக்கின்ற தீயைப் போற்றக் கடவன் என்பதாம்.

ஈண்டு, முதல் நாள் விஷ்ணுக்கிரமமும் (கிழக்கில் நான்கடியெடுத்து வைத்தலும்) இரண்டாம் நாள், இவ்வாறு அவ்வக்கினியைப் போற்றுதலு மாம். ஆனால், சோமத்தை விலைக்கும் வாக்கும் நாடோ நாளிலேயே, விஷ்ணுக் கிரம் உபஸ்தானம் என்னும் இரண்டையுஞ் செய்தல் வேண்டுமென்பதை யுணர்க.

இரண்டாவது அநுவாகம் முற்றிற்று.

---

## மூன்றும் அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

अथाऽऽदधाति समिधमुद्यच्छेदुख्याऽनलम् ।
प्रेरयत्यथ समिधा गमयन्ते समिधं क्षिपेत् ॥ १ ॥
राजन्यश्चेत्प्रेतिमन्त्र आपो भस्माप्सु वेशयेत् ।
त्रिभिः प्रसेति तु द्वाभ्यामुखायां स्थापयेदमुम् ॥ २ ॥
पुनर्द्वाभ्यामुदैत्यग्निं पुनस्त्वेति समिन्धयेत् ।
बोधद्वाभ्यां मुपस्थानं मन्त्राः पञ्चदशेरिताः ॥ ३ ॥

சமித்தைத் தீயில் வைத்தல், உகாவை யெடுத்தல், வண்டியில் வைத்துக் கொண்டு செல்லுதல், வந்தவுடன் சமித்தை வைத்தல், அரசனானவன் சமித்தை வைத்தல், தொட்டியில் சாம்பர் மிகுக்கில் தண்ணீரிற் கொட்டல், சாம்பலையும் அக்கினியையும் தொட்டியில் வைத்தல், எடுத்துக் கொண்டு வருதல், சமித்தை வைத்தல், வளர்த்தல், போற்றுதல் என்பது.

---

நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
மூன்றும் அநுவாகம்.
மூன்று பஞ்சாதிகட்கு மேல் பதினொரு பதங்களைக் கொண்டது.

மகாக்கினி சயனத்தின் பொருட்டு தேவாராதனை செய்யுமிடத்தைக் கைக் கொள்ளுதற்குரிய மந்திரங்கள்.

अन्नपतेऽन्नस्य नो देह्यनमीवस्य शुष्मिणः । प्रप्रदातारन्तारिष ऊर्जन्नोधेहि द्विपदे चतुष्पदे । उदुत्वा विश्वे देवा अग्ने भरन्तु चित्तिभिः । सनो भव शिवतमस्सु प्रतीको विभावसुः । प्रेदग्ने ज्योतिष्मान् याहि शिवेभिरर्चिभिस्त्वम् । बृहद्भिर्भानुभिर्भासन्मा हि ꣳसीस्तनुवा प्रजाः । समिधाऽग्निन्दुवस्यत घृतैर्बोधयतातिथिम् । आ ॥ १ ॥ अस्मिन् हव्या जुहोतन । प्रप्रायमग्निर्भरतस्य शृण्वे वियत्सूर्यो नरोचते बृहद्भाः । अभियः पूरुं पृतना सुतस्थौ दीदाय दैव्यो अतिथिश्शिवो नः । आपो देवीः प्रतिगृह्णीत भस्मैतत्स्योने कृणुध्व ꣳ सुरभावुलोके । तस्मैनमन्ताञ्जनयस्सुपत्नीर्मातेव पुत्रं बिभृतास्वेनम् । अप्स्वग्ने सधिष्टव ॥ २ ॥ सौषधीरनुरुध्यसे । गर्भे सञ्जायसे पुनः । गर्भो अस्योषधीनाङ्गर्भो वनस्पतीनाम् । गर्भो विश्वस्य भूतस्याग्ने गर्भो अपामसि । प्रसद्य भस्मना योनिमपश्च पृथिवीमग्ने । स ꣳसृज्य मातृभिस्त्वञ्ज्योतिष्मान्पुनराऽसदः । पुनरासद्य सदनमपश्च पृथिवीमग्ने । शेषे मातुर्यथोपस्थेऽन्तरस्या ꣳ शिवतमः । पुनरूर्जा ॥ ३ ॥ निवर्तस्व पुनरग्न इषाऽऽयुषा । पुनर्नः पाहि विश्वतः । सहरय्या निवर्तस्वाग्ने पिन्वस्व धारया । विश्वप्स्निया

அடைதல்)

विश्वतस्परि । पुनस्त्वाऽऽदित्या रुद्रा वसवस्समिन्धतां पुनर्ब्रह्माणो वसुनीथ यज्ञैः । घृतेनत्वन्तनुवं वर्धयस्व सत्यास्सन्तु यजमानस्य कामाः । बोधानो अस्य वचसो यविष्ठमꣳ हिष्ठस्य प्रभृतस्य स्वधावः । पीयति त्वो अनु त्वो गृणाति वन्दारुस्तेतनुवं वन्दे अग्ने । सबोधिसूरिर्मघवा वसुदावा वसुपतिः । युयोध्यस्मद्द्वेषाꣳसि ॥

இரண்டாம் அநுவாகத்தில், அக்கினியைப் போற்றுதல் கூறப்பட்டது. இதில், மகாக்கினி சயனத்தின் பொருட்டு யாகசாலைப் பூமியை அடைதல் கூறப்படுகின்றது.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, 'येन देवा:' என்பது முதலிய மந்திரத்தால், வேள்வித்தலைவன் முன்போலவே உகாவிலுள்ள தீயில் சமித்துக்களை வைத்தல் வேண்டும்.

பிறகு, உச்சிப்போதில் விரதத்திற்குரிய பாலை வாங்கி வைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

முதல் விநியோகம்

அத்திச் சமித்தைத் தீயில் வைத்தல்

மந்திரம் :

अन्नपते ऽन्नस्य नो देह्यनमीवस्य शुष्मिणः । प्रप्रदातारं तारिष ऊर्जं नो धेहि द्विपदे चतुष्पदे ।

என்பது.

உரை.

உணவுப் பொருட்குத் தலைமையாகிய அக்கினியே! பிணியிலாததும், வன்மைக்குக் காரணமுமாகிய உணவுப் பொருளை எமக்குக் கொடுப்பாயாக. இனிய அவிகளை பலிக்கும் எசமானனை பிணியின்றி முழுதும் பாதுகாப்பாயாக. எம்முடைய இருகாற் பிராணிகட்கும், நாற்கால் விலங்குகட்கும் வன்மையைக் கொடுப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலிற் செய்தது போன்றே ஒரு அத்திக் குச்சிலை விரதப்பாலில் நனைத்து உகாத்தீயில் வைத்தல் வேண்டுமென்பதாம்.

வேள்விக்கிறைவன், ‘अग्नये अन्नपतय इदम्’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், சூத்திரப்படி, ‘देवस्य त्वा.........हस्ताभ्यां त्रैष्टुभेन छन्दसा’ என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு அக்கிக்குச்சியையும் பாலில் நனைக்காமல் அக்கிரியில் வைத்தல் வேண்டும்.

அதன் பிறகு, ‘दैवीं धियं’ என்பது முதல், நாபியைத் தொடும் வரை, முதனாள் இரவிற் செய்தபடியே செய்துக் கொள்க.

பிறகு, மாலையில், வாக்கை அடக்கல் முதல், பாலை யருந்தல் நாபியைத் தொடுதல் வரை செய்வது சமமாம். ஆனால் அன்றிரவு விழித்துக் கொண்டிருத்தல் இல்லை. இல்லாவிடினும், சோமயாகத்திற் செய்ததுபோல், ‘अग्ने त्वं’ என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். இத்துடன் இரண்டா நாட் கிரியை முடிந்து விட்டது.

இனி மூன்றுநாட் காலையில் முன்போல் வாக்கை அடக்கல் விடுதல், சோமத்தை வழிபடல், கழுத்தில் பொன் தகடு கட்டிக்கொள்ளல் முதலிய கிரியைகளை, முதலாவது நாளிற் செய்தது போலவே செய்து கொண்டுவந்து பாலை அருந்தும் வரை செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும். இதுவரை தனது வீட்டில் நடக்கின்ற கிரியைகள் முடிந்தன.

இனி, வெளியில் யாகஞ் செய்புமிடத்திற்கு அவ்வக்கினியைக் கொண்டு போவதற்குத் தொடங்கல்.

---

இரண்டாவது விநியோகம்.

தீத்தோட்டியை மேலே தூக்குதல்

மந்திரம் :

उदुत्वा विश्वे देवा अग्ने भरन्तु चित्तिभिः । सनो भव शिवतमस्सु प्रतीको विभावसुः ।

என்பது.

உரை

அக்கினியே! உன்னை, எல்லாத் தேவர்களும், பிராணன்களென்னும் மனோவிருத்திகளால் மேல் நோக்காய் உள்ளே நிறைப்பார்கள். அத்தகைய நீ, எமக்கு, மிகுந்த மங்களமாகவும், சாந்தமாகவும், மலர் முகமாகவும், ஒளியால் வாழ்விப்போனாகவும் இருக்கின்றாய் என்பது.

அடைதல்)

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், உகாவை மேலே எடுத்தல் வேண்டுமென்பதாம்.

பிறகு, சூத்திரப்படி, 'सीदत्वं' என்பது முதலிய முன் அநுவாகத்தி லுள்ள நான்கு மந்திரங்களாலும், அந்தத் தீத்தொட்டியை, காளைமாடு கட்டிய வண்டியின்மீது வைத்தல் வேண்டும்.

மற்றும், அங்குள்ள இரண்டு அக்கினிகளையும் அவ்வண்டியில் வைத்தல் வேண்டும் என்பதையு முணர்க.

---

### மூன்றும் விநியோகம்.

### யாகசாலைக்குச் செல்லல்

மந்திரம் :

प्रेद्ग्ने ज्योतिष्मान्याहि शिवेभिरर्चिभिस्त्वं । बृहद्भिर्भानुभिर्भासन्
माहिँ सीस्तनुवा प्रजाः ।

என்பது.

### உரை

சாந்தமாகிய சுவாலைகளாற் பிரகாசிக்கின்ற அக்கினியே! நீ. தேவாராதனை (யாகஞ்) செய்யுமிடத்தை நோக்கிச் செல்வாயாக. மிகுந்த ஒளியால் உலகைவிளக்கும் உனது திருமேனியால் மக்களைத் துன்புறுத்தாதே என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வண்டியை ஓட்டிக்கொண்டு யாகஞ் செய்யுமிடத்திற்குச் செல்லல் வேண்டுமென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, 'अक्रन्दत्' என்பது முதலிய முன் அநுவாக மந்திரத்தால், எழுகின்ற வண்டியின் இருசிக்கட்டையின் ஒலியைப் போற்றல் வேண்டும்.

[illegible] ' [illegible] ' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்து விட்டு, காருகபத்தியம் முதலிய மூன்று அக்கினிக் குண்டங்களையுஞ் செய்து கொள்வதுடன் பிராசீன வம்சம் என்னும் கொட்டகையையும் போட்டுக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, உகாக்கினி முதலிய மூன்றக்கினிகளையும் மூன்று குண்டங்களிலும் வைத்தல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்.

சமித்தை வைத்தல்

மந்திரம் :

समिधाऽग्निं दुवस्यतघृतैर्बोधयता तिथिम् । आऽस्मिन्हव्या जुहोतन ।

என்பது.

உரை

வேள்வித்தலைவ வேள்விச் செயலாளர்களே! நீவிர், இவ்வக்கினியை சமித்துக்களால் ஆராதிப்பீர்களாக. பிறகு, இவ்வக்கினியில் அவிகள் முழுதையும் ஓமஞ் செய்வீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன் ஒரு சமித்தை பாலில் நனைத்து உகாத்தீயில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

யாகஞ் செய்யுமிடத்திற்குப் போதல் முதல் இதுவரை எசமானனுடைய செய்கையாம்.

---

ஐந்தாம் விநியோகம்

அரசனானவன் சமித்தை வைத்தல்

மந்திரம் :

प्रप्रायमग्निर्भरतस्य शृण्वे वियत्सूर्यो नरोचते बृहद्भाः । अभियः
पूरुं पृतनासु तस्थौ दीदा यदैव्यो अतिथिश्शिवो नः ।

என்பது.

உரை

இவ்வக்கினி, அவியைத் தாங்கி நிற்கும் எசமானன் அழைப்பதை நன்கு கேட்குக. மற்றும், சூரியனிடத்திலும் பேரொளியுடன் விளங்குவதும்; போரில் வெற்றிபெறச் செய்வதுமாகிய இவ்வக்கினி, தேவர்கட்கு இனியதும், மங்களவடிவுமாகி யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

அரசனாயிருப்பின், திருஷ்டுப்சந்தமுடைய இம் மந்திரத்தால் சமித்தை அத்தீயில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, உகையில் தீயுண்டாக்கியதில் சாம்பர் நிறைந்து போய்விடில் உகையை உறியோடு நீரிருக்குமிடத்திற்குக் கொண்டு

அடைதல்)

போய், 'इमᳪ सयोनि......इमᳪ स्तनं' என்பவற்றை முதலாகக் கொண்ட இரண்டு மந்திரங்களாலும், வேட்போன் உகையிலிருக்கும் அக்கினியை எடுத்து வேறாக வைத்து விடல் வேண்டும்.

---

## ஆறும் விநியோகம்.

### சாம்பரை நீரிற் கொட்டுதலில்

### முதல் மந்திரம்

आपो देवीः प्रतिगृह्णीत भस्मैतत्स्योने कृणुध्वᳪ सुरभावुलोके। तस्मै नमन्तां जनयस्सुपत्नीर्मातेव पुत्रं विभृतास्वेनम्।

என்பது.

#### உரை.

தண்ணீராகிய தேவியே! நீ, உகாவென்னும் நீர்த்தொட்டியிற் சேர்ந்திருக்கின்ற சாம்பரைப் பெற்றுக் கொள்வாயாக. பெற்றுக்கொண்ட சாம்பரை நறுமணத்துடன் உலகில் நிலை நாட்டுவாயாக. மற்றும், அழகிய வருணனென்னும் கணவனையுடையதும், அக்கினியை யுண்டாக்குவதுமாகிய தண்ணீராகிய தேவியே! நீ, அவ்வக்கினியைப் பாதுகாப்பதற்கு விழித்துக் கொண்டிருப்பாயாக. தண்ணீரே! நீ, மாதா, குழந்தையைப் பாதுகாப்பது போல் இவ்வக்கினியை பாதுகாப்பாயாக என்பது. தமிழை நோக்கி தண்ணீர் என்னும் ஒருமை வந்தது.

---

### இரண்டாவது மந்திரம்

अप्स्वग्ने सधिष्टवसौषधीरनुरुध्यसे। गर्भे सञ्जायसे पुनः।

என்பது.

#### உரை

அக்கினியே! உன்னுடைய வன்மை வடிவாகிய சாம்பர் தண்ணீரில் இருக்கின்றது. அத்தகைய நீ, கொடி செடிகளைக் கருவுடையவையாக. இ[illegible]க்கினியாக கொடி செடிகள் நின்னை பற்றுக் கொள்ளுகின்றன. நீக்கடைக் கோலாகிய கருப்பத்திலிருந்து அடிக்கடி பிறக்கின்றாய் என்பது.

---

### மூன்றும் மந்திரம்

गर्भो अस्योषधीनां गर्भो वनस्पतीनाम्। गर्भो विश्वस्य भूतस्याग्ने गर्भो अपामसि।

என்பது.

### உரை

மருந்தாகிய கொடி செடிகளிலிருந்து உண்டாகின்றதால் அக்கினியே! நீ, கொடி செடிகளின் கர்ப்பமாக இருக்கின்றாய். நீக்கடைக் கோலிலிருந்து உண்டாகின்றதால் வனஸ்பதிகளின் கர்ப்பமாயிருக்கின்றாய். அக்கினியே! நீ, சாடாராக்கினியா யிருத்தலின் எல்லா மரங்களின் கருப்பமாயிருக்கின்றாய். வடவானலம் மின்னல் வடிவாயிருத்தலின் நீரின் கர்ப்பமாயிருக்கின்றாய் என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரங்களால் உறியுடன் எடுத்து உகாவிலுள்ள சாம்பரைத் தண்ணீரிற் கொட்டி விடல் வேண்டும். உறியிலிருந்து உகாவைத் தனியே எடுத்தல் கூடாது என்பதாம்.

தண்ணீரிற் கொட்டி விட்ட சாம்பரில் மந்திரமில்லாமலே ஒரு பிடியெடுத்து அதிலுள்ள தண்ணீரைப் பிழிந்து விட்டு வைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

## ஏழாம் விநியோகம்.

### பிழிந்தெடுத்த சாம்பரை உகாவில் போடுதலில்

### முதல் மந்திரம்.

प्रसद्य भस्मना योनिमपश्च पृथिवीमग्ने । सꣳसृज्य मातृभिस्त्वं ज्योतिष्मान्पुनरासदः । என்பது.

### உரை

அக்கினியே! நீ, காரணமாகிய பூமியையும் நீரையும் அடைந்து அவ்விரண்டுடனும் கலந்து கொண்டு மிகுந்த வொளியுடையதாய் மீண்டும் உனது இடத்தையே அடைவாயாக என்பது.

---

### இரண்டாவது மந்திரம்.

पुनरासद्य सदनमपश्च पृथिवीमग्ने । शेषेमातुर्यथोपस्थेऽन्तरस्याꣳ शिवतमः । என்பது.

### உரை

அக்கினியே! நீ, தனதிடமாகிய, பூமியையும் நீரையும் அடைந்து, மீண்டும் இந்த உகாவின் நடுவில் தாங்கிக் கொண்டிருக்கின்றாய். எதைப்போலெனின்? குழந்தை அன்னையின் மடியில் சுகமாய்த் தாங்குவதுபோல் என்பது.

அடைதல்)

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும் எடுத்து வைத்திருந்த ஒரு பிடி சாம்பலையும் அக்கினியையும் உகாவில் (தொட்டியில்) வைத்துவிடல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்.

திரும்பி வருதலில்

முதல் மந்திரம்.

पुनरूर्जा निवर्तस्व पुनरग्न इषाऽऽयुषा । पुनर्नः पाहि विश्वतः ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, பால் முதலிய இரசத்துடன் மீண்டும் வருவாயாக. உணவுப் பொருளுடனும், ஆயுளுடனும் மீண்டும் வருவாயாக. எம்மை, எல்லாப் பாவங்களினின்றும் பாதுகாப்பாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

सहरय्या निवर्तस्वाग्ने पिन्वस्व धारया । विश्वप्स्निया विश्वतस्परि ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, தனத்துடன் வருவாயாக. உலகம் அருந்தும் மழைத் தண்ணீரை, புல், கொடி, மர முதலியவைகளின் மீது தெளிப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும் உகாவை எடுத்துக் கொண்டு திரும்பி வரல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி உகாவைக் கொண்டு வந்து வைத்த பிறகு வேள்வித் தலைவன், 'येन देवा:' என்பது முதலிய மந்திரத்தால் உகையில் சமித்துக்களை வைத்தல் வேண்டும்.

---

ஒன்பதாம் விநியோகம்.

மீண்டும் உகாத்தீயை வளர்த்தல்

மந்திரம் :

पुनस्त्वाऽऽदित्या रुद्रा वसवस्समिन्धतां पुनर्ब्रह्माणो वसुनीथ यज्ञैः ।
घृतेन त्वं तनुवो वर्धयस्व सत्यास्सन्तु यजमानस्य कामाः ।

என்பது.

உரை

அக்கினியே! உன்னை, உருத்திரர்களும், வசுக்களும் மீண்டும் வளர்ப்பார்களாக. தனத்தையளிக்கும் அக்கினியே! உன்னை, வேள்விச்செயலாளர்கள் வேள்விநிமித்தமாக மீண்டும் வளர்ப்பார்களாக. நீ, நெய்யாற்களிப்புற்று எமது உடம்பை வளர்ப்பாயாக. நீ களிக்கும்போது எசமானனுடைய விருப்பங்கள் உண்மையாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உகாத்தீயில் மற்றொரு சமித்தை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

பத்தாம் விநியோகம்.

தீயைப் போற்றலில்

முதல் மந்திரம்

बोधानो अस्य वचसो यविष्ठमꣳहिष्ठस्य प्रभृतस्य स्वधावः । पीयतित्वो अनुत्वो गृणाति वन्दारुस्ते तनुवं वन्दे अग्ने ।

என்பது.

உரை.

சுவதா என்பதால் உபலக்கணமாயுள்ள உணவுப் பொருளையுடைய அக்கினியே! கட்டிளமைய! அதிசயமாய் வளருவதற்குக் காரணமும், பேரன்பால் தேடியதுமாகிய உனது துதியாகிய வாக்கின் கருத்தை யுணர்வாயாக. அதாவது எசமானன் மிகுதியாய்க் கூறுகின்றான், துதிப்போன் உரியதைக் கூறுகின்றான் ஆதலின் எமது கருத்தை யுணர்வாயாக என்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்

सबोधिसूरिर्मघवा वसुदावा वसुपतिः । युयोध्यस्मद्द्वेषाꣳसि ॥

என்பது.

உரை

வித்வானும், அன்னமுடையவனும், தனமுடையவனும், தனத்திற்குத் தலைவனுமாகிய நீ; எமதிடத்திற் பொறாமை யுடையோர்களை எம்மிலிருந்து பிரித்து விடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும் வேட்போன் உகாத்தீயைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

அடைதல்)

பிறகு, மாலையில், வாக்கை யடக்கல், இரவில் விரதம் 'அக்னேத்வம்' என்பது முதலிய மந்திர செபம் என்னுமிவைகளை முன் செய்தது போலவே செய்துகொள்க.

இத்துடன் மூன்றாவது நாளிற் செய்ய வேண்டியவைகள் முடிந்தன.

மூன்றும் அநுவாகம் முடிந்தது.

---

நான்காம் அநுவாகம்

விடயச் சுருக்கம்.

अपोद्घन्ति चितिस्थानमग्नेस्तु सिकतां (ता) वपेत् ।
संज्ञानमूषाञ्शिवपेत्संया (याः) संमृजते द्वयम् ॥ १ ॥
अयं चतसृभिः प्राचीरिष्टका आदधाति हि ।
इडां द्वाभ्यां पुरस्ताद्वे चिद्वाभ्यां पश्चिमे द्वयम् ॥ २ ॥
लोकं लोकं पृणा द्वाभ्यां मन्त्रा अत्र चतुर्दश ।

காருகபத்ய சயனஞ் செய்யப்போகும் இடத்தைக் கொத்துதல், மணலைப் போடுதல், உப்பு மண்ணைப் போடுதல், இவ்விரண்டு மண்களையும் ஒன்றாய்க் கலந்து விடுதல், நான்கு மந்திரங்களால் நான்கு செங்கற் கற்களை வைத்தல், இரண்டு மந்திரங்களால் கிழக்கில் இரண்டு கற்களை வைத்தல், இரண்டு மந்திரங்களால் மேற்கில் இரண்டு கற்களை வைத்தல், இரண்டு மந்திரங்களால் மீந்த கற்களை வைத்தல் என்பது.

---

நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

நான்காம் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிகட்கு மேல் நாற்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

காருகபத்தியச் செங்கல் அடுக்கைக் கூறு மந்திரங்கள்.

अपेतवीतविचसर्पतातो येऽत्रऽस्थपुराणायेच नूतनाः । अदा-
दिदं यमोऽवसानं पृथिव्या अक्रन्निमं पितरो लोकमस्मै । अग्नेर्भ-
स्मास्यग्नेः पुरीषमसि संज्ञानमसि कामधरणं मयिते कामधरणं भूयात् ।

संयावः प्रियास्तनुवस्संप्रिया हृदयानिवः । आत्मावो अस्तु ॥ १ ॥
संप्रियस्संप्रियास्तनुवो मम । अयꣳसो अग्निर्यस्मिन्त्सोममिन्द्रस्सु-
तन्दधे जठरे वावशानः । सहस्रियं वाजमत्यन्नसप्तिꣳ ससवान्त्सन्
स्स्तूयसे जातवेदः ॥ अग्ने दिवो अर्णमच्छाजिगास्यच्छा देवाꣳ ऊचिषे
धिष्णिया ये । याः परस्ताद्रोचने सूर्यस्ययाश्चावस्तादुपतिष्ठन्त
आपः । अग्ने यत्ते दिवि वर्चः । पृथिव्यां य दोषधीषु ॥ २ ॥
अप्सुवा यजत्र । येनान्तरिक्षमुर्वाततन्थत्वेषस्सभानुरर्णवो नृचक्षाः ।
पुरीष्यासो अग्नयः प्रावणेभिस्सजोषसः जुषन्ताꣳ हव्यमाहुतमन-
मीवा इषो महीः । इडामग्ने पुरुदꣳसꣳसनिङ्गोश्शश्वत्तमꣳ हवमानाय
साध । स्यान्नस्सूनुस्तनयो विजावाऽग्ने सः ते सुमतिर्भूत्वस्मे ।
अयन्ते योनिर्ऋत्वियो यतो जातो अरोचथाः । तञ्जानन् ॥ ३ ॥
अग्न आरोहाथानो वर्धया रयिम् । चिदसि तया देवतयाऽङ्गिर-
स्वध्रुवासीद परिचिदसि तया देवतयाऽङ्गिरस्वध्रुवासीद लोकं पृण-
छिद्रं पृणाथोसीद शिवात्वम् । इन्द्राग्नीत्वा बृहस्पतिरस्मिन् योना-
वसीषदन् । ता अस्य सूददोहसस्सोमꣳ श्रीणन्ति पृश्नयः । जन्म-
न्देवानां विशस्त्रिष्वारोचने दिवः ॥ ४ ॥

*மூன்றும் அநுவாகத்தில், உகாத்தீயை, மகாக்கினி சயனஞ் செய்யுமிடத்திற்குக் கொண்டு போதல் கூறப்பட்டது. இதில், காருகபத்தியத்தில் செங்கல் அடுக்குவதை (சயனத்தை) க் கூறுகின்றது.*

*ஈண்டுச் சூத்திரப்படி, நான்காம் நாள் காலையில், வேள்வித்தலைவன் வாக்கை யடக்கல், விடுதல், சோமத்தை வழிபடல், பொன் தகட்டைக் கட்டிக் கொள்ளல், உகாவை வைத்தல் வரையில் செய்து விட்டு, 'दिवस्परि' என்பது முதலிய மந்திரங்களாற் போற்றல் வேண்டும்.*

சயனம்)

இன்று, சோமத்தை விலைக்கு வாங்க வேண்டிய தினமாதலின் விஷ்ணுக்கிரமம். (கிழக்கில் அடி யெடுத்து வைத்தல்). போற்றுதல் (உபஸ்தானம்) என்னும் இரண்டையுஞ் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க. இது மூன்றுங் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

பிறகு, ஆகவனீய மிருக்குமிடத்தில் ஒருமார் அகலம் அதாவது தொண்ணூற்றாறு அங்குலம், சதுரமாக்கிக் கோடு கிழித்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

---

முதல் விநியோகம்

மண்ணைக் கோத்துதல்

மந்திரம் :

अपेतवीतविचसर्पतातो येऽत्रऽस्थ पुराणा येच नूतनाः । अदादिदं यमो नूतनाः । अदादिदं यमोऽवसानं पृथिव्या अक्रन्निमं पितरो लोकमस्मै ।

என்பது.

உரை.

எமனுடைய கிங்கரர்களே! பண்டைக்காலந் தொட்டு இங்கிருப்பவர்களும் இப்போதிருப்பவர்களுமான நீங்கள், கூட்டங்கலைந்து இங்கிருந்து வெளியில் தூரமாய்ப் போய் விடுவீர்களாக. பூமியின் முடிவாகிய இவ்விடத்தை எமன் எமக்குக் கொடுத்து விட்டனன். பிதிர்க்களும், எசமானன் பொருட்டு இந்த இடத்தை அக்கினி சயனத்திற்கு இடமாகச் செய்துள்ளார்கள் என்பது. பூமியில் எங்கும் எமபடர்கள் இருக்கின்றார்கள் என்பதை யுணர்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் கோடு கிழித்த இடத்தைக் கொத்திக் கிளறி விடல் வேண்டு மென்பதாம்.

மற்றும் மந்திரமின்றியே நீரைத் தொட்டுக் கொண்டு, பசுமையாய் இலைகளுடன் கூடிய புரசங் கொம்பால், கொத்திய விடத்தைப் பெருக்கினதும் அக்கினியை வடக்கில் எறிந்து விட்டு நீரைக் கையிற் றொட்டுக்கொண்டு 'शंनो देवीः' என்பது முதலிய மந்திரத்தால் அதில் நீரைத் தெளித்தல் வேண்டும் என்பதையு முணர்க.

---

## இரண்டாம் விநியோகம்.

மணலை இறைத்தல்

மந்திரம் :

अग्नेर्भस्मास्यग्नेः पुरीषमसि ।

என்பது.

உரை

மணலே! நீ, அக்கினியை நன்கு பிரகாசிப்பதாயிருக்கின்றாய். அங்ஙனமே அக்கினி யிருப்பதற்கு இடமாயுமிருக்கின்றாய். மணலைப் போட்டால் தீ மிகக் கொழுந்து விட்டெரியும் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கொத்தியுள்ள விடத்தில் மணலை இறைத்து விடல் வேண்டு மென்பதாம்.

---

## மூன்றாம் விநியோகம்

உவர் மண்ணை யிறைத்தல்

மந்திரம் :

संज्ञानमसि कामधरणं मयि ते कामधरणं भूयात् ।

என்பது.

உரை.

உவர் மண்ணே! நீ பசுவைப் பற்றிய நல்லுணர்ச்சியுடையதா யிருக்கின்றாய். அதாவது ஆடு, உவர்ப்பூமி இன்னதென்றுணர்ந்து அதிற் புகுகின்றது என்பதாம். மற்றும், வேள்வி வாயிலாக விரும்பியவைகளைத் தாங்குகின்றதா யிருக்கின்றதாய். இது, மேல், பிராம்மணத்திற் கூறப்படும் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உவர் மண்ணையும் அவ்விடத்தில் இறைத்து விடல் வேண்டு மென்பதாம்

ஈண்டு, 'यद्दश्चन्द्रमसि' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால் அக்கினியை ஆதானஞ் செய்வது போல் மனதில் எண்ணிக் கொள்ளல் வேண்டும்.

---

சயனம்)

நான்காம் விநியோகம்

மணலையும் உவர் மண்ணையுங் கலத்தல்

மந்திரம் :

संयावः प्रियास्तनुवस्संप्रिया हृदयानि वः आत्मावो अस्तु । संप्रियस्संप्रियास्तनुवो मम ।

என்பது.

உரை.

மணல் உவர் மண்களே! உங்களுடைய பிரிய உடம்புகளிரண்டும் ஒன்றுபடுக. உங்களுடைய பிரியமான உள்ளங்களும் ஒன்றாகுக. உங்களுடைய ஆன்மாக்களும் ஒன்றாகுக. மற்றும், எனது உடம்பும் ஒன்றாய்ச் சேருக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மணலையும் உவர் மண்ணையும் ஒன்றாய்க் கலந்து விடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, 'चितस्यपरि' என்பது முதலிய மேல்வரும் மந்திரங்களால், இருபத்தொரு சுக்கான் கற்களையும், மும் மூன்றாகக் கோடு கிழித்திருப்பதற்கு வெளியில் ஏழு முறையாகப் போட்டு வைத்தல் வேண்டும்.

பிறகு, 'व्रजं कृणुध्वं' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், போட்டுள்ள இருபத்தொரு சுக்கான் கற்களையும் கையாற்றொடுதல் வேண்டும்.

---

ஐந்தாம் விநியோகம்

நான்கு செங்கல்களை வைப்பதில்

முதல் மந்திரம்

अय८ँसो अग्निर्यस्मिन्त्सोममिन्द्रस्सुतन्दधे जठरे वावशानः । सहस्रियं वाजमत्यन्नसप्ति८ँ स सचान्त्सन्त्तूयसे जातवेदः ।

என்பது.

உரை.

எந்தக் காருகபத்திய சயன வடிவ அக்கினியில், விருப்புற்ற இந்திரன் பிழிந்த சோமரசத்தை வயிற்றில் வைத்துக்கொண்டானோ, அத்தகைய இவ் வக்கினி இப்போது செங்கற் கற்களால் பாவச் செய்யப்படுகின்றது. தோன்றியவற்றை யுணரும் அக்கினியே! நீ, விரைவில் ஓடுங் குதிரைபோல் ஆயிரக்

கணக்கான பொன்னுகளுடன் உணவுப் பொருளையுங் கொடுக்கின்றாயிருந்து எசமானனால் துதிக்கப் பெறுகின்றாய் என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

अग्ने दिवो अर्णमच्छाजिगास्यच्छा देवाꣳ ऊचिषे धिष्णिया ये । याः परस्ताद्रोचने सूर्यस्य याश्चावस्ता दुपतिष्ठन्त आपः ।

என்பது.

உரை

செங்கல் வடிவாகிய அக்கினியே! நீ, வானிலிருந்து நீரை இனிது அடைகின்றாய். அதாவது, வேள்வி வாயிலாக புஷ்டியை யடைகின்றாய் என்பதாம். எந்தத் தேவதைகளை மேடையிலிருந்து குறிப்பிட்டுக் கூப்பிடுகின்றனையோ, அவர்கள் வந்து அவிகளை ஏற்றுக் கொள்கின்றார்கள். ஒளிமண்டலத்திலிருக்கின்றதும், கீழே யிருக்கின்றதுமாகிய நீர்களனைத்துங் கூடி இங்கு வருக என்பது.

---

மூன்றும் மந்திரம்

अग्ने यत्ते दिवि वर्चः पृथिव्यां य दोषधीषु । अप्सुवा यजत्र । येनान्तरिक्षमुर्वाततन्थत्वेषस्सभानुरर्णवो नृचक्षाः ।

என்பது.

உரை

யாகத்தை யுண்டாக்கும் அக்கினியே! உனது ஒளியானது வானில் இரவியாயிருக்கின்றது, பூமியில் தீயின் சுவாலையாக இருக்கின்றது. கொடி செடிகளில் பழுக்குஞ் சமய உணவாயிருக்கின்றது. நீரில் வடவானலமாக இருக்கின்றது. உன்னுடைய ஒளியால் மின்னல் வடிவாய் வானம் விளக்கப் படுகின்றது. உனது ஒளிக்கூட்டம் கடல்போல் பெரிதும் மக்கட்குள் கீர்த்தி பெற்றது. இத்தகைய ஒளி வடிவ செங்கல் கற்களை வைக்கின்றேன் என்பது.

---

நான்காம் மந்திரம்

पुरीष्यासो अग्नयः प्रावणेभिस्सजोषसः । जुषन्ताꣳ हव्यमाहुतमनमीवा इषो महीः ।

என்பது.

சயனம்)

உரை.

மண்ணில் உண்டானவைகளும், நன்கு போற்றும் மனங்களில் ஒத்த பிரிய முடையவைகளும், பிணியற்றவைகளும், வேண்டியவற்றை யடைதற் குக் காரணங்களுமான செங்கல் வடிவ அக்கினிகள் அவிகளை யுண்பனவாகுக. அத்தகைய செங்கல் கற்களை அடுக்கி வைக்கின்றேன் என்பது எஞ்சி நின்றது.

சாயணபாடியக் கருத்து.

ஈண்டு, காருகபத்திய சயனம் என்பது, முப்பத்திரண்டு அங்குலங்கள் நீளமும், பதின்மூன்று அங்குலங்கள் அகலமும், ஆறங்குலம் உயரமுமாக இருபத்தொரு செங்கல் கற்களை, கிழக்கு மேற்கில் நீளமாய் மும் மூன்று கற்களும், வடக்குத் தெற்கில் ஏழு கற்களுமாக அடுக்குதலாம்.

அவற்றுள், இரண்டாவது வரிசையில் இரண்டாவது கல் முதல் நான்கு கற்களை, 'तयादेवतयाऽङ्गिरस्वद् ध्रुवासीद' என்னும் மந்திரத்தையும் இம் மந்திரங் களின் முடிவில் சேர்த்து ஓதிக்கொண்டு வைத்தல் வேண்டு மென்பதாம்.

நான்கு செங்கற்களை வைத்து, சுவர்க்கத்தை யடைந்த தேவர்களின் திசைகள் நான்கும் பாதுகாப்பாயிருத்தற் பொருட்டு இந்த நான்கு கற்களு மாம்.

---

ஆறும் விநியோகம்

மற்றும் இரண்டு செங்கல்கள் வைத்தலில்

முதல் மந்திரம்

इडामग्ने पुरुदꣳसꣳ सनिङ्गोश्शश्वत्तमꣳ हवमानायसाध । स्यान्नस्सूनु-
स्तनयो विजावाऽग्ने साते सुमतिर्भूत्वस्मे ।

என்பது.

உரை.

அக்கினியே! எல்லாராலுந் துதிக்கப்படுவதாம், பல்வகைத் தரிசனமுடையதாம், முழுதுங் கெடாதிருப்பதுமாகிய நீ, பசு முதலியவைகளைக் கொடுப் போனைத் தேடுவாயாக. மற்றும், உனது கிருபையால், நல்ல புத்திரனுண்டா குக. உன்னுடைய அநுக்கிரக புத்தி எப்போதும் எம்மிடத்தில் இருக்குக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

अयन्ते योनीर्ऋत्वियो यतो जातो अरोचथाः । तञ्जानन् । अग्न आरो-
हाथानो वर्धया रयिम् ।

என்பது.

உரை.

அக்கினியே! செங்கற் கற்களான பொருள்கள் உன்னுடைய பிறப்பிற் கிடமாம். இது, இருதுகாலத்தில் ஆண் பெண்ணின் கூட்டுறவிற்கு ஒப்பாமாதலினென்க. நீ எவ்வாறுண்டாகி விளங்குவையோ, அவ்வாற்றையுணர்ந்து இதில் ஏறிக் கொள்வாயாக. பிறகு, எமக்குச் செல்வத்தை வளர்ப்பாயாக என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களிரண்டாலும், மூன்றாவது வரிசையில் தென்பக்கத்திலிருந்து, நான்காவது ஐந்தாவது செங்கற் கற்களை வைத்தல் வேண்டுமென்பதாம்.

ஏழாம் விநியோகம்

மற்றிரண்டு செங்கல்களை வைத்தலில்
முதல் மந்திரம்

चिदसि, तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை

செங்கலே! நீ, போகங்களைத் தேடிவைப்பதாயிருக்கின்றாய். எந்தத் தேவதையால் நீ அபிமானிக்கப் பெற்றிருக்கின்றனையோ, அந்தத் தேவதையால் அநுக்கிரகிக்கப்பெற்ற நீ, அங்கிரச ரிஷி வைத்த செங்கல் போன்று உறுதியாயிருப்பாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

परिचिदसि, तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை

செங்கற்கல்லே! நீ, எல்லாவகையாலும் போகங்களைத் தேடுவதாயிருக்கின்றாய். மற்றவை முன்போல என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும், முதல் வரிசையில், நான்காவது ஐந்தாவது இரண்டு கற்களையும் வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

சயனம்)

## எட்டாம் விநியோகம்

### எஞ்சிய இடங்களில் கல்லுகளை வைத்தலில்

### முதல் மந்திரம்

लोकं पृणच्छिद्रं पृणाथोसीद शिवात्वम् । इन्द्राग्नीत्वा बृहस्पतिरस्मिन् योनावसीषदन् ।

என்பது.

உரை.

செங்கலே! நீ காருகபத்திய சயனத்தில், முற்கூறிய செங்கல்களால் நிறைக்கப்படாத இடங்களை நிறைப்பாயாக. அவற்றின் இடை வெளியை மூடுவாயாக. மற்றும், நீ சாந்தமாயிருப்பாயாக. இந்திரன், அக்கினி, பிருகற்பதி என்னும் இவர்கள் இங்கு இருக்கின்றார்கள் என்பது.

---

### இரண்டாம் மந்திரம்

ता अस्य सूददोहसस्सोमꣳ श्रीणन्ति पृश्नयः । जन्मन्देवानां विशस्त्रिष्वारोचने दिवः ।

என்பது.

உரை.

சுவர்க்கத்தை விளக்குவதிலும், எசமானனுடைய பிறப்பிலும் நிமித்தமாயிருப்பதால் தேவர்களின் பிரசைகளும், கோவிற்கு ஒப்பானவைகளும், உணவுப் பொருளைக் கொடுப்பவைகளுமான செங்கல்கள், சோமத்தைப் பக்குவஞ் செய்கின்றன. எப்போதெனின்? பிழியும் காலை முதலிய மூன்று காலங்களிலு மென்க. இக்கல்லுகள் இடையறுமல் சோமத்தைப் பக்குவஞ் செய்தற் பொருட்டுள்ளவைகள் என்பது.

### சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களிரண்டையும் மீண்டும் மீண்டும் ஓதுவதுடன், 'தயா தேவதயா' என்பது முதலியவற்றையுஞ் சேர்த்துக் கொண்டு பதின்மூன்று செங்கல்களை வைத்து சயனத்தை நிறைக்குமிடத்து வேண்டுமென்பதாம்.

---

முதலாவது செங்கல் அடுக்கு முறையை இப்படத்திற் காண்க.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 21 | 18 | 6 | 5 | 15 | 13 | 11 |
| 20 | 17 | 4 | 3 | 2 | 1 | 10 |
| 19 | 16 | 8 | 7 | 14 | 12 | 9 |

இவ்வநுவாக சேடம்:

*ஈண்டுச் சூத்திர முதலியவைகளைத் தழுவி சாத்வாலத்திலிருந்து மணலைக் கொண்டுவந்து, 'ப்ருதிவி திவி' என்பது முதலிய மந்திரத்தால், அடுக்கிய செங்கல்களின் மேல் இறைத்து விடல் வேண்டும்.*

*பிறகு, முன் அடுக்கிய வரிசைகளின் மேல் இரண்டாம் வரிசையை, தெற்கு வடக்கில் மும்மூன்று கல்லுகளும், கிழக்கு மேற்கில் ஏழேழு கல்லுகளுமாக முதல் வரிசை இரண்டாவது முதல் ஆறு கல்லுகளையும், இரண்டாவது வரிசையிலும் மூன்றாவது வரிசையிலும் ஒவ்வொரு கல்லுக்களையும் முற்கூறிய மந்திரங்களாலேயே வைத்துவிட்டு, முன் போல் 'லோகம் பிருண' என்பதை மீண்டு மீண்டும் ஓதிக்கொண்டு எஞ்சிய பதின்மூன்று கல்லுகளையும் அடுக்கல் வேண்டும்.*

சயனம்)

இரண்டாம் வரிசையை இப் படத்திற் காண்க.

| | | |
|---|---|---|
| 21 | 15 | 6 |
| 20 | 14 | 5 |
| 19 | 13 | 4 |
| 18 | 12 | 3 |
| 17 | 11 | 2 |
| 16 | 10 | 1 |
| 8 | 7 | 9 |

இவ்வாறு, முதல் வரிசைப்படி மூன்று வரிசைகளும், இரண்டாம் வரிசைப்படி இரண்டு வரிசைகளுமாக ஐந்து வரிசைகள் செங்கல் கற்களை அடுக்குதல் வேண்டும்.

இவற்றுள், ஐந்து வரிசை அடுக்கு, ஆயிரங் கற்கள் கொண்டு அடுக்கும் மகாக்கினி சயனத்தின் பொருட்டாம். மூன்று வரிசை அடுக்கு இரண்டாயிரஞ் செங்கல் கற்கள் அடுக்கும் மகாக்கினி சயனத்தின் பொருட்டாம். அதற்கு மேல் செய்யவேண்டியவைகட்கு ஒரே அடுக்காம். இவ்வாறே மேலுங் காண்க.

மற்றும், இவ்வரிசைகளை, முன்னர் மந்திர மோதாமலே அடுக்கிவிட்டு மந்திரங்களால் பிறகு அவைகளைத் தொடுதலும் உண்டு. இவ்வாறு வழக்கில் காணப்படுகின்றது. இவ்வாறு காருகபத்திய சயனத்தைச் செய்துவிட்டு 'अजीजनन्' என்பது முதலிய மந்திரத்தால் அடுக்கியதை இரண்டு கைகளாலுந் தொடல் வேண்டும்.

நான்காவது அநுவாகம் முற்றிற்று.

(யாக பூமியை

## ஐந்தாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

सं गार्हपत्य उख्याग्निं चतुर्भिर्निवपेदमुम् ।
माता शिक्याद्दुखां मुञ्चेयद् शिक्यपरिग्रहः ॥ १ ॥
नमो नैर्ऋतदेशे तच्छिक्यं त्यक्त्वा यदिरयतः ।
शिक्यजालेन याः कृष्णा इष्टकाः स्थापयेदमूः ॥ २ ॥
यस्यास्तिस्रिमिस्तिस्र एताः कृष्णा उपदधातिहि ।
निर्येऽग्निमुपतिष्ठेत संव संप्रेष्यतीतरान् ॥ ३ ॥
निष्कृताहाऽवटे सिञ्चेत्सीराद्भ्यां हलार्पणम् ।
लाङ्गलाभ्यां कृषेत्काममावर्तेत प्रदक्षिणम् ॥ ४ ॥
घृतेऽन्तराले संस्पर्शं इति मन्त्रास्तु विंशतिः ।

*காருக்பத்தியத்தில் உகாத்தீயை வைத்தல், உறியிலிருந்து உகாவை எடுத்துவிடல்; உறியைப் போடுதல், உறிக்கயிற்றால் கறுப்புச் செங்கல்லைக் கட்டுதல், தீயைப் போற்றுதல். ஏனையவைகளைக் குழியிற் போடுதல், கலப்பையைச் சேர்த்தல், உழுதல், படைச்சாலை வலமாய்த் திருப்பிவிடல், தொட்டுப் போற்றுதல் என்பது.*

---

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### ஐந்தாம் அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகட்கு மேல் ஒருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

---

செங்கல்லடுக்கும் பூமியை உழுதற்குரிய மந்திரங்கள்.

समितꣳ संकल्पेथाꣳ संप्रियौ रोचिष्णू सुमनस्यमानौ । इषमूर्जमभिसंवसानौसं वामनाꣳसि संव्रता समुचित्तान्याऽकरम् । अग्ने पुरीष्याधिपा भवात्वन्नः । इषमूर्जं यजमानाय धेहि । पुरीष्यस्त्वमग्ने रयिमान् पुष्टिमाꣳ असि । शिवाः कृत्वा दिशस्सर्वास्स्वां योनिमिहाऽसदः । भवतन्नस्समनसौ समोकसौ ॥ १ ॥

अरेपसौ । मा यज्ञꣳ हिꣳसिष्टं मा यज्ञपतिं जातवेदसौ शिवौ भवतमद्य नः । मातेव पुत्रं पृथिवी पुरीष्यमग्निꣳ स्वेयोनावभारुखा । तां विश्वैर्देवैर्ऋतुभिस्संविदानः प्रजापतिर्विश्वकर्मा विमुञ्चतु । यदस्य पारे रजसश्शुक्रं ज्योतिरजायत । तन्नः पर्षदतिद्विषोऽग्ने वैश्वानर स्वाहा । नमस्सुते निर्ऋते विश्वरूपे ॥ २ ॥ अयस्मयं विचृता बन्धमेतम् । यमेनत्वं यम्यासं विदानोत्तमन्नाकमधिरोह येमम् । यत्ते देवी निर्ऋतिराब बन्धदामग्रीवास्वविचर्त्यम् । इदन्ते तद्विष्याम्यायुषो नमध्यादथ जीवः पितुमद्धि प्रमुक्तः । यस्यास्ते अस्याः क्रूर आसं जुहोम्येषां बन्धानामवसर्जनाय । भूमिरिति त्वा जना विदुर्निर्ऋतिः ॥ ३ ॥ इतित्वाऽहं परिवेदविश्वतः । असुन्वन्तम यजमानमिच्छस्तेनस्येत्यान्तस्करस्यान्वेषि । अन्यमस्म दिच्छसात इत्यानमो देवि निर्ऋते तुभ्यमस्तु । देवी महन्निर्ऋतिं वन्दमानः पितेव पुत्रन्दसये वचोभिः । विश्वस्यया जायमानस्य वेदशिरश्शिरः प्रतिसूरी विचष्टे । निवेशनस्सङ्गमनोवसूनां विश्वारूपाऽभिचष्टे ॥ ४ ॥ शचीभिः । देव इव सवितासत्य धर्मेन्द्रोन तस्थौसमरेपथीनाम् । संवरत्रा दधातन निराहावान्कृणोतन । सिञ्चामहा अवटमुद्रिणं वयं विश्वाऽहाऽदस्तमक्षितम् । निष्कृताहावमवटꣳ सुवरत्रꣳ सुषेचनम् । उद्रिणꣳ सिञ्चे अक्षितम् । सीरा युञ्जन्ति कवयो युगा वितन्वते पृथक् । धीरा देवेषु सुम्नया । युनक्त सीरा वियुगातनोत कृते योनौ वपतेह ॥ ५ ॥ बीजम् । गिराच श्रुष्टिस्सभरा असन्नोनेदीय इत्सृण्या पक्कमाऽयत् । लाङ्गलं वीरवꣳ

सुशेव॑ꣳ सुमति॒स्सरु॑। उदित्कृ॒षति॒ गामवि॒ं प्रफ॒र्व्यं॑ञ्च पीव॑रीम्। प्र॒स्था-व॑द्रथ॒ वाह॑नम्। शु॒नन्नः॒ फा॒ला॒वितु॑दन्तु॒ भू॒मि॑ꣳ शु॒नं की॒ना॒शा॑ अ॒भि-य॑न्तु॒ वा॒हान्। शु॒नं प॒र्जन्यो॒ मधु॑ना॒पयो॑भिश्शुना॒सीरा॒शुनम॒स्मासु॑ ध॒त्तम्। कामं॑ङ्कामदुघे धुक्ष्व॒मि॒त्राय॒ वरु॑णायच। इन्द्रा॑या॒ग्नये॑ पू॒ष्ण ओष॑धीभ्यः प्र॒जाभ्यः॑। घृ॒तेन॒ सीता॒ मधु॑ना॒सम॑क्ता॒ विश्वै॑र्दे॒वैरनु॑मता म॒रुद्भिः॑। ऊर्ज॑स्वती॒ पय॑सा॒ पिन्व॑माना॒ऽस्मान्त्सी॑ते॒ पय॑सा॒ऽभ्याव॑वृत्स्व ॥ ६ ॥

நான்காம் அநுவாகத்தில் காருகபத்திய சயனங் கூறப்பட்டது. இதில், ஆகவனீய சயனமாகிய மகாக்கினி சயனத்தின் பொருட்டு பூமியை உழுதல் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

உகாத்தீயை, காருகபத்தியத்தில் வைத்தலில்

முதல் மந்திரம்

समित॑ꣳ सङ्कल्पेथा॑ꣳ संप्रियौ रोचिष्णू सुमनस्यमानौ। इषमूर्जमभिसं वसानौसं वामना॑ꣳसि संव्रता समुचित्तान्याऽकरम्।

என்பது.

உரை.

ஒருவர்க்கொருவர் பிரியமுடையவர்களும், பிரகாசமுடையவர்களும், நல்ல மனமுடையவர்களும், உணவுப் பொருளையும் இரசத்தையுந் தேடுகின்றவர்களுமான அக்கினிகளே! நீங்களிருவரும் ஒன்றாய்க் கூடுவீர்களாக. உங்களுடைய மனத்தின் எண்ணங்களையும், விரத கர்மங்களையும், கருமத்தைக் கவரும் உணர்ச்சிகளையும் இனிது அமையும்படி செய்கின்றேன் என்பது.

---

இரண்டாம் மந்திரம்

अग्ने पुरीष्याधिपा भवात्वन्नः। इषमूर्जं यजमानाय धेहि।

என்பது.

உழுதல்)

உரை.

மண்ணுடன் கூடிய அக்கினியே! இரண்டக்கினிகளின் சேர்க்கை வடிவத்தீயே! நீ, எம்மை இனிது பாதுகாப்போனாக ஆகுவாய். ஆகிய நீ, எசமானனுக்கு உணவுப் பொருளையும் இரசத்தையுங் கொடுப்பாயாக என்பது.

---

மூன்றும் மந்திரம்

पुरीष्यस्त्वमग्ने रयिमान् पुष्टिमा ँ असि। शिवाः कृत्वा दिशस्सर्वा-स्स्वां योनि मिहाऽसदः।

என்பது.

உரை.

இரண்டு அக்கினி வடிவமாகிய தீயே! நீ, மண்ணிலிருக்கத் தக்காய். தனமுடையவனும், புஷ்டி யுடையவனுமாவாயாக. எல்லாத் திக்குக்களையும் சாந்தப்படுத்திக் கொண்டு, இந்த செங்கலடுக்காகிய உனதிடத்தை யடைவாயாக என்பது.

---

நான்காம் மந்திரம்

भवतन्नस्समनसौ समोकसावरेपसौ। मा यज्ञ ँ हि ँ सिष्टं मा यज्ञपतिं जातवेदसौ शिवौ भवतमद्य नः।

என்பது.

உரை

முந்தியே யிருந்ததும், இப்போது உகா என்பதிலிருந்துவந்து சேர்ந்ததுமாகிய அக்கினிகளே! உங்களிருவருடைய மனங்களையும், எம்மிடத்து விவாதமற்றவைகளாகவும், பாவமற்றவைகளாக வைத்து, வேள்விக்கும் வேள்வித் தலைவனுக்கும் துன்பஞ் செய்யாதீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து

இந் நான்கு மந்திரங்களாலும், உகா என்னும் மண் தொட்டியிலிருக்கும் அக்கினியை, அடுக்கி வைத்திருக்குஞ் செங்கல்லின்மேல் கொட்டி விடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, செங்கல் அடுக்காகிய தீயும், தொட்டியிலிருந்த தீயும் ஒன்றுபட்டமை காண்க.

பிறகு, 'साक ँ हि शुचिना' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், அக்கினியையும் செங்கலடுக்கையும் போற்றுதல் வேண்டும்.

மற்றும், 'स्यूता देवेभिरमृतेन' என்பது முதலிய மந்திரத்தால், அக்கினி யிருந்த தொட்டியை, நெய், தேன், தயிர், மணல் என்பவைகளுள் ஒன்றால் நிரப்பிவிடல் வேண்டும்.

---

இரண்டாம் விநியோகம்.

உறியிலிருந்தும் உகாவை வேறாய் எடுத்தல்.

மந்திரம் :

मातेव पुत्रं पृथिवी पुरीष्यमग्नि॑ स्वेयोनावभा रुखा । तां विश्वैर्देवै-
ऋतुभिस्संविदानः प्रजापतिर्विश्वकर्मा विमुञ्चतु ।

என்பது.

உரை.

உலகில், குழந்தையை மாதா, வயிற்றில் வைத்துக் கொண்டிருப்பது போல், மண்ணாகிய உகா (தொட்டி) தனது கர்ப்பத்தில் இவ்வக்கினியை வைத்திருந்தது. அத்தகைய உகாவை, எல்லாத் தேவர்களுடனும் இருதுக் களுடனும் ஒன்றாந் தன்மை யடைந்தவனும், உலகைப் படைக்குஞ் செயலை யுடையவனுமாகிய பிரமன் பிரித்து விடுவானாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உறியிலிருந்த உகாவை வேறாய் எடுத்துவிடல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றாம் விநியோகம்

உறியை எடுத்துக் கொள்ளல்.

மந்திரம் :

यदस्यपारे रजसश्शुक्रं ज्योतिरजायत । तन्नः पर्षदतिद्विषोऽग्ने वैश्वानर
स्वाहा ।

என்பது.

உரை.

தூளிக்குச் சமமான புகையின் முடிவில் இவ்வக்கினியின் நல்லொளி யுண்டாகின்றது. அவ் வொளியானது பகைவரை ஒழித்து விட்டு எம்மைப் பிரியப்படுத்துக. வைசுவாநரனென்னும் அக்கினியே! உன்னுடைய உறி இனிது ஆகுதி செய்யப்பட்டது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உறியை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம். மற்றும், ஈண்டுச் சூத்திரப்படி, மந்திரமின்றி உமியில் வெந்து கருமை நிற

உழுதல்)

மூடைய நிருதி என்னும் மூன்று செங்கல்களையும், பொன் தகட்டைக் கட்டியிருந்த கயிற்றையும், உகா வைத்திருந்த நாற்காலியையும், வேட்போன் வேள்வித்தலைவன் பிரமன் என்னும் இம் மூவரும் எடுத்துக்கொண்டு நிருதி மூலைக்கு (தென் மேற்குத் திசைக்கு)ச் செல்லல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

உறியை யெறிதல்

மந்திரம் :

नमस्सुते निर्ऋते विश्वरूपेऽयस्मयं विचृता बन्धमेतम्। यमेन त्वं
यम्यासं विदानोत्तमन्नाकमधिरोहयेमम्।

என்பது.

உரை

தெற்கு மேற்குத் திசைகட்கு இடையிலுள்ள திக்கை அபிமானிக்கும் பல்வகை வடிவுடைய தேவதையே! உனக்கு வணக்கம். இருப்புச் சங்கிலிகளாற் செய்யப்பட்டதும், சுவர்க்கமடைவதில் தடையுமாகிய பாவமென்னும் இவ்வுறியை நாசமாக்குவாயாக. பிறகு, எமன் பிருதுவி என்பவர்களுடன் ஒன்று சேர்ந்து இவ்வேள்வித்தலைவன், துன்பொரு சிறிதளவுமின்றிய சுவர்க்கத்தில் ஏறும்படிச் செய்வாயாக என்பது.

சாயண்பாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நிருதி மூலையில்; தானாக உண்டாகிய இயற்கைப் பள்ளத்தில் தெற்கு நுனியாக உறியைப் போட்டு விடல் வேண்டும் என்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

செங்கல் கற்களை வைத்தலில்

முதல் மந்திரம்

இது பாட முறையிற் பின்னுள்ளது.

यस्यास्ते अस्याः क्रूर आसञ्जुहोम्येषां बन्धानामवसर्जनाय। भूमि-
रिति त्वा जना विदुर्निर्ऋतिरिति त्वाऽहं परिवेद विश्वतः।

என்பது.

உரை

நிருதி தேவதையே! கொடுமையாகிய உனது முகத்தில் (வெடிப்பில் அல்லது பள்ளத்தில்) எசமானன், பரலோகமடைவதற்குத் தடையாயுள்ள பாவத்தை நீக்குதற் பொருட்டு செங்கல் வைத்தலாகிய இவ்வாகுதியைச் செய்கின்றேன், மற்றும், உன்னை, பொதுமக்கள் பூமியென்றுணர்வார்கள், உண்மையுணர்ந்த யான் நிருதி தேவியென்றுணர்கின்றேன் என்பது,

இரண்டாவது மந்திரம்

असुन्वन्तम यजमानमिच्छस्तेनस्येत्याग्तस्करस्यान्वेषि । अन्यमस्म-
दिच्छसात इत्यानमो देवि निर्ऋते तुभ्यमस्तु ।

என்பது.

உரை

நிருதி தேவதையே! நீ, சோமயாகம் பண்ணுதவனையும், அவியெக்கு செய்யாதவனையும் பிடித்துக் கொள்வாயாக. மற்றும், மறைந்த கள்ளனையும், ஓடிப்போன கள்ளனையும், அவர்கள் சென்ற வழியைக் கண்டு பிடித்து அவர்களையும் பிடித்துக் கொள்வாயாக. எவ்வாற்றாலும் எமமைத் தவிர்த்து பிறரைப் பிடித்துக் கொள்ள விரும்புவாயாக. இத்தகைய கொடிய செயலே உனது காரியம். நிருதி தேவியே உனக்கு வணக்கம் என்பது.

மூன்றும் மந்திரம்

देवी मह्विर्नर्ऋतिं वन्दमानः पितेव पुत्रं दसये वचोभिः । विश्वस्यया
जायमानस्य वेदशिरश्शिरः प्रतिसूरी विचष्टे ।

என்பது.

உரை.

உலகத்திலுள்ள எல்லாத் திருடர்களின் தலைகளைப் பிடித்துக் கொண்டு நீங்கள் செய்த குற்றத்தை யான் உணர்வேன் என்று கூறும் நிருதி தேவதையை வணங்குகின்ற யான், உலகில், தீய செயலையுடைய குழந்தையை, ஐயா! அப்பா! குழந்தாய்! என்று இன்சொற்களால் தனது வசப்படுத்துவது போல் இனிய துதி வாக்கியங்களால் நிருதி தேவியை வசப்படுத்துகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும், கொண்டுபோயுள்ள கரிய செங்கல்கள் மூன்றையும் ஒன்றோடொன்றின்மேற் படாமல் தென்புறமாய்ப் போய் முடியும்படி அப் பள்ளத்தில் போட்டிருக்கும் உறியின் தென்பாதியில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

உழுதல்)

ஆறும் விநியோகம்.

உறியால் கற்களை மூடுதல்

இது பாட முறையிற் முன்னுள்ளது.

மந்திரம் :

यत्ते देवी निर्ऋतिराबबन्धदामग्रीवास्वविचर्त्यम् । इदन्ते तद्विष्यास्यायुषो नमध्यादथा जीवः पितुमद्धि प्रमुक्तः ।

என்பது.

உரை

வெள்ளிக்கல்லே! உன்னுடைய கழுத்தைச் சேர்ந்த அவயவ விசேடங்களில், நிருதி தேவியானவள் அவிழ்க்க முடியாத கயிற்றை உறுதியாகக் கட்டியிருந்தாள், அத்தகைய உனது கழுத்திலுள்ள கயிற்றை இப்போது அவிழ்க்கின்றேன். இவ்வாறு அவிழ்த்தல், உனது நடு ஆயுள்வரை அன்று, மற்றோ, ஆயுள் முடிவு வரையுமாம். ஆதலின் தடையின்றி நீண்ட காலம் வாழ்ந்துஎல்லாத்தடையும் நீங்கியவனாய் பிதாவின் அன்னத்தை யருந்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வைத்த செங்கல்களை உறிக்கயிற்றின் வடபாதியால் மூடிவிடல் வேண்டும், என்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, பிரமன் தென்புறத்திலும், வேட்போன் மேற்கு முகமாக உறிக்குக் கிழக்கிலும் உட்கார்ந்து கொண்டு இக்கிரியைகளைச் செய்தல் வேண்டும்.

செங்கல் கற்களை வைக்கும்போது முன்போல், 'தயா தேவதயா' என்பது முதலிய மந்திரத்தைச் சேர்த்து ஓதுதல் இல்லை.

மற்றும், பொன் தகட்டைக் கட்டியிருந்த கயிற்றையும், நாற்காலியையும், முன்வைத்த செங்கல்களுக்குத் தெற்கில் வைத்து விடல் வேண்டும்.

மற்றும், 'अपास्मदेतु निर्ऋति' என்பது முதலிய நான்கு சூத்திர மந்திரங்களாலும் வைத்த செங்கல்களைப் போற்றல் வேண்டும்.

'यदस्मपारे' என்பது முதலிய மூன்றாங்க சம்மிதா மந்திரத்தால் அக் கல்லின் சுற்றிலும் நீரை விடல் வேண்டும்.

பிறகும், 'भूत्यैनमः' என்னுஞ் சூத்திர மந்திரத்தாற் போற்றல் வேண்டும். மற்றும், திரும்பிப் பார்க்காமல் பிராக் வம்சத்திற்கு வரல் வேண்டும். வருங்கால் பிராக் வம்சத்திற்கு அருகில் வந்தவுடனே 'शन्नो देवी:' என்பது முதலிய மந்திரத்தால் மூவரும் தம்மீது நீரைத் தெளித்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'ऊर्जे त्रिश्रत्' என்பது முதலிய சூத்திர மந்திரத்தை ஓதிக்கொண்டு பிராக் வம்சத்தை யடைதல் வேண்டும். பிரமனும், வேள்வித் தலைவனும் மந்திரமோதாமலே பிராக் வம்சத்தை யடைதல் வேண்டும்.

---

ஏழாம் விநியோகம்.

மூவரும் போற்றுதல்

மந்திரம் :

निवेशनस्सङ्गमनो वसूनां विश्वारूपाऽभिचष्टे शचीभिः। देव इव सविता सत्यधर्मेन्द्रोनतस्थौसमरे पथीनाम्।

என்பது.

உரை

உண்மைப் பயனை யளிக்குந் தருமத்தை யுடையதும், மிகுந்த ஐசுவரியத்தை யுடையதும், பகைவர் வருவதன் முன் வந்து நிற்காததுமாகிய அக்கினி, எசமானர்களுடைய எல்லா வீடுகளிலும் புகுந்திருப்பதும், எல்லாப் பொருள்களையுங் கொடுப்பதுமாகி. சூரியனைப் போல் எல்லா உருவங்களையும் பிரகாசிப்பிக்கின்றது என்பது.

ஈண்டு முன் வந்து நிற்காதது என்றமையின், பெயரைச் சொன்ன மாத்திரத்தாலேயே பரிபாலிப்பது என்பது கொள்ளக் கிடந்தமை காண்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூவரும் ஆகவனீயத் தீயைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு வேள்வித்தலைவன், சோமயாகம் செய்தது போலவே 'अद्‌ष्वदग्नि' என்பது முதலிய இரண்டு மந்திரங்களாலும் ஆகவனீயத் தீயைப் போற்றுதல் முதல், பிராயணீயா இஷ்டியைத் தொடங்கிச் செய்வதுடன் உதயனீயா இஷ்டிக்கு தருப்பையையும் கலசங்களையும் எடுத்து வைப்பது வரை, செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகும், வேதிகையை அளத்தல் முதல், இரண்டாமுறை பூமியைக் கொள்ளும் வரை செய்து விட்டு, பிராயணீய இஷ்டியின் துருவாவில் உள்ள நெய்யை எட்டு முறை யெடுத்தல் முதல், சோமப் பிரயோகங்களைத் தொடங்கிச் செய்து கொண்டு, சோமத்தை விலைக்கு வாங்கும் வரை, செய்தல் வேண்டும். சோமக் கிரயத்தில் நூற்றிப் பன்னிரண்டு கோக்கள் தட்சிணை யெனின், பத்து வகைக் கிரயமாம். ஆயிரம் கோக்கள் தட்சிணை யெனின், முப்பது வகைக் கிரயமாம் என்பதையு முணர்க.

உழுதல்)

அதன் பிறகு, ஆதித்திய இடா மார்ஜனம் வரையிற் செய்தல் வேண்டும். மற்றும், வேரோடு கூடிய ஒரு தருப்பைச் செடியைக் கொண்டு வந்து ஆகவனீயத்தில் ஊன்றி வைத்து விட்டு, 'सजू रब्दोयावभिर्घृतेन स्वाहा' என்பது முதலிய ஐந்து மந்திரங்களாலும், அத்தருப்பையின் மீது ஐந்து ஹோமங்களைச் செய்தல் வேண்டும்

இனி, எஜமானன் கைகளை மேலே தூக்கிக் கொண்டு, நிற்கும் அளவை எடுத்துக் கொண்டு, அவ்வளவால் மேற்கிலிருந்து, அதாவது கருடனுடைய வாலிலிருந்து மூன்றேகாலும், தெற்கிலிருந்து வடகோடி வரையில் ஐந்தரையரைக்காலுமாக முழம் அளந்து கொண்டு, அப்பூமியை, 'स्योनापृथिवी' என்பது முதலிய இரண்டு ருக்கு மந்திரங்களாலும் தோண்டுதல் வேண்டும்.

---

### எட்டாம் விநியோகம்.

ஏவுதல்

மந்திரம் :

संवरत्रा दधातन निराहावान् कृणोतन । सिञ्चामहा अवटमुद्रिणं वयं विश्वाऽहाऽदस्तमक्षितम् ।

என்பது.

உரை

உழவர்களே ! நீங்கள், தோலால் கயிறு செய்வீர்களாக. வருங் எருதுகள் தண்ணீர் குடிப்பதற்குத் தொட்டிகளைச் செய்து வைப்பீர்களாக. தண்ணீர் எடுக்கும் தொட்டியில் வேண்டியவரை தண்ணீரெடுத்து வார்க்கின்றோம். பூமியிலுள்ள சேற்றை யெடுத்து விட்டு, தண்ணீர் சரக்கத்தக்கதும், கரை தெரியாததும், வெயிற் காலத்தில் வற்றாததுமாகிய ஊற்றுத் தோண்டுகின்றோம் என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம் மந்திரத்தால், வேட்போன் தனது உழவர்களை, தோல் கயிறும், தொட்டிகளும் செய்து வைக்கும்படி ஏவல் வேண்டு மென்பதாம்.

---

### ஒன்பதாம் விநியோகம்.

தொட்டிகளில் தண்ணீரை நிறைத்தல்

மந்திரம்:

निष्कृताहावमवटꣳ सुवरत्रꣳ सुषेचनम् । उद्रिणꣳ सिञ्चे अक्षितम् ।

என்பது.

உரை.

அவாரத்துடன் கூடிய சாலையின் பக்கத்திலுடையதும், ஊத்தில் தண்ணீர் எடுத்தற்குரிய உறுதியாகிய தோல் கயிறுகளை யுடையதும், தண்ணீர் எடுத்து வார்ப்பதற்கு வேண்டிய பாத்திரங்களை யுடையதுமாகிய தொட்டிகளில் தண்ணீரை நிறைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை மீண்டும் மீண்டும் ஓதிக்கொண்டு மாட்டின் நீர்த் தொட்டிகளில் தண்ணீரை நிரப்பல் வேண்டு மென்பதாம்.

இனி எருழும் காளைகளை இத்தொட்டிகளில் நீர் குடிக்கும்படி செய்தல் வேண்டும்.

மற்றும், எருதுக்கள், மேழி, ஏர்க்கால், எதிராப்பு, கொழு, ஆணி, பூட்டாங்கயிறு முதலான ஏரின் அவயவங்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளுதலும் வேண்டும்.

---

பத்தாம் விநியோகம்

ஏரைத் தேடுதலில்

முதல் மந்திரம்.

सीरा युञ्जन्ति कवयो युगा वितन्वते पृथक्। धीरा देवेषु सुम्नया।

என்பது.

உரை.

சோம்பலின்றி உழவை நன்குணர்ந்தவர்கள் ஏரைத் தேடிச் சேர்ப்பார்களாக. அதாவது, மேழி முதலிய ஏரின் அவயவங்களை எடுத்து ஏராக அமைத்து வைப்பார்களாக. எதன் பொருட்டெனின்? தேவர்களுக்குள் சுக விருப்பமுண்டாதற் பொருட்டென்க.

---

இரண்டாம் மந்திரம்

युनक्तसीरा वियुगातनोत कृते योनौ वपतेह बीजम्। गिराच श्रुष्टिस्सभरा असन्नोनेदीय इत्सृण्या पक्कमाऽयत्।

என்பது.

உரை

உழவர்களே! நீவிர், ஏரைக் கட்டுவீர்களாக. உழுது பக்குவமாகிய இந்த இடத்தில் விதைகளை விதைப்பீர்களாக. மற்றும், அவ்விதைகள் மங்கள

உழுதல்)

வாக்கியத்துடன் கூடியவைகள் என்க. இங்கு விதைக்கப்பட்ட விதைகள் எமக்கு பயனளிக்காதவைகளாகுக. அதாவது பழுத்து அறுத்து எமக்கு வாராதனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும், மேழி முதலிய அவயவங்களை ஏராகச் சேர்த்து அதில் எருதுகளையும் பூட்டிக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, எருதுகள் ஆறு, அல்லது பன்னிரண்டாக இருத்தல் வேண்டும்.

ஒன்றாகச் சேர்க்க ஏரை, 'उष्ट्रयो:' என்பது முதலிய சூத்திர மந்திரத்தாற் போற்றல் வேண்டும்.

மற்றும், 'उदस्थात्' என்பது முதலிய மந்திரத்தால் உழுவதன் பொருட்டு ஏரை மேலே தூக்குதல் வேண்டும். அப்போது, நெய்யை யெடுத்துக் கொண்டு, பிரமவர்மா, என்னும் ஓமங்களைக் காருகபத்தியத்திற் செய்தல் வேண்டும்.

அப்போது, நெய்யை யெடுத்துக் கொண்டு, 'பிரமவர்மா' என்னும் ஓமங்களை காருகபத்திய சயனத்திற் செய்தல் வேண்டும்.

ஒவ்வொரு ஹோமத்திற்கும் தனித்தனியாக சுருவில் நெய்யெடுத்துக் கொண்டு, 'ब्रह्मजज्ञानं' என்பது முதலிய நான்கு ஓமங்களையுஞ் செய்த பிறகு, 'मलिम्लुच:' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், முன் அளந்து வைத்திருக்கும் அக்கினியினிடத்தைத் தாண்டிச் செல்லல் வேண்டும் என்பதையு முணர்க. இதில் பிரமன் தென்புறத்தில் உட்கார்ந்திருத்தல் வேண்டும்.

---

பதினோராம் விநியோகம்

ஏருழுதலில்

முதல் மந்திரம்

लाङ्गलं पवीरवत् सुशेवं सुमतित्सरु । उदित्कृषति गामविं प्रफर्व्यं च पीवरीम् । प्रस्थावद्रथवाहनम् ।

என்பது.

உரை.

ஏரானது, மிகக் கூரியதும், உழவர்களாற் போற்றத் தக்கதும், பூமியின், மேடு பள்ளங்களைச் சமப்படுத்தி நலந்தருவதுமாம் என்பது உரைத்தக்கது. மற்றும் கோக்கள், ஆடுகள், கடாரி, பருவம் வந்த கோ, வண்டியை யிழுத்துச் செல்லும் குதிரை முதலியவைகள் என்பவைகளோடு கூடியதுமாகிய ஏரை

(யாக பூமியை

உழவர்கள் உழுகின்றார்கள். ஏருழுவதால் எசமானனுக்கு எளிதில் எல்லாப் பொருள்களும் கிடைக்கு மென்பதாம்.

---

இரண்டாவது மந்திரம்.

शुनन्नः फालावितुदन्तु भूमि ँ शुनंकीनाशा अभियन्तु वाहान् ।
शुनं पर्जन्यो मधुना पयोभिश्शुनासीरा शुनमस्मासु धत्तम् ।

என்பது.

உரை

எமக்குச் சுகமுண்டாகும்படி கலப்பையின் நுனியானது நிலத்தை நன்கு கீறுக. எருதுகள் எமக்குச் சுகமுண்டாகும்படி சுற்றிச் செல்லுக. மேகம், எமக்குச் சுக முண்டாகும்படி நல்ல மழையைப் பெய்க. வாயுவும் ஆதித்தனும் எமக்குச் சுகத்தைக் கொடுப்பார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும் மகாக்கினி சயனஞ் செய்யும் இடமாகிய பூமியை மேற்கிலிருந்து கிழக்காக உழல் வேண்டு மென்பதாம்.

---

பன்னிரண்டாவது விநியோகம்.

மும்மூன்று படைச் சால்களாக உழல்.

மந்திரம் :

कामङ्काम दुघेधुक्ष्व मित्राय वरुणायच । इन्द्रायाग्नये पूष्ण ओषधीभ्यः प्रजाभ्यः ।

என்பது.

உரை

ஏரால் உழப்பட்ட வடுவே! (படைச்சாலே) நீ, மித்திரன், வருணன், இந்திரன், அக்கினி, பூஷா, கொடி செடிகள், பிரசைகள் என்பவைகளுக்கு வேண்டியவற்றைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஏரை வலமாக திருப்பல் வேண்டும். மற்றும், வாலிலிருந்து மூன்று படைச்சால்கள் உழுதல் வேண்டும். அவைகளை வாலிலிருந்து நேராக சிரசிற்கு உழுது கொண்டு போய் முடிவில் வலமாகத் திருப்பிவிடல் வேண்டும். ஆனால் மூன்றாவது படைச்சாலை மாத்திரம் வலமாய்த் திருப்புதல் இல்லை. இவ்வாறே, இடது விலாப்புறத்திலிருந்து வலது தோள் வரையும், வலது விலாப் புறத்திலிருந்து இடது தோள் வரையும் மும்மூன்று படைச்

உழுதல்)

சால்கள் உழுதல் வேண்டும். மற்றும், வலது சிறகிலிருந்து இடது சிறகு வரை ஒரு படைச்சால் உழுது திரும்பி வருங்காலும் உழுது கொண்டு தென் சிறகையடைந்து மீண்டும் வலமாகத் திரும்பி வட சிறகுவரை ஒரு படைச்சாலுமாக மூன்று படைச்சால்களையும் உழல் வேண்டும். இவ்வாறு இது பன்னிரண்டு படைச் சால்களானதால் திருவிருத் ஸ்தோமமே வேள்வித் தொடக்கம் என்பது பெறப்பட்டது.

---

உழும் முறையைக் காட்டும் படம்.



பதின்மூன்றும் விநியோகம்

படைச்சால்களைத் தொடுதல்

மந்திரம் :

घृतेन सीता मधुना समक्ता विश्वैर्देवैरनुमता मरुद्भिः । ऊर्जस्वती पयसा पिन्वमानाऽस्मान्त्सीते पयसाऽभ्याववृत्स्व ॥

என்பது.

உரை.

இந்தப் படைச்சால் நெய்யால் நன்கு நனைக்கப்பட்டிருக்கிறது. இது பற்றியே விசுவதேவர்கள், மருத்துக்கள் என்பவர்களால், 'இது நல்லது' என்று உடன்படப்பட்டது. இத்தகைய படைச்சால், பாலால் தெளிக்கப் பெற்று நீரால் நனைக்கப் பெற்றிருக்கின்றது. தண்ணீரால் நனைக்கப்பெற்ற படைச்சாலே! நீ, எம்மைக் குறித்து நாற்புறமுஞ் சுற்றிவருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் உழுத படைச்சால்களைத் தொடுதல் வேண்டும் என்பதாம்.

இதன் பிரயோகம் மேல் வரும்.

இவ்வநுவாக பரிசேடம் :—' विमुच्यध्वम् ' என்பது முதலிய மந்திரத்தால், வடக்குத் தோட் பக்கத்தில் எருதுகளை யவிழ்த்து வடக்காகவேனும் அல்லது கிழக்காகவேனும் ஓட்டி விடல் வேண்டும். அந்த எருதுகளை வேட்போனுக்குக் கொடுத்து விடல் வேண்டும்.

பிறகு, மந்திரமின்றி, பதினைந்து பாத்திரங்களில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து, அவற்றுள் பன்னிரண்டு பாத்திரங்களிலுள்ள நீரை உழுத படைச்சால்களிலும், மூன்று பாத்திரங்களிலுள்ள நீரை உழாத விடத்திலும் வார்த்தல் வேண்டு மென்பதையு முணர்க.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

ஆறாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

या ग्राम्यास्तथाऽऽरण्याः कृष्टाकृष्ट भुवोर्वपेत् ।
चतुर्दशभिरन्यास्तु षडत्रैव विकल्पिताः ॥

காட்டுத் தானியங்களையும், நாட்டுத் தானியங்களையும் விதைத்தல், மற்றும் விகல்ப மந்திரங்கள் என்பது.

---

நான்காம் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

ஆறாவது அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகட்கு மேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

விதைகளை விதைப்பதற்குரிய மந்திரங்கள்.

या जाता ओषधयो देवेभ्यस्त्रियुगं पुरा । मन्दामि बभ्रूणा महꣳ शतन्धामानि सप्तच । शतं वो अम्बधामानि सहस्रमुतवो रुहः । अथा शतक्रत्वो यूयमिमं मे अगदं कृत । पुष्पावतीः प्रसू-

वतीः फलिनीरफला उत। अश्वा इव सजित्वरीर्वीरुधः पारयिष्णवः।
ओषधीरिति मातरस्तद्वो देवीरुपब्रुवे । रपांसि विघ्नतीरितरपः ॥
चातयमानाः । अश्वत्थेवो निषदनं पर्णेवो वसतिः कृता। गोभाज
इत्किलासथ यत्सनवथ पूरुषम्। यदहं वाजयन्नि मा ओषधीर्हस्त
आदधे। आत्मा यक्ष्मस्य नश्यति पुरा जीवगृभो यथा। यदोषधय-
स्सङ्गच्छन्ते राजानस्समिता विव। विप्रस्स उच्यते भिषग्रक्षोहा-
ऽमीवचातनः। निष्कृतिर्नामवो माताऽथा यूयंस्थ संकृतीः। सराः
पतत्रिणीः ॥ २ ॥ स्थनयदामयति निष्कृत। अन्यावो अन्यामव-
त्वन्याऽन्यस्या उपावत । तास्सर्वा ओषधयस्संविदाना इदं मे
प्रावता वचः । उच्छुष्मा ओषधीनाङ्गावो गोष्ठा दिवेरते । धनं
सनिष्यन्तीना मात्मानन्त वपूरुष। अतिविश्वाः परिष्ठास्स्तेन इव
व्रजमक्रमुः। ओषधयः प्राचुच्यवुर्यत्किञ्चतनुवां रपः। याः ॥३॥
त आतस्थुरात्मानं या आविविशुः परुः परुः। तास्ते यक्ष्मं विबा-
धन्ता मुग्रो मध्यमशीरिव । साकं यक्ष्म प्रपतश्येनेन किकि
दीविना। साकं वातस्य ध्राज्या साकन्नश्य निहाकया। अश्वाव-
तीं सोमवती मूर्जयन्ती मुदोजसम्। आवित्सि सर्वा ओषधी-
रस्मा अरिष्टतातये। याः फलिनीर्या अफला अपुष्पायाश्च पुष्पिणीः।
बृहस्पति प्रसूतास्तानो मुञ्चन्त्वंहसः। याः ॥ ४ ॥ ओषधय-
स्सोमराज्ञीः प्रविष्टाः पृथिवीमनु। ता सान्त्वमस्युत्तमा प्रणो जीवा-
तवेसुव। अवपतन्तीरवदन्दिव ओषधयः परि। यज्जीवमश्नवामः
हैनसरिष्याति पूरुषः। याश्चेदमुपशृण्वन्ति याश्च दूरं परागताः।

इह सङ्कत्यतास्सर्वा अस्मै सन्दत्त भेषजम् । मावो रिषत्खनिता यस्मै चाहङ्खनामिवः । द्विपच्चतुष्पदस्माकꣳ सर्वमस्त्वनातुरम् । ओषधय-स्संवदन्ते सोमेन सह राज्ञा । यस्मै करोति ब्राह्मणस्तꣳ राजन् पारयामसि ॥ ५ ॥

ஐந்தாம் அநுவாகத்தில் மகாக்கினி சயன பூமியை உழுதல் கூறப்பட்டது. இதில், அப்பூமியில் விதை விதைத்தல் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

எள்ளை விதைத்தல்

மந்திரம் :

या जाता ओषधयो देवेभ्यस्त्रियुगं पुरा । मन्दामि बभ्रूणा महꣳशतं धामानि सप्तच ।

என்பது.

உரை.

மழைக்காலம், குளிர்காலம், வசந்தகாலம் என்பவற்றைக் குறித்து படைப்பின் முதலில் தேவர்களிடத்திலிருந்து உண்டான கொடி செடிகள், பிராணிகளைத் தாங்க வன்மை யுடையவைகளும், நூற்றுக் கணக்கான வேறுபாடுகளை யுடையவைகளும், மற்றும் பல்வகைச் சிறப்புடையவைகளாயும், கிராமத்திலுள்ளவைகள் வனத்திலுள்ளவைகள் என எழுவகைகளாகவும் உண்டாயின. அவைகளைப் பார்த்து மகிழ்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் எள்ளை விதைத்தல் வேண்டுமென்பதாம்.

---

இரண்டாவது விநியோகம்.

உழுந்து விதைத்தல்

மந்திரம் :

शतं वो अम्बधामानि सहस्रमुतवो रुहः । अथा शतक्रत्वो यूयमिमं मे अगदंकृत ।

என்பது.

விதைத்தல்)

உரை

அன்னையார் போன்ற கொடி செடிகளே! உங்களுடைய சாதி பேதங்கள், அல்லது, பூமி பேதங்கள் நூற்றுக்கணக்கா யிருக்கின்றன. மற்றும், உங்களுடைய, முளைகளும், விதைகளும் ஆயிரக்கணக்கா யிருக்கின்றன. இவ்வாறு, பல்வகை வேறுபாடுகளுடன் கூடிய பூக்கள் முதலியவைகளால் நூற்றுக் கணக்கான இருது காலங்கள் உண்டாகின்றன. அத்தகைய நீங்கள், எமது எசமானனை பசிதாக மில்லாதவனுய்ச் செய்வீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் உழுந்தை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்.

நெல் விதைத்தல்

மந்திரம் :

पुष्पावतीः प्रसूवतीः फलिनीरफला उत । अश्वा इव सजित्वरीर्वीरुधः पारयिष्णवः ।

என்பது.

உரை

சில கொடி செடிகள் பூக்களை மாத்திர முடையன. சில காய்க்கு முன் பூப்பன. சில பூவின்றிக் காய்ப்பன. சில பூவும் காயும் இல்லாதன. சில கொடி. சில காய்ப்பதின்றி படர்ந்துகொண்டே யிருப்பன. (வெத்திலைக் கொடி) சில குதிரைபோல் முன் ஓடுவது. இவ்வாறு கொடி செடிகள் பல் வகைப்படுகின்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் நெல்லை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காம் விநியோகம்

வாற்கோதுமை விதைத்தல்

மந்திரம் :

ओषधीरिति मातरस्तद्वोदे वीरुपब्रुवे । रपांसि विघ्नतीरितरपश्चातयमानाः ।

என்பது.

உரை

அன்னை போன்ற கொடி செடிகளென்னுந் தேவிகளே! நீங்கள், கொடி செடிகளா யிருத்தலின் உங்களை வேண்டுகின்றேன். பலனைத் தாங்குவது ஓஷதி என்னுஞ் சொற்குப் பொருளாம். என்ன வேண்டுகோளெனின்? எனது பாவங்களையும், பாவங்களின் பயன்களையும் நீக்குவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் வாற்கோதுமையை விதைத்தல் வேண்டு மென்பதாம்

ஐந்தாம் விநியோகம்
தினை விதை விதைத்தல்

மந்திரம் :

अश्वत्थेवो निषदनं पर्णेवो वसतिः कृता। गोभाज इत्किलासथयत्स नवथ पूरुषम्। என்பது.

உரை

கொடி செடிகளென்னுந் தேவதைகளே! உங்கட்கு அரசம் இலையிலும், புரசம் இலையிலும் இடஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அத்தகைய நீங்கள் பூமியிலேயே நிலையாயிருப்பீர்களாக. எதன் பொருட்டெனின்? நீங்கள் மக்களைப் போஷிக்கின்றீர்கள் அதன் பொருட்டென்க என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் தினையை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

ஆறாம் விநியோகம்
புல் விதையை விதைத்தல்

மந்திரம் :

यदहं वाजयन्निमा ओषधीर्हस्त आदधे। आत्मा यक्ष्मस्य नश्यति पुरा जीव गृभो यथा।

என்பது.

உரை

உணவுப் பொருளை விரும்பிய எமது கையில் இந்தக் கொடி செடிகள் அகப்பட்டபோதே, முயல்கள் முதலியன பிடிபடுவதற்கு முன்னரே பயத்தால் இறப்பது போல பசி முதலிய பிணிகள் இறந்துவிட்டன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் புல் விதைகளை விதைத்தல் வேண்டு மென்பதாம்

ஏழாம் விநியோகம்
கோதுமையை விதைத்தல்

மந்திரம் :

यदोषधयस्संगच्छन्ते राजानस्समिता विव । विप्रस्स उच्यते भिषग्रक्षोहामीवचातनः ।

என்பது.

உரை

கொடி செடிகளனைத்தும், போரிடும்போது அரசனை அவனுடைய சேனைகள் அடைவது போல் பூமியை யடைகின்றன. அவ்வாறு பூமியை யடையும் போது, எவன், இது, இரசம் வீரிய முதலியவற்றை யுடையது என்று உணர்கின்றனோ, அவன் வைத்தியன் எனப்படுகின்றான். எவ்வாறு வைத்தியன் எனின்? முற்கூறிய இவ்வண்ணத்தால் புரோடசஞ் செய்து அரக்கரைக் கொல்லுகின்றான். இதனால், அரக்கரின் உபத்திரவமாகிய பிணியைப் போக்கலினனென்க. மற்றும், கொடி செடிகளின் அன்னங்களால் பத்தியமிருந்தும் பிணியைப் போக்கிக் கொள்கின்றான் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழுத படைச்சால்களில் கோதுமையை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

மேற்கூறிய எழுவகைத் தானியங்களும் கிராமத்தில் விளைவன.

எட்டாம் விநியோகம்.
மூங்கில் விதையை விதைத்தல்

மந்திரம் :

निष्कृतिर्नामवो माताऽथा यूयꣳस्थ संकृतीः । सराः पतत्रिणीस्थन यदामयति निष्कृत ।

என்பது.

உரை

கொடி செடிகளே! அன்னை போல் பசி தாக முதலியவைகளைப் போக்குவதன் பொருட்டே உங்களுடைய உற்பத்தியாம். ஆதலின், நீங்கள் உமது

காரியத்தில் வன்மையுடைய ராவீர்களாக. பசி முதலியவைகளைப் போக்குகின்றவர்களாகவும், வருகின்றவர்களாகவும் இருப்பீர்களாக. பசி தாகங்களால் உண்டாகும் பிணியைப் போக்குவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேடாயுள்ள விடங்களில் அதாவது படைச்சால்களின்றிய விடங்களில் மூங்கில் விதைகளை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்.

சாமை விதைத்தல்

மந்திரம்:

अन्यावो अन्यामवत्वन्यान्यस्या उपावत । तास्सर्वा ओषधयस्संविदाना
इदं मे प्रावता वचः ।

என்பது.

உரை.

கொடி செடிகளே! உங்களுக்குள், ஒன்று மற்றொன்றைப் பாதுகாப்பதாகுக. அதுவும், மற்றொன்றைப் பாதுகாப்பதாகுக. மற்றும் அருகில் வந்து பாதுகாத்துக்கொள்ளுகின்ற நீங்கள், எனது வேண்டுகோளைப் பரிபாலிப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உழாமல் இடையில் மேடாயுள்ள விடத்தில் சாமையை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்.

செந்நெல் விதைத்தல்

மந்திரம் :

उच्छुष्मा ओषधीनां गावो गोष्ठादिवे रते । धनꣳसनिष्यन्तीना
मात्मानन्तव पूरुष ।

என்பது.

உரை.

கொடி செடிகளின் தானியங்கள், கோக்கள் தமது கோட்டத்திலிருந்து வெளியில் வருவது போல் மேலே வருகின்றன. எவ்விதமான கொடி செடிகளினின்? எசமான! நீ, தனத்தைக் கொடுப்பதுபோல், அன்னவாயிலாய் உனது தேகவடிவாய்ப் பரிணமிக்கத் தக்கவைகள் என்க. ஆதலின், உனது தேகத்தைக் கொடுக்கத்தக்கன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், உழாமல் மேடாயுள்ள விடங்களில் செந்நெல்லை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

பதினோராம் விநியோகம்

காட்டு எள் விதைத்தல்

மந்திரம் :

अतिविश्वाः परिष्ठास्तेन इव व्रजमक्रमुः । ओषधयः प्राचुच्यवुर्यत्किंच तनुवाꣳ रपः ।

என்பது.

உரை

கொடி செடிகள், உடம்பினுள் உள்ள இரத்தங்களுக்குட்கலந்து, கள்வர்கள், கோசாலைக்குள் சூழ்ந்து செல்வதுபோல், செரியாமை முதலிய தோடங்களைக் கடந்து உடம்பை யடைந்தன. ஆதலின், உடம்பிலுள்ள காய்ச்சல், தலைவலி, வயிற்றுவலி, பேதி முதலிய பாவங்களின் பயனாகிய பிணிகளைப் போக்குகின்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழாமல் மேடாயுள்ள விடத்தில் காட்டு எள்ளை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

பன்னிரண்டாவது விநியோகம்.

காட்டுக் கோதுமை விதைத்தல்

மந்திரம் :

यास्त आतस्थुरात्मानं या आविविशुः परुः परुः । तास्ते यक्ष्मं विबाधन्तामुग्रो मध्य मशीरिव ।

என்பது.

உரை.

எசமான! உன்னுடைய உடம்பிற் சென்றிருக்கும் கொடி செடிகளும், இரச வடிவாய் உட்புகுந்த கொடிசெடிகளும் ஒன்றுகூடி நல்மார்க்கத்தின் பொருட்டு அரசன் ஓரஞ் செய்யாமல் தீயர்களைத் தண்டிப்பது போல், பிணிகளைப் போக்குவனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், உழாமல் மேடாயுள்ள விடத்தில் காட்டுக் கோதுமையை விதைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

பதின்மூன்றும் விநியோகம்

முத்துச் சம்பா நெல் விதைத்தல்

மந்திரம் :

**साकं यक्ष्म प्रपतश्येनेन किकि दीविना । साकं वातस्य ध्राज्या साकं नश्य निहाकया ।**

*என்பது.*

உரை

*கிக் கிக் என்று இழுக்கும் காச வியாதியே! நீ, பருந்து போல் மிக விரைவாதலின் பித்தத்தால் தோன்றினை. அத்தகைய நீ, சிலேட்டும வியாதிகளுடன் ஒழிந்து விடுவாயாக. வாத ரோகத்துடனும் நாசமாவாயாக. பிணியால் வருந்தும்போது, யான் ஐயோ துன்பம், என்று சத்தம் போடுகின்றேனே அந்தச் சத்தத்துடனும் ஒழிந்து விடுவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், உழாமல் மேடாயுள்ள விடத்தில் முத்துச் சம்பா நெல்லை விதைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

பதினான்காம் விநியோகம்.

கொள் விதைத்தல்

மந்திரம் :

**अश्वावतीꣳ सोमवतीं मूर्जयन्तीं मुदोजसम् । आवित्सि सर्वा ओषधी-रस्मा अरिष्टतातये ।**

*என்பது.*

உரை

*குதிரையை யுடையதும், சோமத்தை யுடையதும், வன்மையை யுடையதும், சுக்ல வடிவ தாதுவை யுடையதுமாகிய அந்தக் கொடி செடிகளனைத்தையும் நான் அடைந்துள்ளேன். எதன் பொருட்டெனின்! இந்த வேள்வித் தலைவனுடைய துன்பம் நீங்குதற் பொருட்டென்க. இங்கு, குதிரை, சோமம், வன்மை என்பவைகளை யுடைமை, தான்ய மிகுதியால் அவைகள் கிடைக்கப் பெறல் என்பது.*

விதைத்தல்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உழாமல் மேடாயுள்ள விடத்தில் கொள்ளை விதைத்தல் வேண்டு மென்பதாம்.

மேற்கூறிய ஏழு தானியங்களும் வனத்தில் விளைவன.

---

இனி, மேற் கூறியவைகளின் ஆறு விகற்ப மந்திரங்களுள்

முதல் மந்திரம்

याः फलिनीर्या अफला अपुष्पायाश्च पुष्पिणीः । बृहस्पति प्रसूता-
स्तानो मुञ्चन्त्वꣳहसः ।

என்பது.

உரை.

பழங்களை யுடையவைகளும், பழங்களின்றியவைகளும், பூக்களை யுடையவைகளும் பூக்களில்லாதவைகளுமான எல்லாக் கொடி செடிகளும், பிருகஸ்பதியால் உண்டாகின்றவைகளா யிருந்து எமது பாவத்தைப் போக்குவனவாகுக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

याः ओषधयस्सोमराज्ञीः प्रविष्टाः पृथिवीमनु । तासान्त्वमस्युत्तमा
प्रणो जीवातवे सुव ।

என்பது.

உரை.

சோமமாகிய அரசனை யுடைய கொடி செடிகள் பூமியை யடைந்தன. அவற்றுள், இப்போது விதைத்த கொடி செடிகளே! நீங்கள் சிறப்புடையவைகளா யிருக்கின்றீர்கள். ஆதலின், எனது சீவன ஓஷதியை ஏவுவீர்களாக என்பது.

---

மூன்றாம் மந்திரம்

अवपतन्तीरवदन्दिव ओषधयः परि । यञ्जीवमश्नवामहै न सरिष्याति पूरुषः ।

என்பது.

உரை

விண்ணிலிருந்து விழும் மழைத்துளிகளால் கொடி செடிகளாகின்றன. அவைகள் 'சுவர்க்கத்திற்கு மேலேயுள்ள விடத்திலிருந்து பூமியில் விழும்

மழைத் துளிகளால் எவருடைய செவ்வனே யாம் கலக்கின்றோமோ, அவர்கள் இறக்கமாட்டார்கள்' என்று கூறின என்பது.

நான்காம் மந்திரம்

**याश्चेदमुपशृण्वन्ति याश्च दूरं परागताः । इह सङ्गत्य तास्सर्वा अस्मै सन्दत्त भेषजम् ।**

என்பது.

உரை.

எனது வேண்டுகோளை அருகிலிருந்து கேட்கும் கொடி செடிகளின் அதிட்டான தேவதைகளும், தூரத்திலிருந்து கேட்கும் ஓஷதிகளின் தேவதைகளும் ஒன்றுகூடி, இந்த வேள்வித்தலைவனுக்கு பசிதாக முதலிய பிணிகட்கு வைத்தியஞ் செய்வனவாகுக என்பது.

ஐந்தாம் மந்திரம்

**मा वो रिषत्खनिता यस्मै च।हं खनामि वः । द्विपच्चतुष्पदस्माकꣳ सर्व-मस्त्वनातुरम् ।**

என்பது.

உரை.

கொடி செடிகாள்! உங்களுடைய வேர்களை, பிணியை நீக்குவதின் பொருட்டுக் கெல்லி எடுக்கின்றவன் சாகாதவனுகுக. யானும், ஒரு வியாதி நீக்கத்தின் பொருட்டு வேரைக் கெல்லுவேன் அப்போது அந்த ஓஷதியும் என்னைக் கொல்லாததாகுக. மற்றும், உங்களைப் பற்றிக்கொண்டே வாழ்ந்து வருகின்ற இருகாற் பிராணிகள் நாற்காற் பிராணிகளாகிய இரண்டும் பிணியால் துன்புறாதனவாகுக என்பது.

ஆறும் மந்திரம்.

**ओषधयस्संवदन्ते सोमेन सह राज्ञा । यस्मै करोति ब्राह्मणस्तꣳ राजन् पारयामसि ।**

என்பது.

உரை.

'எங்களுடைய வேர் முதலியவைகளால் எந்த அந்தணன் வைத்தியஞ் செய்கின்றானே, அவனுடைய பிணியை நாங்கள் நீக்குவோம்' என்று தமது அரசனாகிய சோமத்துடன் கொடி செடிகள் பேசிக்கொண்டன என்பது

சாயணபாடியக் கருத்து.

இந்த ஆறு மந்திரங்களும் மேற்கூறிய மந்திரங்களுக்கே விகற்ப மந்திரங்கள் என்பதாம்.

ஈண்டு, மேற்கூறிய தானியங்களுள் யாதானுமொன்று கிடைக்காவிடின் அதற்குப் பதிலாக வாற்கோதுமையை தேனில் நனைத்து அம் மந்திரத்தால் அங்கு விதைத்தல் வேண்டுமென்பதையு முணர்க.

ஆறும் அநுவாகம் முற்றிற்று.

---

ஏழாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

मा चतुर्भिः क्षिपेल्लोष्टा नग्रेपट्केन वालुकाः ।
चित आहवनीयस्य परिक्षिपति शर्कराः ॥ १ ॥
आप्या विप्रस्य सिकता व्यूहेरसंते पयांस्यथ ।
क्षत्रियस्य भवेद्व्यूह इति मन्त्रास्त्रयोदश ॥ २ ॥

உழுத மண்கட்டிகளை எடுத்து உள்ளே போடுதல், சுக்கான் கற்களைப் போடுதல், அந்தணனும், அரசனும் மணலைப் போடுதல் என்பது.

---

நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்
ஏழாவது அநுவாகம்.

மூன்று பஞ்சாதிகட்கு மேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

---

ஆகவனீய சயனத்தின் பொருட்டு, உழுத மண்கட்டி முதலியவைகளை எடுத்துப் போடுதற்குரிய மந்திரங்கள்

मानो हिꣳसीजनिता यः पृथिव्यायोवा दिवꣳ सत्यधर्माजजान ।
यश्चापश्चन्द्रा बृहतीर्जजान कस्मै देवाय हविषा विधेम । अभ्यावर्तस्व
पृथिवि यज्ञेन पयसा सह । वपान्ते अग्निरिषितोऽवसर्पतु । अग्ने यत्ते
शुक्रं यच्चन्द्रं यत्पूतं यद्यज्ञियम् । तद्देवेभ्यो भरामसि । इषमूर्जमह
मित आ ॥ १ ॥ दद ऋतस्य धाम्नो अमृतस्य योनेः । आनो गोषु

विशत्वौषधीषु जहामि सेदिम निराममीवाम् । अग्ने तव श्रवोवयो महि भ्राजन्त्यर्चयो विभावसो । बृहद्भानो शवसा वाजमुक्थ्यन्दधासि दाशुषे कवे । इरज्यन्नग्ने प्रथयस्वजन्तुभिरस्मे रायो अमर्त्य । सदर्शतस्य वपुषो विराजसि पृणक्षिसानसिꣳ रयिम् । ऊर्जोनपाज्जातवेदस्सुशस्तिभिर्मन्दस्व ॥ २ ॥ धीतिभिर्हितः । त्वे इषस्सन्दधुर्भूरिरेत सश्चित्रोतयो वामजाताः । पावकवर्चाश्शुक्रवर्चा अनूनवर्चा उदियर्षि भानुना । पुत्रः पितरा विचरन्नुपावस्युभे पृणक्षिरोदसी । ऋतावानं महिषं विश्वचर्षणिमग्निꣳ सुम्नाय दधिरे पुरो जनाः । श्रुत्कर्णꣳ सप्रथस्तमन्त्वा गिरा दैव्यं मानुषा युगा । निष्कर्तारमध्वरस्य प्रचेतसक्षयन्तꣳ राधसे महे । रातिं भृगूणामुशिजं कविक्रतुं पृणक्षिसानसिम् ॥ ३ ॥ रयिम् । चितस्स्थपरिचित ऊर्ध्वचितश्श्रयध्वन्तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवास्सीदत । आप्यायस्व समेतु ते विश्वतस्सोम वृष्णियम् । भवा वाजस्य सङ्गथे । सन्ते पयाꣳसि समुयन्तु वाजास्संवृष्णियान्यभिमातिषाहः । आप्यायमानो अमृताय सोम दिवि श्रवाꣳस्युत्तमानिधिष्व ॥ ४ ॥

*ஆறாம் அநுவாகத்தில் விதைகளை விதைத்தல் கூறப்பட்டது. இதில் உழுத மண்ணாங்கட்டி முதலியவைகளை எடுத்து உள்ளே போடுதல் கூறப்படுகின்றது.*

முதல் விநியோகம்

மேற்கில் மண் கட்டிகளை எடுத்துப் போடுதல்

மந்திரம் :

मानो हिꣳसीज्जनितायः पृथिव्या योवा दिवꣳ सत्यधर्मा जजान । यश्चापश्चन्द्रा बृहतीर्जजानकस्मै देवाय हविषा विधेम ।

என்பது.

உள்ளே எடுத்துப் போடுதல்)

உரை.

*பூமியை உண்டாக்கினவரும், அல்லது, சத்திய தர்மமுடையவராயிருந்து வானை யுண்டாக்கியவரும், களிப்புத்தரும் நீரை யுண்டாக்கியவருமாகிய பிரசாபதியானவர் எம்மைத் துன்புறுத்தாதவராகுக. அத்தகைய பிரசாபதிக்கு அவியால் வழிபாடு செய்கின்றேன் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், உழும்போது மேற்குப் பக்கத்திற் சிதறிவிழுந்த மண் கட்டிகளை, முன் கிறியுள்ள கோட்டுக்குள் எடுத்துப் போட்டு விடல் வேண்டும் என்பதாம்.*

---

இரண்டாம் விநியோகம்.

வடக்கில் மண் கட்டிகளை எடுத்துப் போடல்

மந்திரம் :

अभ्यावर्तस्व पृथिवि यज्ञेन पयसा सह । वपां ते अग्निरिषितोऽवसर्पतु ।

*என்பது.*

உரை

*பூமியே! நீ, ஆசரிக்கத்தக்க வேள்வியுடனும், அதன் பயனாகிய பாலோடுங்கூட எம்மைக் குறித்து வருவாயாக. விருப்புற்ற அக்கினி, உனது வபை என்னும் இந்த விடத்தை அடைகுக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், வட பக்கத்திற் சிதறி விழுந்த மண் கட்டிகளைக் கோட்டுக்குள் எடுத்துப் போடல் வேண்டு மென்பதாம்.*

---

மூன்றும் விநியோகம்.

கிழக்கில் மண் கட்டிகளை எடுத்துப் போடுதல்

மந்திரம் :

अग्ने यत्ते शुक्रं यच्चन्द्रं यत्पूतं यद्यज्ञियम् । तद्देवेभ्यो भरामसि ।

*என்பது.*

உரை

*அக்கினியே! உன்னுடைய, பிரகாசமாகிய அங்கம், குளிர்ச்சியாகிய அங்கம், புனிதமாகிய அங்கம், வேள்விக்குரிய அங்கம் என்னும் மண் வடிவ அங்கங்களனைத்தையும் தேவர்களின் பொருட்டுத் தேடுகின்றேன் என்பதாம்.*

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் கீழ்ப் பக்கத்தில் சிதறி விழுந்த மண் கட்டிகளை கோட்டுக்குள் எடுத்துப் போடல் வேண்டு மென்பதாம்,

---

நான்காம் விநியோகம்

தெற்கில் மண் கட்டிகளை எடுத்துப் போடல்

மந்திரம் :

इषमूर्जमहमित आदद ऋतस्य धाम्नो अमृतस्य योनेः । आनो गोषु विशत्वौषधीषु जहामि सेदि मनिराममीवाम् ।

என்பது.

உரை

வேள்விக்குக் காரணமாகிய இவ்விடத்திலிருந்து, உணவுப் பொருள் வடிவினதும், இரச வடிவினதுமாகிய மண்ணை எடுத்துக் கொள்ளுகின்றேன். அம் மண்கட்டி, எமது பசுக்களிடத்தும், கொடி செடிகளிடத்தும் வந்து புகுவன வாகுக. உணவுப் பொருளிலாததும், பிணியுடன் கூடியதுமாகிய பூமியை விட்டு விடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென் புறத்திலுள்ள மண் கட்டிகளை கோட்டுக்குள் எடுத்துப் போடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, இம் மந்திரத்தாலேயே, உள்ளிற் கிடக்கின்ற மண்ணாங் கட்டிகளுள் ஒன்றை யெடுத்து பகைவன் இருக்கும் திக்கை நோக்கி வெளியே எறிதல் வேண்டும். இன்றேலில், தென் புறமாகப் போட்டு விடல் வேண்டும்.

மற்றும், ஆறும் அநுவாகம் பதின்மூன்றும் பிரயோக மந்திரமாகிய, 'घृतेन सीता' என்பது முதலிய மந்திரத்தால் உழுதுள்ள படைச்சாலைத் தொடுதல் வேண்டும்.

'வித்தாயினி' என்பது முதலிய மந்திரத்தால், கருடனுடைய சிறகு, தலை, வால், இவைகளை அநுசரித்து கோடு கிழித்தலும் வேண்டும்.

பிறகு, சாத்வாலத்தி (மட் குழியி) லிருந்து மண் கொண்டு வந்து போடுவது முதல், ஆகார ஹோமஞ் செய்து விட்டு சுருவை மேலே தூக்குதல் வரை, செய்து கொள்ளல் வேண்டும்.

உள்ளே எடுத்துப் போடுதல்)

ஐந்தாம் விநியோகம்

மணலைக் கொண்டு வருவதில்

முதல் மந்திரம்.

अग्ने तवश्रवो वयो महि भ्राजन्त्यर्चयो विभावसो । बृहद्भानोशव सावाज मुक्थ्यन्दधासि दाशुषे कवे ।

என்பது.

உரை

அக்கினியே! உன்னுடைய கொண்டாடுதற்குரிய உணவுப்பொருள் மிகுதியாயிருக்கின்றது. ஒளியாகிய தனமுடையோய்! உனது சுவாலைகள், ஒளிர்கின்றனவாயும் பிரகாசிப்பன புகையையுடையவைகளுமாக இருக்கின்றன. வேள்வித் தலைவனுடைய கருத்தை புணர்வதில் வல்லவ! அவியளிக்கின்ற வேள்வித் தலைவனுக்கு, உக்தியம், சஸ்திரம் என்னும் துதிவிசேடங்களுடன் கூட வேள்விக்குரிய உணவுப் பொருளையும் உனது வன்மையாற் கொடுத்துக் கொண்டிருக்கின்றாய் என்பது.

இரண்டாம் மந்திரம்

इरज्यन्नग्ने प्रथयस्व जन्तुभिरस्मे रायो अमर्त्य । सदर्शतस्यवपुषो विराजसि पृणक्षिसानसिँ रयिम् ।

என்பது.

உரை

இறப்பிலாத அக்கினியே! புரோடாச முதலிய அவிகளைக் கொடுக்கும் உயிர்களால் விளக்கப்பட்டோனாயிருந்து எமக்கு மிகுந்த தனத்தை யளிப்பாயாக. காணத்தக்க செங்கலடுக்கு வடிவ திருமேனியின் நடுவில் நீ விளங்குகின்றாய். பல்வகையாகக் கொடுத்தற்குரிய தனத்தை எமக்கு அளிப்பாயாக என்பது.

மூன்றும் மந்திரம்

ऊर्जोनपाज्जातवेदस्सुशस्तिभिर्मन्दस्व धीतिभिर्हितः । त्वे इषस्सन्दधुर्भूरिरैतसाश्चित्रोतयो वामजाताः ।

என்பது.

உரை.

உணவுப் பொருளைக் கெடுக்காத சாதவேத மென்னும் அக்கினியே! நீ, பிரகாசங்களுட னிருந்து துதிகளால் களிப்புறுவாயாக. மிகுந்த இரசமுடைய

அன்னமாகிய அவிகளின் ஆகுதிகள் உன்னிடத்தில் வேள்வித்தலைவர்களாற் செய்யப்படுகின்றன. எத்தகைய வேள்வித்தலைவர்களெனின்? பல்வகையான உனது பாதுகாப்புக்களை யுடையவர்களும், போற்றத்தக்க குலத்திலுதித்தவர் களுமாவார்கள் என்பது.

---

நான்காம் மந்திரம்

पावकवर्चाश्शुक्रवर्चा अनूनवर्चा उदियर्षि भानुना । पुत्रः पितरा विचरन्नुपावस्युभे पृणक्षिरोदसी ।

என்பது.

உரை

சோதனையுடைய ஒளியாலும், அழுக்கில்லாத ஒளியாலும், நிறைந்த ஒளி யாலும் விளங்குகின்ற நீ மேன்மை யடைந்துள்ளாய். வானையும் மண்ணையும் அருகில் வந்து பாதுகாப்பாயாக. நன்னெறியிற் செலுத்திய ஒரு புதல்வன் தனது மாதா பிதாக்களைப் பாதுகாப்பதுபோல் அவ்விரண்டையும் நீ பரிபாலிப் பாயாக என்பது.

---

ஐந்தாம் மந்திரம்.

ऋतावानं महिषं विश्वचर्षणि मग्निꣳ सुम्नायदधिरे पुरो जनाः । श्रुत्कर्णꣳ सप्रथस्तमं त्वा गिरा दैव्यं मानुषा युगा ।

என்பது.

உரை

உண்மை யுடையதும், பெரியதும், உலகத்தாரால் வழிபடத்தக்கதும், ஒரு வேண்டுகோளை உடனே கேட்குஞ் செவி யுடையதும், பெருங் கீர்த்தியை யுடையதுமாகிய அக்கினியை, முன்காலத்தில், வேள்வித்தலைவன் வேள்விச் செயலாளர்களான மனிதர்கள் அனைவரும் தக்க துதியாகிய வாக்கால் நலத் தின் பொருட்டு நிறுவினார்கள் என்பது.

---

ஆறும் மந்திரம்

निष्कर्तारमध्वरस्य प्रचेतसं क्षयन्तꣳ राधसे महे । राति भृगूणा मुशिजं कविक्रतुं पृणक्षि सानसिꣳ रयिम् ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, வேள்வியை யுண்டாக்குகின்றவனும், தயை யுடையவ னும், அவி கொடுப்பதன் பொருட்டு இங்கு வாழ்கின்றவனும், ஈகை யுடையவ

போடுதல்)

னும், பிருகு வம்ச மகரிஷிகளுக்குட் பெருந்தவ முடையவனும், வேள்வி முதலிய கருமங்களை உள்ளவாறுணர்ந்து ஆசரிக்கின்றவனுமாகிய வேள்வித் தலைவனுக்குத் தனத்தைக் கொடுப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இந்த ஆறு மந்திரங்களாலும் மணலைக் கொண்டுவந்து கொட்டல் வேண்டு மென்பதாம்.

---

### ஆறும் விநியோகம்

சுக்கான் கல்லுகளை இறைத்தல்

மந்திரம் :

चितस्थ परिचितऊर्ध्वचितश्श्रयध्वं तया देवतयाङ्गिरस्वद्ध्रुवास्सीदत ।

என்பது.

உரை

சுக்கான் கல்லுகளே! நீங்கள், பூமியிலும், மற்றும் நாற்புறத்தும், மேலும் இறைக்கப்பட்டவர்களாக இருக்கின்றீர்கள். அத்தகைய நீங்கள் அக்கினிசயனத்தைச் சேவிப்பீர்களாக. உங்களுக்குள், யாரிடத்தில் எந்தத் தேவதையிருக்கின்றதோ, அந்தத் தேவதையுடன், அங்கிரச ரிஷியின் சயனத்தில் நிலைத்திருந்ததுபோல் இங்கும் நிலைத்திருப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீய அக்கினியின் சயனத்தைச் சுற்றிலும், வெளியில் கணக்கற்ற சுக்கான் கற்களைப் போடல் வேண்டு மென்பதாம்.

---

### ஏழாம் விநியோகம்.

அந்தணன் மணலைப் பரப்பி விடல்

மந்திரம் :

आप्यायस्व समेतु ते विश्वतस्सोम वृष्णियम् । भवा वाजस्य संगथे ।

என்பது.

உரை

சோமமே! நீ, எங்கும் பரவுவாயாக. உன்னுடைய வீரியம் எல்லா உணவுப் பொருள்களிலுங் கலக்குக. உணவுப்பொருள் சேருவதற்கு நீ நிமித்தமாக இருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், சயனத்தின் மீது அந்தணன் மணலைப் பரப்பி விடல் வேண்டு மென்பதாம்.

---

## எட்டாம் விநியோகம்.

### அரசன் மணலைப் பரப்பல்

மந்திரம் :

**सन्ते पयाꣳसि समुयन्तु वाजास्संवृष्णियान्यभिमातिषाहः । आप्याय-मानो अमृताय सोम दिवि श्रवाꣳस्युत्तमानि धिष्व ॥**

என்பது.

### உரை

பாவத்தைப் போக்குவதாகிய சோமனே! உனக்கு அருந்தற்குரிய பால் முதலியன கிடைக்குக. உணவுப் பொருளும் இனிது கிடைக்குக. வீரியமுங் கிடைக்குக. பால் முதலிய சம்பத்துக் கிடைத்த விடத்து வளர்ச்சியடைந்த நீ, கெடாத தேவத்தன்மையை யடைதற் பொருட்டும், விண்ணில் பிரியமானதைக் கேட்பதற்கும் பல்வகை உணவுப் பொருள்களைத் தேடுவாயாக என்பது.

### சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அவ்விடத்தில் அரசன் மணலைப் பரப்பல் வேண்டுமென்பதாம்.

இவ்வநுவாகத்தின் பரிசேடம் :— பிறகு, பாலை அருந்திவிட்டு நாபியைத் தொடுதல்வரை செய்தல் வேண்டும். சமித்துப் போடுதலும், 'अन्नपते, देवस्यत्वा' என்பவைகளை முதலாகக் கொண்ட இரண்டு மந்திரங்களாலும் வைத்தல் இங்கில்லை.

அதன்பிறகு, சோமயாகம்போல் காலையில் பிரவர்க்யம், உபசத், என்பவைகளையுஞ் செய்தல் வேண்டும்.

சுப்ரமண்ய சாமகீதம் பாடிய பிறகு, பிராக்வம்சம் என்னும் கொட்டகையின் கிழக்குப் பக்கத்தில் எருதுத்தோலை தலைகீழாக விரித்து, அதில், இடைத் துளைகளையுடைய மூன்று சக்கரைக் கற்களையும், 'விஷ்வக் ஜோதிகள்' என்னும் மூன்று பாதேஷ்டிகை (செங்கல் கற்க)ளையும் வைத்து, ஒரு தருப்பை முடிச்சால் நெய் யெடுத்து, அக் கல்லுகளையும் செங்கல்களையும் கவிழ்த்த கையால் அந் நெய்யைக்கொண்டு நனைத்து எடுத்துக்கொண்டு, கீழ்க் காட்டுமாறு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும். சென்று, 'चित्याग्निभ्यः प्रणीयमानेभ्यो-ऽनुब्रूहि' என்று, இருக்கோதுவோனை ஏவல் வேண்டும்.

பிறகு, இருக்கோதுவோன் வேள்வி செய்தவனாயிருந்தால், 'हिं भूर्भुवस्वरों पुरिष्यासो अग्नयः' என்பது முதலிய இருக்கு மந்திரத்தை இசைந்து மும்முறை சொல்லல் வேண்டும்.

இருக்கோதுவோன், யாகஞ் செய்யாதவனாயிருந்தால் எசமானனே அந்த இருக்கு மந்திரத்தை மும்முறை ஓதல் வேண்டும். ஓதுங்கால், அந்த இருக்கின்

போடுதல்)

மூன்றும் பாதத்தை (அடியை) மூன்றுவதுமுறை ஓதும்போது, 'हिरण्यगर्भः' என்பது முதலிய மந்திரத்தால், முதலில் எசமானன் முதலானோர்கள் வெண் குதிரை ஒன்றையும், இரண்டாவது கருங் குதிரை ஒன்றையும் ஓட்டிக் கொண்டு ஆகவனீயத்தை நோக்கிச் செல்லல் வேண்டும்.

அங்குப் போய் 'प्रजापतिः' என்பது முதலிய மந்திரத்தால், மகாக்கினி சயனஞ் செய்யுமிடத்தைத் தொடல் வேண்டும்.

பிறகு, 'मयि गृह्णामि, यो नो अग्निः' என்பவற்றை முதலாகக் கொண்ட இரண்டு மந்திரங்களாலும், வேட்போன், தனது ஆன்மாவிலுள்ள அக்கினியை, தனது பாவனையால் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும். மற்றும், 'यास्ते' என்பது முதலிய மந்திரத்தால் உத்தரவேதியைத் தொடல் வேண்டும்.

பிறகு, தென்புறம் வெண் குதிரையையும், வடபுறம் கருங் குதிரையையும் நிற்கவைத்தல் வேண்டும்.

மற்றும், அவ்விரு குதிரைகளுள், வெண் குதிரையைத் தொட்டு விட்டு 'इन्द्रं' என்பது முதலிய மந்திரத்தால், கருடவடிவின் வால் பிரியுமிடத்தில், அதாவது வால்புறத்திலிருந்து ஐந்தாவது வரிசையின் ஈற்றில் ஒரு பாதச்செங்கலை வைத்தல் வேண்டும்.

பிறகு, 'तस्वायामि' என்பது முதலிய மந்திரத்தால் பழய ஆகவனீயத்தில் ஒரு ஓமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவர், 'வருணாயேதம்' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

ஏழாம் அநுவாகம் முடிந்தது.

---

## எட்டாம் அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

अभ्यद्वत्रं क्रमयेद्दर्भं यद्वावृत्तिप्रदक्षिणम् ।
अपां पृष्ठमपाणप्रं मह्यारुक्मोपानकम् ॥ १ ॥
हिरण्यगर्भमयं दध्याद्द्रप्सस्वस्याभिमर्शनम् ।
नमस्विभिर्मन्त्रयेत मन्त्रा अत्र नवेरिताः ॥ २ ॥

குதிரை, தருப்பையைத் தாண்டுதல், வலஞ்செய்தல், தாமரை யிலையை வைத்தல், பொன் தகட்டை வைத்தல், பொன்னுலாகிய மனிதனை வைத்தல், தொடுதல், போற்றுதல் என்பது.

---

நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

எட்டாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல் பதினொரு பதங்களைக்கொண்டது

---

ஆகவனீயாக்கினி சயனத்தி (செங்கல் அடுக்குவத)ன் பொருட்டு, பொன் தகடு முதலியவைகளை வைத்தற்குரிய மந்திரங்கள்.

अभ्यस्थाद्विश्वाः पृतना अरातीस्तदग्निराहतदुसोम आह । बृहस्पतिस्सविताततन्म आह पूषाम्ऽधात्सुकृतस्य लोके । यदक्रन्दः प्रथमञ्जायमान उद्यन्त्समुद्रादुतवा पुरीषात् । श्येनस्य पक्षा हरिणस्य बाहू उपस्तुतञ्जनिमतत्ते अर्वन् । अपां पृष्ठमसि योनिरग्नेस्समुद्रमभितः पिन्वमानम् । वर्धमानं महः ॥ १ ॥ आच पुष्करन्दिवो मात्रया वरिणा प्रथस्व । ब्रह्मजज्ञानं प्रथमं पुरस्ताद्विसीमतस्सुरुचोवेन आवः । सबुध्निया उपमा अस्यविष्टास्सतश्च योनिमसतश्च विवः । हिरण्यगर्भस्समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् । सदाधार पृथिवीन्द्यामुते माङ्कस्मै देवाय हविषा विधेम । द्रप्सश्चस्कन्द पृथिवीमनु ॥ २ ॥ द्यामि मञ्चयोनि मनुयश्च पूर्वः । तृतीयं योनिमनुसञ्चरन्तन्द्रप्सञ्जुहोम्यनु सप्तहोत्राः । नमो अस्तु सर्पेभ्यो येकेच पृथिवीमनु । ये अन्तरिक्षे ये दिवि तेभ्यस्सर्पेभ्यो नमः । येऽदोरोचने दिवो येवा सूर्यस्य रश्मिषु । येषामप्सुसदः कृतन्तेभ्यस्सर्पेभ्यो नमः । या इषवो यातु धानानां येवा वनस्पतीꣳरनु । येवाऽवटेषु शेरते तेभ्यस्सर्पेभ्यो नमः ॥ ३ ॥

ஏழாம் அநுவாகத்தில், மண்ணுருண்டைகள் முதலியவைகளை உள்ளில் எடுத்துப் போடுதல் முதலியவைகள் கூறப்பட்டன. இதில், பொன்தகடு முதலிய

வைத்தல்)

வற்றை வைத்தல் கூறப்படுகின்றது. அதிலும். முதலாவது, குதிரைதாண்டுதல் கூறப்படுகின்றது.

ஈண்டு, பழைய ஆகவனீயத்திலிருந்து மீண்டும் திரும்பிவந்து, 'ब्रह्म आसन्' என்பது முதலிய மந்திரத்தால், முன்னர் வைத்திருக்கின்ற செங்கலின் மீது ஏறி நின்று கொள்ளல் வேண்டும்.

---

### முதல் விநியோகம்

குதிரை தர்ப்பையைத் தாண்டுதல்

**மந்திரம் :**

**अभ्यस्थाद्विश्वाः पृतना अरातीस्तदग्निराहतदुसोम आह । बृहस्पति-**
**स्सवितातन्म आह पूषामाऽधान्सुकृतस्य लोके ।**

என்பது.

உரை

இக்குதிரை, ஈவதை விலக்கும் பகைவனுடைய சேனைகள் அனைத்தையும் கடந்து வந்து நிற்குக. அது தாண்டுவதைப்பற்றி அக்கினி களிப்புறுக. சோமமும் அதில் களிப்புறுக. பிருகற்பதியும் அதற்குக் களிப்படைக. சவிதாதேவதையும் அதை உடன்படுக. பூஷாதேவதை, புண்ணிய கருமத்தின் பலமாகிய சுவர்க்கத்தில் என்னை நிலை நாட்டுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், முன்னர், நடுவில் நட்டுள்ள தருப்பையை கிழக்கில் வெண் குதிரையைத் தாண்டும்படி செய்தல் வேண்டுமென்பதாம்.

பிறகு, அக் குதிரையை மந்திரமின்றி வலமாகத் திருப்பிக் கொள்ளல் வேண்டும்.

---

### இரண்டாவது விநியோகம்.

மீண்டும் குதிரை தாண்டுதல்

**மந்திரம் :**

**यदक्रन्दः प्रथमञ्जायमान उद्यन्त्समुद्रादुत वा पुरीषात् । श्येनस्य**
**पक्षा हरिणस्य बाहू उपस्तुतञ्जनिमतत्ते अर्वन् ।**

என்பது.

உரை.

குதிரையே! நீ, தண்ணீரிலிருந்து உண்டாகும்போதே 'யான் அக்கினி முதலியவைகட்குச் சாதனமாயிருக்கின்றேன்,' என்று இரைச்ச விட்டதால்,

(பொன் முதலியவற்றை

அனைவரும் உன்னுடைய பிறப்பைப் போற்றுகின்றார்கள். அல்லது, ஆண் தன்மையிலிருந்தும் உண்டானது. எவ்வாறு துதிக்கின்றார்களெனின்? பருந்தானது விரைவில் கீழ் விழுவதினாலும், மான், மிக விரைவில் ஓடுவதாலும் துதிக்கப்படுவது போல் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், குதிரையை நீரின் மேற்காகத் தாண்டிச் செல்லும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

இனி, மேலே கூறப்படும், பொன் தகடு, தாமரையிலை கல்லு முதலியவைகளையும், பள்ளங் கெல்லி அதில் வைத்தல் வேண்டும். ஏனெனின்? மேலே செய்யப் போகும் செங்கல் அடுக்குவதற்கு யாதொரு கெடுதியுமில்லாதிருந்தற் பொருட்டாமென்பதை யுணர்க.

---

மூன்றும் விநியோகம்

முதலில் தாமரை இலையை வைத்தல்

மந்திரம்:

अपां पृष्ठमसि योनिरग्नेस्समुद्रमभितः पिन्वमानम् । वर्धमानं मह आच पुष्करन्दिवो मात्रया वरिणा प्रथस्व ।

என்பது.

உரை.

தாமரை யிலையே! நீ, தண்ணீரின் பின்புறமா யிருக்கின்றாய். அதாவது பின்புறம் போல் மேலே யிருக்கின்றாய் என்பதாம். கடல் போன்ற பெருங் குளத்தில் உண்டாகி நாளுக்கு நாள் வளர்ந்து, தண்ணீர் ஒட்டாமல் நிற்குந் தன்மையாற் போற்றப் பெற்றதும், அக்கினியை யுண்டாக்கும் வாயிலாக புஷ்டியைச் செய்வதுமாகிய தாமரை யிலையே! நீ, வானைப் பார்க்கிலும் பெரிதாகுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரை அடி வைத்த விடத்தில், முன் போல், 'தயா தேவதயா, என்பதையுஞ் சேர்த்துக் கொண்டு ஒரு தாமரை இலையை அதில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

மற்றும், இத் தாமரை யிலையை அந்தரிக்கம் என்றுந் தியானித்தல் வேண்டும்.

பிறகு, 'सत्यसामगाय' (சத்திய சாமத்தைப் பாடுக) என்று, பிரஸ்தோதாதாவை ஏவல் வேண்டும். பிரஸ்தோதா, 'सत्यं सत्यं' என்பது முதலிய சாம மறைப்பாடலைப் பாடல் வேண்டும்.

---

வைத்தல்)

### நான்காம் விநியோகம்

#### பொன் தகட்டை வைத்தல்

மந்திரம் :

ब्रह्मजज्ञानं प्रथमं पुरस्ताद्विसीमतस्सुरुचोवेन आवः । सबुध्निया उपमा
अस्यविष्ठास्सतश्च योनि मसतश्च विवः ।

என்பது.

உரை

ஆதியில் உண்டாகிய பொன் தகடாகிய பிரமம் பெரியது. கீழ்த்திசை யிலுள்ள சூரியன் எல்லாத் திக்குகளையும் தனது கிரணத்தால் கடைசி வரை சூழ்ந்திருக்கின்றான். இதற்கேற்ப பூமியிலுள்ள பொருள்களையும் விளக்கு கின்றான். உண்மையாகிய காரணத்திலும் இன்மையாகிய காரணத்திலும் கலந்திருக்கின்றான். இதனால், சூரியன் போன்ற பொன் தகடு பிரகாசிக்கின் றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அதிலுள்ள வடுக்கள் மேலே தோன்றும்படியும், அதில், நூல் கோத்திருந்த துவாரம் வடபுறம் இருக்கும்படியும், கழுத்திற் கட்டி யிருந்த பொன் தகட்டை அத் தாமரை இலையின் மீது வைத்தல் வேண்டு மென்பதாம்.

இந்தப் பொன் தகட்டை ஆதித்த மண்டலமாகவும், அதிலுள்ள துவா ரங்களை முத்திபதங்களாகவும் பாவித்தல் வேண்டும்.

---

### ஐந்தாம் விநியோகம்

#### பொன்னாற் செய்த புருடனை வைத்தல்

மந்திரம் :

हिरण्यगर्भस्समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत् । सदाधार
पृथिवीन्द्यामुते माङ्कस्मै देवाय हविषा विधेम ।

என்பது.

உரை

பொன்னாகிய பிரமாண்டத்தில் கர்ப்பமாயிருக்கின்ற பிரமன் இரணிய கர்ப்பன் எனப்படுகின்றான். அவன் உயிர்த் தொகுதிகள் உண்டாவதற்கு முன்னமே உடம்பை யெடுத்துக் கொண்டனன். அவன், தோன்றிய வுட னேயே உலகிற்கு இறைவனாயினன். இதனாலேயே, விரிந்த வானையும் பூமி யையுந் தாங்குகின்றான். அத்தகைய பிரசாபதியாகிய தேவனுக்கு அவியால் வழிபாடு செய்கின்றேன் என்பது.

(பொன் முதலியவற்றை

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பொன்னால் ஒரு புருடன்போற் செய்து, முன் வைத்த பொன் தகட்டின் துவாரத்திற்குத் தென் புறத்தில் கிழக்கில் தலை நிமிர்ந்து இருக்கும்படி வைத்தல் வேண்டு மென்பதாம்.

சூண்டுச் சூத்திரப்படி, இதை, புரானை புருடனைத் தியானித்துக்கொண்டே 'புருட சாமத்தைப் பாடுவாயாக' என்று பிரஸ்தோதாவை (சாமமறை பாடுவோனை) ஏவல் வேண்டும். பிரஸ்தோதா என்பவன், 'पुरुषः पुरुषः' என்பது முதலிய சாமப்பாடல்களைப் பாடல் வேண்டும்.

---

ஆறும் விநியோகம்.

புருடனைத் தொடுதல்.

மந்திரம் :

द्रप्सश्चस्कन्द पृथिवीमनुद्यामिमं च योनिमनु यश्च पूर्वः । तृतीयं योनिमनुसञ्चरन्तं द्रप्सं जुहोम्यनु सप्तहोत्राः ।

என்பது.

உரை.

பொன்மயமாகிய புருடனுடைய அங்கத்தின் ஒரு அணுவானது பூமியில் விழுந்தது. அது, ஆகுதி செய்யப் பெற்று மூன்றுலகத்திலுஞ் சென்றது, இவ்வாறு ஆதித்த மண்டலம் வரை சென்ற அதை, மனதால் ஆகுதி செய்யப் பட்டதாகப் பாவிக்கின்றேன். எங்கே ஆகுதி யெனின்? அது எத் திசையில் விழுந்ததோ, அதை யொழிந்த ஏனைய ஏழு திசைகளிலும் ஆகுதியாம் என்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வைத்த பொன் புருடனைத் தொடுதல் வேண்டும் என்பதாம்.

---

ஏழாம் விநியோகம்.

அப்புருடனைப் போற்றுதலில்

முதல் மந்திரம்.

नमो अस्तु सर्पेभ्यो येकेच पृथिवीमनु । ये अन्तरिक्षे ये दिवि तेभ्यस्सर्पेभ्यो नमः ।

என்பது.

வைத்தல்)

உரை

பூமியில் உள்ள சர்ப்பங்களுக்கு வணக்கம், அந்தரிக்ஷத்திலுள்ள சர்ப்பங்களுக்கு வணக்கம், வானுலகிலுள்ள இராகு முதலிய எல்லாச் சர்ப்பங்களுக்கும் வணக்கம் என்பது.

இரண்டாம் மந்திரம்

येऽदोरोचने दिवो येवा सूर्यस्य रश्मिषु । येषामप्सु सदः कृतन्ते-
भ्यस्सर्पेभ्यो नमः ।

என்பது.

உரை

அந்தரிக்கத்தில் விளங்கும் சூரிய மண்டலத்திலிருக்கின்ற சர்ப்பங்கட்கும், மற்றும், சூரியனுடைய கிரணத்தால் நம்மனோரால் காணப்படாதிருக்கின்ற சர்ப்பங்கட்கும், நீரில் வாழ்கின்ற சர்ப்பங்கட்கும் வணக்கம் என்பதாம்.

மூன்றும் மந்திரம்

या इषवो यातु धानानां येवा वनस्पतीꣳरनु । येवाऽवटेषु शेरते
तेभ्यस्सर्पेभ्यो नमः ।

என்பது.

உரை

இராக்கதர்களின் பாணங்களாக இருக்கின்ற சர்ப்பங்கட்கும், மற்றும், சந்தனமர முதலிய மரங்களின்மீது சுற்றிக்கொண்டிருக்கின்ற சர்ப்பங்கட்கும், அன்றியும், வளைகளுள் தூங்கிக் கொண்டிருக்கின்ற சர்ப்பங்கட்கும் வணக்கம் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும் அப் புருடனைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

சூத்திரத்தைத் தழுவி, இங்கு, 'कृणुष्व पाजः' என்பது முதலிய ஐந்து மந்திரங்களாலும், உத்தர வேதியில் ஆகார ஹோமஞ் செய்தது போலவே, இப் பொன் புருடனுக்கும் ஆகார ஹோமஞ் செய்தல் வேண்டும். (ஆகார ஹோமம் மூலை மாறி நெய்யைத் தரையில் தாரையாய் விடுதல்.)

வேள்வித் தலைவன், 'अग्नये रक्षोघ्ने इदम्' என்று ஒவ்வொன்றிற்கும் தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, கார்ஷ்மர்ஷ்யம் (குமிழை) என்னும் மரத்தாற் செய்த சுருக்கை, நெய்யால் நிரப்பி அப் புருடனுக்குத் தெற்கிலும், அத்தி மரத்தாற் செய்த சுருக்கை தயிரால் நிரப்பி அப்புருடனுக்கு வட புறத்திலும் மந்திரமின்றி வைத்தல் வேண்டும்.

மற்றும், பொன் தகட்டிற்கும் ஆஜ்ய ஹோமஞ் செய்தல் வேண்டும்.

எட்டாம் அநுவாகம் முற்றிற்று.



## ஒன்பதாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

ध्रुवेति स्वयमातृण्णां स्पृशोऽग्रेति दधाति ताम् ।
काण्डाद्दूर्वेष्टकां द्वाभ्या मषाढां मधुवा त्रिभिः ॥ १ ॥
अनक्ति मधुमिश्रेण दध्नाकूर्मं महीत्यतः ॥
कूर्मं दधाति तद्विष्णोर्मुसलं हि ध्रुवेत्युखाम् ॥ २ ॥
यास्ते धामभूतं द्वाभ्यां विराड्रेतः सिचस्त्रिभिः ।
अग्नेद्वाभ्या मुखाहोमो द्रप्सः पुरुषशीर्षके ॥ ३ ॥
आस्ये स्वर्णं क्षिपेत्तत्र मन्त्रोऽभूदिति वा भवेत् ।
ऋचे रुचेद्वयादक्ष्णोः सुवर्णं शकले क्षिपेत् ॥ ४ ॥
समिद्दध्ना च मधुना पूरयेन्नरशीर्षकम् ।
तस्मिंस्तच्छिर आदत्ते पञ्चविंशति रीरिताः ॥ ५ ॥

இயற்கைத் துளையுள்ள செங்கல்லுகளைத் தொடுதல், வைத்தல், அறுகம் புல்லின் கட்டையை வைத்தல், ஆஷாடம் என்னுஞ் செங்கல்லை வைத்தல், தயிர் கலந்த நெய்யால் ஆமையை நனைத்தல், ஆமையை குழியில் வைத்தல், உலக்கையை வைத்தல், தீத் தொட்டியை வைத்தல், வாமபிருத் என்னுஞ் செங்கல்லை வைத்தல், ரேதசிக் என்னுஞ் செங்கல்லை வைத்தல், தீத் தொட்டியில் ஹோமஞ் செய்தல், பொன் மனிதன் தலையில் ஹோமம், கண்களில் பொன் வைத்தல், தயிராலும் நெய்யாலும் மனிதன் தலையை நிறைத்தல், அந்தத் தலையைக் குழியில் வைத்தல் என்பது.

சுக்கான் கல்லுகளை வைத்தல்)

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகட்கு மேல் நான்கு பதங்களைக் கொண்டது.

இயற்கையில் துளைகளையுடைய சுக்கான்கல் செங்கல் முதலியவைகளை வைத்தற்குரிய மந்திரங்கள்.

ध्रुवाऽसि धरुणाऽस्तृता विश्वकर्मणा सुकृता । मात्वा समुद्र उद्वधीन्मा सुपर्णोऽव्यथमाना पृथिवीन्दृꣳह । प्रजापतिस्त्वा सादयतु पृथिव्याः पृष्ठे व्यचस्वतीं प्रथस्वतीं प्रथोऽसि पृथिव्यसि भूरसि भूमिरस्यदितिरसि विश्वधाया विश्वस्य भुवनस्य धर्त्री पृथिवीं यच्छ पृथिवीन्दृꣳह पृथिवीं मा हिꣳसीर्विश्वस्मै प्राणायापानाय व्यानायोदानाय प्रतिष्ठायै ॥ १ ॥ चरित्रायाग्निस्त्वाऽभिपातु मह्यास्वस्त्या छर्दिषा शन्तमेन तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवा सीद । काण्डात्काण्डात्प्ररोहन्ती परुषः परुषः परि । एवानो दूर्वे प्रतनु सहस्रेण शतेनच । या शतेन प्रतनोषि सहस्रेण विरोहसि । तस्यास्ते देवीष्टके विधेमहृ विधायमम् । अषाढाऽसि सहमाना सहस्वारातीस्सहस्वारातीयतस्सहस्व पृतनास्सहस्व पृतन्यतः । सहस्रवीर्या ॥ २ ॥ असि सामाजिन्व । मधुवाता ऋतायते मधुक्षरन्ति सिन्धवः । माध्वीर्नस्सन्त्वोषधीः । मधुनक्तमुतोषसि मधुमत्पार्थिवꣳरजः । मधुद्यौरस्तु नः पिता । मधुमान्नो वनस्पतिर्मधुमाꣳ अस्तु सूर्यः । माध्वीर्गावो भवन्तु नः । महीद्यौः पृथिवीचन इमं यज्ञं मिमिक्षताम् । पिपृतान्नो भरीमभिः । तद्विष्णोः परमम् ॥ ३ ॥ पदꣳसदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम् । ध्रुवाऽसि पृथिवि

(இயற்கைத் துளைகளையுடைய

सहस्व पृतन्यतः। स्यूता देवेभिरमृतेनाऽगाः। यास्ते अग्ने सूर्ये रुच उद्यतो दिवं मातन्वन्ति रश्मिभिः। ताभिस्सर्वाभी रुचे जनाय नस्कृधि। यावो देवास्सूर्ये रुचो गोष्वश्वेषु या रुचः। इन्द्राग्नी ताभिस्सर्वाभी रुचन्नो धत्त बृहस्पते। विराट् ॥ ४ ॥ ज्योतिरधारयत्सम्राड्ज्योतिरधारयत्स्वराड्ज्योतिरधारयत्। अग्ने युक्ष्वाहि येतवाश्वासो देवसाधवः। अरं वहन्त्याशवः। युक्ष्वाहि देवहूतमाः अश्वाः अग्ने रथीरिव। निहोता पूर्व्यस्सदः। द्रप्सश्चस्कन्द पृथिवी मनुद्यामिमञ्च योनिमनुयश्च पूर्वः। तृतीयं योनिमनुसञ्चरन्तन्द्रप्सं जुहोम्यनुसप्त ॥ ५ ॥ होत्राः। अभूदिदं विश्वस्य भुवनस्य वाजिनमग्नेर्वैश्वानरस्य च। अग्निर्ज्योतिषा ज्योतिष्मान् रुक्मो वर्चसा वर्चस्वान्। ऋचेत्वा रुचेत्वा समित्स्रवन्ति सरितो नधेनाः। अन्तर्हृदा मनसा पूयमानाः। घृतस्य धारा अभिचाकशीमि। हिरण्ययो वेतसो मध्य आसाम्। तस्मिन्त्सुपर्णो मधुकृत्कुलायी भजन्नास्ते मधुदेवताभ्यः। तस्यासते हरयस्सप्ततीरे स्वधान्दुहाना अमृतस्य धाराम् ॥ ६ ॥

எட்டாம் அநுவாகத்தில், மண்மய மில்லாத பொருள்களை வைத்தல் சொல்லப்பட்டது. இதில், இயற்கைத் துளையுடைய சுக்கான்கல் முதலிய செங் செங்க வைத்தல் கூறப்படுகிறது.

மில்-

பொ

அ

முதல் விநியோகம்

சுக்கான் கல்லைத் தொடுதல்

மந்திரம்:

ध्रुवाऽसि धरुणा स्तृता विश्वकर्मणा सुकृता। मात्वा समुद्र उद्वधीन्मा सुपर्णो व्यथमाना पृथिवीं दृꣳह। என்பது.

சுக்கான் கல்லுகளை வைத்தல்)

உரை

பூமி வடிவால் உலகத்தைத் தாங்குவதும், ஒருவராலும் துன்புறுத்தப் படாததும், விசுவ கருமனால் இனிது செய்யப்பட்டதுமாகிய இயற்கைத் துளையையுடைய சுக்கான் கல்லே! நீ உறுதிப்பாடுடையதாக இருக்கின்றாய். அத்தகைய உன்னை, கடல், அடித்துக் கொண்டு போதலாகிய துன்புறுத்தாததாகுக. கருடனும், பாம்பை யெடுக்கும்போது உன்னையும் எடுத்துக்கொண்டு போய் எறியாததாகுக. இவ்வாறிருந்து பயமற்று பூமியை உறுதிப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் எருதுத் தோலிற் கட்டிக் கொண்டு வந்துள்ள இயற்கைத் துளைகளை யுடைய சுக்கான் கல்லுகளுள் ஒன்றைத் தொடுதல் வேண்டும் என்பதாம்.

மந்திரமின்றி, அக்கல்லை, குதிரை முகர்ந்து பார்க்கும்படியுஞ் செய்தல் வேண்டும்.

---

இரண்டாம் விநியோகம்.

சுக்கான் கல்லை வைத்தல்

மந்திரம் :

प्रजापतिस्त्वा सादयतु पृथिव्याः पृष्ठे व्यचस्वतीं प्रथस्वतीं प्रथोसि
पृथिव्यसि भूरसि भूमिरस्यदितिरसि विश्वधाया विश्वस्य
भुवनस्य धर्त्री पृथिवीं यच्छ पृथिवीं दृꣳह पृथिवीं मा हिꣳसी-
र्विश्वस्मै प्राणायाऽपानाय व्यानायोदानाय प्रतिष्ठायै चरित्राया-
ऽग्निस्त्वाभिपातु मह्या स्वस्त्या छर्दिषा शन्तमेन तया देवतया-
ऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை.

பரந்ததும் விரிந்ததுமாகிய இயற்கைச் சுக்கான் கல்லே! உன்னை இப் பூமியின் மீது பிரசாபதி வைப்பாராக. மற்றும், இச் சயனத்தின் பரப்பாகவும், பூமியாகவும், சுகத்தை யுண்டாக்குவதாகவும், பூமியபிமானி தேவதையாகவும், உலகைப் போஷிப்பதாகவும், தாங்குவதாகவும் இருக்கின்றாய். அத்தகைய நீ, பூமியை நியமனஞ் செய்வாயாக. பூமியை உறுதிப்படுத்துவாயாக. பூமியைத் துன்புறுத்தாதே. பிராணன் முதலிய வாயு விருத்திகளின் பொருட்டும், தனதிடத்தில் இருத்தற் பொருட்டும், நூல்வழி நடத்தற் பொருட்டும்

சுக்கான் கற்களை வைத்தல்)

மூன்றும் விநியோகம்.

அறுகம்புல் வைத்தலில்

முதல் மந்திரம்

काण्डात्काण्डात्प्ररोहन्ती परुषः परुषः परि । एवानो दूर्वे प्रतनु सहस्रेण शतेन च ।

என்பது.

உரை

அறுகம் புல், பல்வகைக் கரணைகளை யுடையது. அவற்றுள் ஒவ்வொரு கரணைக்கும் ஒவ்வொரு கணுக்கள் உண்டு. ஒவ்வொரு கணுவிலிருந்தும் அறுகம் புல் ஆயிரக்கெழும். ஆதலின், அறுகம் புல்லே! நீ, அவ்வக் கணுக்களி லிருந்து எழுவதா யிருக்கின்றாய். இவ்வாறு, எம் பொருட்டு, நூற்றுக் கணக் காகவும், ஆயிரக் கணக்காகவும் உனது உருவத்தை விரிப்பாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

या शतेन प्रतनोषि सहस्रेण विरोहसि । तस्यास्ते देवीष्टके विधेम हविषा वयम् ।

என்பது.

உரை.

அறுகம் புல்லே! நீ, நூற்றுக் கணக்கான வகைகளால் உருவத்தை விரித் திருக்கின்றாய். மற்றும், ஆயிரக் கணக்கான வகைகளால் முளைத்திருக்கின்றாய். செங்கல்லாகிய தேவியே! அவைகளை, யாம், அவியால் வழிபடுகின்றோம் என் பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களிரண்டாலும், முன்னர் நடுவில் வைத்திருக்கின்ற சுக்கான் கல் வரை தொடர்ந்திருக்கும்படி பசுமையாக இருக்கின்ற ஒரு அறுகம் புல் லின் குச்சை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காம் விநியோகம்

அஷாடம் என்னுஞ் செங்கல்லை வைத்தலில்

முதல் மந்திரம்

अषाढाऽसि सहमाना सहस्वारातीस्सहस्वारातीयतः ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, ஒருவராலும் தாழ்த்தப் படமாட்டாய். பகைவரை யடக்குகின்றவனுமா யிருக்கின்றாய். ஆதலின், எனக்குக் கொடுக்க வேண்டிய தைக் கொடுக்காத பகைவனை அடக்குவாயாக. முன்னர் பகையின்றி, இப் போது பகை செய்ய விரும்புகின்ற குரூரர்களையும் அடக்கி விடுவாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

सहस्व पृतनास्सहस्व पृतन्यतः । सहस्रवीर्याऽसि सा मा जिन्व ।

என்பது.

உரை

செங்கலே! நீ, பகைவனுடைய சைன்யத்தை அடக்குவாயாக. சேனையை விரும்பும் பகைவனையும் அடக்கி வைப்பாயாக. ஆயிரக்கணக்கான ஆற்றல் கள் வாய்ந்த நீ, என்னைக் களிக்கச் செய்வாயாக என்பது

சாயணபாடிடக் கருத்து

இம் மந்திரங்களிரண்டாலும், முன்னர், உகா, என்னும் மண் கொட்டி செய்யும்போது செய்து வைத்திருக்கின்ற 'ஆஷாடம்' என்னும் பாதச் செங் கலை, வாலிலிருந்து ஐந்தாவது வரிசையில் மூன்றாவது கல்லாக அதிலுள்ள மூன்று கோடும் மேற் புறத்தி லிருக்கும்படி வைத்தல் வேண்டும் என்பதாம்.

சூத்திரப்படி 'उदस्य शुष्पात्' என்பது முதலிய ஆரணிய மந்திரத்தால், கூர்மச் செங்கல் ஒன்றை வாலிலிருந்து பதினோராவது வரிசையின் கூற்றில் ஷோடசி என்னுஞ் செங்கலாக வைத்தல் வேண்டும்.

மற்றும், 'यास्ते अग्ने' என்பது முதலிய மேல்படி ஆரணிய மந்திரத் தால், பன்னிரண்டாவது வரிசையின் முடிவில், 'குலாயினி' என்னும் ஒரு பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

தயிர் கலந்த தேனை ஆமையின் மீது விடுதலில்

முதல் மந்திரம்.

मधुवाता ऋतायते मधुक्षरन्ति सिन्धवः । माध्वीर्नस्सन्त्वोषधीः ।

என்பது.

ஆமையின்மீது தேன் விடுதல்)

உரை

வெள்ளியை விரும்பும் வேள்விக்தலைவன் பொருட்டு, வாயுக்கள், தித்திக்கும் இரசத்தை ஒழுக விடுகின்றன. கடல்களும், தித்திக்கும் இரசத்தை ஒழுக விடுகின்றன. கொடி செடிகளும், எம்பொருட்டு இன்சுவை யுடையன வாகுக என்பது.

---

இரண்டாவது மந்திரம்

मधुनक्त मुतोषसि मधुमत्पार्थिवꣳ रजः। मधुद्यौरस्तु नः पिता।

என்பது.

உரை

இரவு, எமக்கு, இனிய இரசமுடையதாகுக. விடியலும், இனிய இரசமுடையதாகுக. பூமியின் மணல்களும் இனிய இரசமுடையவைகளாகுக. எமது பிதா போன்ற வானும் இனிய ரசமுடையதாகுக என்பது.

---

மூன்றும் மந்திரம்

मधुमान्नो वनस्पतिर्मधुमाꣳ अस्तु सूर्यः। माध्वीर्गावो भवन्तु नः।

என்பது.

உரை

வனத்திலுள்ள அரசமர முதலியவைகளும் எம்பொருட்டு இரசமுடையனவாகுக. கோக்களும் இனிய பாலுடையவைகளாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மூன்று மந்திரங்களாலும், உயிருள்ள ஒரு ஆமையைக் கொண்டு வந்து, அதை, தயிர் கலந்துள்ள தேனால் குளிப்பாட்டல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்

ஆமையை வைத்தல்.

மந்திரம் :

मही द्यौः पृथिवी च न इमं यज्ञं मिमिक्षताम्। पिपृतान्नो भरीमभिः।

என்பது.

உரை.

பரந்துள்ள வானும் மண்ணும் இவ்வேள்வியின் பயனாகிய மழையால் நனைப்பதற்கு விரும்புக. மற்றும் தாங்குஞ் சத்திகளால் எம்மைப் பூரணமாக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இயற்கையாகிய துளைகளையுடைய சுக்கான் கல் வைத்துள்ள விடத்திற்குக் கிழக்கில், வேட்போன் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு அந்த ஆமையை, மேற்கே தலையிருக்கும்படி வைத்தல் வேண்டும் என்பதாம்.

சூத்திரப்படி இதை, 'चतस्र आशाः' என்பது முதலிய மந்திரத்தாலும் வைத்தல் கூடும் என்க.

பிறகு, வேலம் பாசியால் அதை மறைத்து வலையாலும் மூடிவிட்டு நாற்புறமும் சங்கு என்னுஞ் சிறிய முளைகளை அடித்து விடல் வேண்டும்.

மற்றும், 'अपां गंभीरं' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால் அவ்வாமையைப் போற்றல் வேண்டும். பிறகு, 'यच्छिद्धि' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், நாற்சதுரமுடைய ஒரு ஒட்டைச்சாண் அளவுள்ள அத்திமர உரல் ஒன்றையும், உலக்கை ஒன்றையும் கருட சயனத்தின் வடக்குத் தோளில் வைத்தல் வேண்டும். வைத்து, அவ்வுரலில் 'उतस्मते' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால் எல்லாத் தானியங்களையும் போட்டு மந்திரமின்றி குத்திப் புடைத்து, அவ்வரிசியுடன் கூட, முன்வைத்துள்ள இயற்கைச் சுக்கான் கல்லுக்குப் பக்கத்தில் 'इदं विष्णुः' என்பது முதலிய மந்திரத்தால் அவ் வுரலையும் வைத்தல் வேண்டும்.

---

ஏழாம் விநியோகம்.

உலக்கையை வைத்தல்

மந்திரம் :

तद्विष्णोः परमं पदꣳ सदा पश्यन्ति सूरयः। दिवीव चक्षुराततम्।

என்பது.

உரை

எத்தகைய விஷ்ணுவின் பரமபதத்தை, மறைப்பற்ற வெளியில் கண்ணானது பரந்து நோக்குவது போல் உணர்வுடையோர்கள் நோக்குகின்றார்களோ, அத்தகைய விஷ்ணுவின் அருளால், விஷ்ணுவின் சம்பந்தமாகிய வனத்தி லுண்டானதும், மரத்தினாற் செய்ததுமாகிய உலக்கையை வைத்திருக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உரலின் பக்கத்தில் உலக்கையையும் வைத்தல் வேண்டுமென்பதாம்.

உகாவை வைத்தல்)

ஈண்டுச் சூத்திரப்படி, 'दिवो वा विष्णो' என்பது முதலிய மந்திரத்தால், ஒரு முறத்தையும் அங்கு வைத்தல் வேண்டும்.

---

## எட்டாம் விநியோகம்.

### உகாவை (தோட்டியை) வைத்தல்

மந்திரம் :

ध्रुवाऽसि पृथिवि सहस्व पृतन्यतः । स्यूता देवेभिरमृतेनाऽगाः ।

என்பது.

உரை

மண்ணின் காரியமானதால் மண்ணாகிய உகாவே! நீ, நிலையுடையதாக இருக்கின்றாய். போரிட விரும்பிய பகைவர்களை அடக்குவாயாக. தேவர்களால் அமுதத்திற்குச் சமமாகிய நெய்யை நிறைக்கப் பெற்று இங்கு வந்திருக்கின்றனை என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலிலிருந்து ஆறுவது வரிசையில், மூன்றுவது கல்லுக்குக் கீழே ஒரு பள்ளஞ் செய்து உகாவை அதில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

இங்கு, 'தயா தேவதயா' என்னும் மந்திரத்தைச் சேர்த்துக் கொள்ளுதல் இல்லை என்பதை யுணர்க.

---

## ஒன்பதாம் விநியோகம்.

### 'வாமபிருதம்' என்னுஞ் செங்கலை வைத்தலில்

முதல் மந்திரம்

यास्ते अग्ने सूर्ये रुच उद्यतो दिव मातन्वन्ति रश्मिभिः । ताभिस्स-
र्वाभी रुचे जनाय नस्कृधि ।

என்பது.

உரை.

இரவியே! சூரிய மண்டலத்தில் மேலுற்ற உனது கிரணங்கள், சுவாலைகளால் வானைச் சூழ்ந்து கொள்கின்றன. அக் கிரணங்களால் எமது மக்களின் பொருட்டு பிரகாசத்தைக் கொடுப்பாயாக என்பது.

இரவிலுள்ள தீயின் ஒளிகளே உதயத்தில் சூரிய கிரணங்களாகின்றன என்பதை யுணர்க.

---

இரண்டாம் மந்திரம்

या वो देवास्सूर्ये रुचो गोष्वश्वेषु या रुचः । इन्द्राग्नी ताभिस्सर्वाभीरुचं नो धत्त बृहस्पते ।

என்பது.

உரை

தேவர்களே! உங்கள் சம்பந்தமான ஒளிகள் சூரிய மண்டலத்திலிருக்கின்றன. அங்ஙனமே, கோக்களிடத்தும், குதிரைகளிடத்தும் இருக்கின்றன. இந்திரன், அக்கினி, பிருகற்பதி யென்னும் தேவர்களே! நீங்கள் மூவரும் அக்கிரணங்களால் எங்கட்குப் பிரகாசத்தைத் தேடுவீர்களாக என்பது.

'மந்திரமின்றி, பொன் தகடுகளை அக்கல்லின் மேலே வைத்து விடலும் வேண்டும்'

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும், ஏழாவது வரிசையில் இரண்டாவது கல் லாக வாமபிருத் என்னும் பாதச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்

---

பத்தாம் விநியோகம்.

'ரேதசிக்' என்னும் மூன்று கல்லுகளை வைத்தலில்

முதல் மந்திரம்

विराड् ज्योति रधारयत् ।

என்பது.

உரை.

மிக ஒளிர்கின்ற 'ரேத: சிக்' என்னும் முதலாவது செங்கல், எமது அநுக்கிரகத்தின் பொருட்டுச் சோதியைத் தாங்கிக்கொண்டது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காளைப்பருவ முடையவன், மேற்படி வரிசையின் முடிவில் ஒரு பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாம் மந்திரம்

सम्राड्ज्योति रधारयत् ।

என்பது.

உரை.

பேரொளியோடு விளங்குகின்ற 'சம்ராட்' என்னும் இரண்டாவது செங்கல், எமது அநுக்கிரகத்தின் பொருட்டு சோதியைத் தாங்கிக்கொண்டது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், எட்டாவது வரிசையின் முடிவில் சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றும் மந்திரம்.

स्वराड्ज्योति रधारयत् ।

என்பது.

உரை

சுயம்பிரகாசமாய் விளங்குகின்ற மூன்றாவது செங்கல், எம்பொருட்டுச் சோதியைத் தாங்கிக்கொண்டது என்பது.

சாயுணபாடியக் கருத்து

இம் மூன்றாவது மந்திரத்தால் மூன்றாவதாகிய 'சோதசிக்' என்னுங் கல்லை ஐந்தாவது அடுக்கின் ஏழாவது வரிசையில் மூன்றாவது பாதச் செங்கலாக வைத்தல் வேண்டும் என்பதாம்.

அறுபது வயதுள்ளவன் வேள்வித்தலைவனா யிருக்கின், முறையே மூன்று மந்திரங்களாலும், முதல் அடுக்கில் ஒன்றும், மூன்றாவது அடுக்கில் ஒன்றும், ஐந்தாவது அடுக்கில் ஒன்றுமாக அக் கல்லுகளை வைத்தல் வேண்டும், வைக்கு மிடங்களை ஆண்டுக் காண்க

அறுபது வயதிற்கு உட்பட்ட வயதுடையவன் வேள்வித்தலைவனாயிருக்கின், இம் மூன்று மந்திரங்களாலும் மூன்று கல்லுகளை மூன்றாவது அடுக்கிலேயே வைத்துவிடல் வேண்டும் வைக்கு மிடங்களை ஆண்டுக் காண்க.

இனிச் சூத்திரப்படி, 'बृहस्पतिस्त्वा सादयतु' என்பது முதலிய நான்காம் பிரபாடக மந்திரத்தால், முன்னர், எருகின் கோலிற் கட்டிக் கொண்டு வந்த 'விஷ்வக் சோதி' என்னுஞ் செங்கல் ஒன்றை, ஐந்தாம் வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலாக வைத்தல் வேண்டும்

பிறகு, 'अग्रेयान्यसि, देवानामग्रेयान्यसि' என்பவற்றை முதலாகக் கொண்ட நான்காம் பிரபாடகத்திலுள்ள இரண்டு மந்திரங்களாலும், 'சம்யானீ' என்னும் இரண்டு செங்கல்களை, முறையாய், பதின்மூன்றும் வரிசையில், மூன்றுவது ஷோடசிச் செங்கல்லாகவும், பதினான்காம் வரிசையில் நான்காவது பாதச் செங்கலாகவும் வைத்தல் வேண்டும்,

மற்றும், 'मधुश्च, माधवः' என்பவற்றை முதலாகக்கொண்ட, நான்காம் பிர பாடக மந்திரங்களால், 'தயா தேவதயா' என்பது முதலியதை, துவிவசன மாகச் செய்து சேர்த்துக்கொண்டு 'ருதவ்யம்' என்னும் இரண்டு செங்கல் களை, பதினைந்தாவது, பதினாறுவது வரிசைகளிரண்டிலும் கடைசிக் கல்லுக ளாக வைத்தல் வேண்டும். இக்கல்லுகளை மந்திரமின்றி வேலம் பாசியால் மூடலும் வேண்டும்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, மூன்றாம் பிரயோகத்திற்குப்பிறகு, ஒன் பதாம் விநியோக முதல் இது வரையுஞ் செய்துவிட்டு, நான்காம் விநியோக முதல் எட்டாம் பிரயோகம் வரை செய்து கொண்டு, மேல் வரும் பதினோராம் விநியோகத்தைச் செய்தல் வேண்டு மென்பதையு முணர்க.

---

பதினோராம் விநியோகம்

உகாவில் ஓமஞ் செய்தலில்

முதல் மந்திரம்

अग्ने युक्ष्वाहि ये तवाश्वासो देवसाधवः । अरं वहन्त्याशवः ।

என்பது.

உரை.

அக்கினிதேவ! உனது குதிரைகளுள் எக்குதிரைகள் பழக்கப்பட்டவை களாய் விரைவிற் செல்கின்றவைகளோ, அவைகளை தேரிற் பூட்டுவாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்

युक्ष्वाहि देव हूतमाँ अश्वाँ अग्ने रथीरिव । निहोता पूर्व्यस्सदः ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, தேர்த்தலைவன் குதிரையைப் பூட்டுவது போல், இக் கரும நிமித்தம் தேவர்களை அதிசயமாய் அழைக்கத்தக்கவைகளைப் பூட்டுவா யாக. மற்றும், நீ, பழைய ஹோமத்தை யுண்டாக்குவோனாய் இங்கு உட்கார்ந் திருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இவ்விரண்டு மந்திரங்களாலும், புதைத்துள்ள உகாவில் இரண்டு ஹோ மங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

இவ்விரண்டு ஹோமங்கட்கும், 'அக்னய இதம்' என்று, தியாகஞ் செய் தல் வேண்டும்.

---

பன்னிரண்டாம் விநியோகம்.

பொற் புருடன் வாயில் பொன் துண்டைப் போடுதல்.

மந்திரம் :

द्रप्सश्च स्कन्द पृथिवी मनुद्यामि मञ्चयोनिमनुयश्च पूर्वः। तृतीयं योनि मनु संचरन्तं द्रप्सं जुहोम्यनु सप्तहोत्राः।

என்பது.

உரை

அரத்தால் இராவும்போது கீழே விழும் பொன்னின் பொடிகள் ஓமஞ் செய்யப்பட்டு, மண், வான், சுவர்க்கம் என்னும் மூவுலகங்களிலுஞ் செல்கின்றன. அவ்வாறு மூன்றுலகத்துஞ் செல்கின்ற பொன்னின் பொடிகளை, பூமியில் அது விழுந்த திசை யொழிந்த ஏனைய திசைகளாகிய எழு விடங்களிலும் ஹோமஞ் செய்கின்றேன். அவ்வாறு ஹோமம் பண்ணப் பெற்ற பொன்னின் பொடிகள் சூரிய லோக முதலிய மூன்றுலகத்திலுஞ் சென்று உதவி புரியும் படியாகப் பாவிக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அறுத்து வைத்திருக்கும் புருடன் தலையின் வாயில் பொன் பொடிகளைப் போடல் வேண்டுமென்பதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்

அதற்கே விகல்ப மந்திரம்.

अभूदिदं विश्वस्य भुवनस्य वाजिनमग्नेर्वैश्वानरस्य च। अग्निर्ज्योतिषा ज्योतिष्मान् रुक्मो वर्चसा वर्चस्वान्।

என்பது.

உரை

இந்தப் பொன், எல்லா வுயிர்கட்கும் உணவுப் பொருளானது. எல்லா மக்கட்கும் இறைவனாகிய அக்கினிக்கும் உணவானது. இவ் வக்கினி, பொன்னொளியால், தானும் ஒளியுடையதாயிற்று. அழகுடைய பொன்னால், தானும் அழகுடையதாயிற்று என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும், பொன் பொடிகளை அப் புருடன் வாயில் போடலாமென்பதாம்.

---

பதினான்காம் விநியோகம்.

வலது கண்ணிற் போடுதல்

மந்திரம் :

ऋचे त्वा। என்பது.

உரை

பொன் பொடியே! உன்னை, தோத்திரமாகிய இந்த இருக்கின் பொருட்டு, வலது கண்ணில் போடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புருடனுடைய வலது கண்ணில் பொன் பொடியைப் போடல் வேண்டு மென்பதாம்.

---

பதினைந்தாம் விநியோகம்.

இடது கண்ணிற் போடுதல்

மந்திரம் :

रुचे त्वा । என்பது.

உரை.

பொன் பொடியே! உன்னை, ஒளியின் பொருட்டு, கண்ணிற் போடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புருடனுடைய இடது கண்ணில் பொன் பொடியைப் போடல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி 'द्युते त्वा' என்னும் மந்திரத்தை இருமுறை ஓதிக் கொண்டு புருடனுடைய இரண்டு செவியிலும் பொன் பொடியைப் போடல் வேண்டு மென்பதாம்.

மற்றும், 'भासे त्वा' என்பதால், வலது மூக்கிலும், 'ज्योतिषे त्वा' என்பதால் இடது மூக்கிலும் பொன் பொடியைப் போடல் வேண்டு மென்பதையு முணர்க.

---

பதினாறும் விநியோகம்.

தயிர்கலந்த தேனை, புருடன் தலையில் விடுதல்.

மந்திரம் :

समित्स्रवन्ति सरितो न धेनाः । अन्तर्हृदा मनसा पूयमानाः । घृतस्य धारा अभिचाकशीमि । हिरण्ययो वेतसो मध्य आसाम् ।

என்பது.

உரை

அருந்துதற்குரிய தயிர் தேன்களின் அவயவங்கள், ஆற்றுநீர் செல்வது போல் ஒழுகுகின்றன. அவைகள், இருதய கமலத்தால் புனிதமடைந்து நெய்த் தாரைகளாகின்றன. அந்நெய்த்தாரைகளை அநுபவிக்கின்றேன். அத்தகைய

நெய்த்தாரைக்கு நடுவில் பொன்மயமாகிய புருடப் பிணம் ஆற்றோட்டத்தின் நடுவிலுள்ள 'வேதசமரம்' போல் விளங்குகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், தயிர் கலந்த தேனுல் அம் மனிதன் தலையை நனைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பதினேழாம் விநியோகம்.

புருடன் தலையை எடுத்துக்கோள்ளுதல்.

மந்திரம் :

तस्मिन्सुपर्णो मधुकृत्कुलायी भजन्नास्ते मधु देवताभ्यः । तस्याऽऽसते हरयस्सप्ततीरे स्वधां दुहाना अमृतस्य धाराम् ॥

என்பது.

உரை.

முன் கூறப்பட்ட புருடனுடைய தலையில், அழகிய சிறகையுடையதும், வண்டுகளின் இருப்பிடத்தையே இடமாகக் கொண்டதுமாகிய ஒரு வண்டு, தேவர்களின்பொருட்டுத் தேனெடுத்துக் கொண்டிருக்கிறது. மற்றும், அப் புருடனுடைய தலைக்கருகில், ஏழு துளைகளில் ஏழு வண்டுகள் தேனெடுத்துக் கொண்டிருக்கின்றன. என்ன செய்து எடுத்துக் கொண்டிருக்கின்றன வெனின்? சுவதாகாரத்தால் உபலக்ஷிதமாகிய போக்கியப் பொருளென்னும் தேன் தாரையை ஒழுக விட்டுக்கொண்டு, என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அப் புருடனுடைய சிரசை, மேல் வருமாறு அதில் வைப்பதன் பொருட்டுக் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

ஏனைய தலைகளையும் முற்கூறியபடியே செய்து எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

ஒன்பதாம் அநுவாகம் முற்றிற்று.

---

பத்தாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

आद्यखायां शिरोधत्त इममित्युपतिष्ठते ।
वाताश्वस्य शिरः प्राच्यां दध्यादिमक्षपेत्तथा ॥ १ ॥
अजर्षभ शिरः पश्चादिम मित्यनुमन्त्रणम् ।

(மனிதனுடைய

वरू दक्षिणतो वृष्णिशिरस्तन्मन्त्रगं रिरमाम् ॥ २ ॥
य उदीच्यां बस्तशिरस्तन्मन्त्रणमजेरयत: ।
दशमेत्वनुवाकेऽस्मिन्दशमन्त्रा उदीरिता: ॥ ३ ॥

புருஷ சிரசை வைத்தல், அதை உபஸ்தானஞ் செய்தல். குதிரையின் சிரசை வைத்தல், அதை உபஸ்தானஞ் செய்தல். எருதின் தலையை வைத்தல், அதை உபஸ்தானஞ் செய்தல். செம்மறி ஆட்டின் தலையை வைத்தல், அதை உபஸ்தானஞ் செய்தல். வெள்ளாட்டின் தலையை வைத்தல், அதை உபஸ்தானஞ் செய்தல் என்பது. உபஸ்தானம் = போற்றுதல்.

---

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்.

### பத்தாம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிகட்கு மேல் ஒன்பது பதங்களைக் கொண்டது.

---

புருடன் முதலிய பசுக்களின் தலைகளை வைத்தற்குரிய மந்திரங்கள்.

आदित्यङ्गर्भं पयसा समञ्जन्त्सहस्रस्य प्रतिमां विश्वरूपम् । परिवृङ्धि हरसा माऽभिमृक्षश्शतायुषं कृणुहि चीयमानः । इमं मा हिꣳसीर्द्विपादं पशूनाꣳ सहस्राक्ष मेध आचीयमानः । मयुमारण्यमनु ते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद । वातस्य ध्राजिं वरुणस्य नाभिमश्वं जज्ञानꣳ सरिरस्य मध्ये । शिशुन्नदीनाꣳ हरिमद्रिबुध्नमग्ने मा हिꣳसीः ॥ १ ॥ परमे व्योमन् । इमं मा हिꣳसीरेकशफं पशूनां कनिक्रदं वाजिनं वाजिनेषु । गौरमारण्यमनु ते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद । अजस्रमिन्दुमरुषं भुरण्युमग्निमीडे पूर्वचित्तौ नमोभिः । स पर्वभिर्ऋतुशः कल्पमानो गां मा हिꣳसीरदितिं विराजम् । इमꣳ समुद्रꣳ शतधारमुत्सं व्यच्यमानं भुवनस्य मध्ये । घृतन्दुहानामदितिञ्जनायाग्ने मा ॥ २ ॥ हिꣳसीः

தலையை வைத்தல்)

परमे व्योमन् । गवयमारण्यमनुते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद । वरूत्रिन्त्वष्टुर्वरुणस्य नाभिमविञ्जज्ञानाꣳ रजसः परस्मात् । महीꣳ साहस्रीमसुरस्य मायामग्ने मा हिꣳसीः परमे व्योमन् । इमामूर्णायुं वरुणस्य मायान्त्वचं पशूनान् द्विपदाश्चतुष्पदाम् । त्वष्टुः प्रजानां प्रथमं जनित्रमग्ने मा हिꣳसीः परमे व्योमन् । उष्ट्रमारण्यमनु ॥ ३ ॥ ते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद । यो अग्निरग्नेस्तपसोऽधि जातश्शोचात्पृथिव्या उतवा दिवस्परि । येन प्रजा विश्वकर्मा व्यानट्तमग्ने हेडः परिते वृणक्तु । अजाह्यग्ने रजनिष्टगर्भात्सावा अपश्यज्जनितारमग्रे । तयारोहमायन्नुपमेध्यास्तया देवा देवतामग्र आयन् । शरभमारण्यमनुते दिशामि तेन चिन्वानस्तवस्तनुवो निषीद ॥ ४ ॥

ஒன்பதாம் அநுவாகத்தில் இயற்கைச்சுக்கான் கல் முதலியவைகளை வைத்தல் கூறப்பட்டது. இதில் ஐந்து பசுக்களின் தலைகளை வைத்தல் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்

புருடன் தலையை வைத்தல்

மந்திரம்:

आदित्यं गर्भं पयसा समञ्जन्त्सहस्रस्य प्रतिमां विश्वरूपम् । परिवृङ्धि हरसा माऽभिमृक्षश्शतायुषं कृणुहि चीयमानः । என்பது.

உரை.

அக்கினியே! நீ, பரவப் பெற்றதாயிருந்து, அதிதி தேவதையின் காரியமாகிய கருப்பம் போன்ற இப் புருடன் தலையை, எரிக்காமல் விட்டு விடுவாயாக. உனது சுவாலையாற் கொளுத்தி விடாதே. இவ்வாறு எரிக்காமையால், அக் கருப்பத்தை, அல்லது, எசமானனை, நூற்றுக்கணக்கான ஆயுளை யுடையதாக அல்லது உடையவனாகச் செய்வாயாக. எவ்விதமாகிய கர்ப்பமெனின்! ஆயிரங் கோக்களுக்கு ஒப்பாகியது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், உகாவின் கீழ்ப்புறத்தில், கிழக்கு முகமாய் புருடன் தலையை, நிமிர்த்து வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரப்படி, 'चित्रन्देवानां' என்பது முதலிய முற்பாதி மந்திரத்தால், புருடன் தலையிலுள்ள வலது கண்ணில் ஒரு ஓமஞ் செய்தலும் வேண்டும்.

மற்றும், 'आप्रायावापृथिवी' என்னும் பிற்பாதி மந்திரத்தால், இடது கண்ணிலும் ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், இவ்விரண்டு ஹோமங்கட்கும் சூர்யாய இதம், என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். ஏனைய தலைகளிலுள்ள கண்களில் இத்தகைய ஓமஞ் செய்தல் இல்லை யென்பதையு முணர்க.

---

இரண்டாவது விநியோகம்

புருடன் தலையை போற்றுதல்.

மந்திரம் :

इमं मा हिꣳसीर्द्विपादं पशूनाꣳ सहस्राक्षमेध आचीयमानः । मयु
मारण्य मनुते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद । என்பது.

உரை

ஆயிரக்கணக்கான சுவாலைகளென்னும் கண்களுடன் கூடியதும், வேள்வியை யுண்டாக்குவதுமாகிய அக்கினியே! நீ எல்லாப் பசுக்க (விலங்குக) ளின் உடல்களிலும் பரந்துள்ளாய். ஆதலின், வனத்திலும், கிராமத்திலுமுள்ள பசுக்களுள் இரண்டுகாற் பசுவாகிய புருடனை எரித்துத் துன்புறுத்தாதே. உனக்கு உண்ண வேண்டு மெனின், இதன் பிறகு காளைமாட்டுத் தலை முதலிய தலைகளைப் போடுகின்றேன். அவைகளை யருந்திவிட்டு, உனது சுவாலைத் திருமேனியை வளர்த்துக் கொண்டு இங்கிருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், புருடன் தலையைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்.

குதிரைத் தலையை வைத்தல்

மந்திரம் :

वातस्य ध्राजिं वरुणस्य नाभिमश्वं जज्ञानꣳ सरिरस्य मध्ये । शिशुं
नदीनाꣳ हरिमद्रि बुध्नमग्ने मा हिꣳसीः परमे व्योमन् । என்பது.

தலையை வைத்தல்)

உரை.

அக்கினியே! நீ, காற்றுப் போல் வேகமுடையதும், வருணனால் மிகப் பிரியமாய் வளர்க்கப் பெற்றதும், கடலில் தோன்றியதும்; ஆற்று நீராகிய மாதாவின் குழந்தையும், தன் மேல் ஏறியவனைக் கொண்டு போய்ச் சேர்ப்பதும், சிறிய கற்களை, தனதுகாலின் குளம்புகளாற் பெயர்ப்பதுமாகிய குதிரையைச் சுடாதே. அதாவது, குதிரைக்குள்ள ஆயிரம் பிணிகளிலிருந்தும் அதைப் பாதுகாப்பாயாக. அதாவது, நீங்கிய பிணி மீண்டும் வராதபடி மேலான தன்மையில் வைப்பாயாக என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம் மந்திரத்தால், புருடன் தலைக்குக் கிழக்கில் குதிரையின் தலையை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

குதிரைத் தலையைப் போற்றுதல்

மந்திரம்:

इमं मा हिंꣳसीरेकशफं पशूनां कनिक्रदं वाजिनं वाजिनेषु । गौरमारण्य मनुते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद ।

என்பது.

உரை

மிகக் கனைப்பதும், விலங்குகளுக்குள் ஒற்றைக் குளம்புடையதும், வேகமாய்ச் செல்வனவற்றுள் மிக வேகமாய்ச் செல்வதுமாகிய குதிரையை, அக்கினியே! நீ, துன்புறுத்தாதே. ஏனையவை முன்போன்றன. என்பது.

சாயணபாஷ்யக் கருத்து.

இம்மந்திரத்தால் குதிரைத் தலையைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

எருதின் தலையை வைத்தல்

மந்திரம்:

अजस्र मिन्दुमरुषं भुरण्यु मग्निमीडे पूर्वचित्तौ नमोभिः । स पर्वभिर्ऋतुशः कल्पमानो गां मा हिंꣳसीरदितिं विराजम् ।

என்பது.

உரை.

இடையறாத ஐசுவரிய முடையதும், மர்மஸ்தானங்களைப் பாதுகாப்பதும் பண்டைக்காலத்திய முனிவர்களால் மனதில் தியானிக்கத் தக்கதுமாகிய அக்கி

னியை, வணக்க முடைய யான் துதிக்கின்றேன். அத்தகைய அக்கினியே, இரவி வடிவாய் அமாவாசை திதி, இருது முதலிய காலங்களிலுள்ள கருமங்களைத் தேடுகின்றது. இத்தன்மை வாய்ந்த அக்கினியே! நீ, மறுக்கப்படாததும், விலங்குகின்றதுமாகிய இந்த எருதைத் துன்புறுத்தாதே என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் எருதின் தலையை, புருடன் தலைக்கு மேற்கில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்
எருதின் சிரசைப் போற்றுதல்

மந்திரம் :

इम॑ँ समुद्र॑ँ शतधारमुत्सं व्यच्यमानं भुवनस्य मध्ये। घृतं दुहाना
मदितिं जनायाऽग्ने मा हि॑ँसीः परमे व्योमन्। गवयमारण्य मनु ते
दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद। என்பது.

உரை

மிக உயரமானதும், தனது சாதியின் வாயிலாக ஆயிரக்கணக்கான பாலின் தாரைகளைப் பொழிவதும், ஆற்று நீரோட்டத்திற்கு ஒத்ததும், புவனத்திற்கு நடுவில் இருப்பதும், தனது சாதி மூலமாய் நெய்த் தாரையை யுடையதும், மறுப்பற்றதும், கோவைப் போன்ற விலங்கு விசேடமுமாகிய எருதைத் துன்புறுத்தாதே என்பது. ஏனையவை முன்போன்றன.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால் எருதின் தலையைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாம் விநியோகம்.
செம்மறி ஆட்டின் தலையை வைத்தல்

மந்திரம் :

वरूत्रिं त्वष्टुर्वरुणस्य नाभिमविं जज्ञाना॑ँ रजसः परस्मात्। मही॑ँ
साहस्री मसुरस्य मायामग्ने मा हि॑ँसीः परमे व्योमन्।
என்பது.

உரை

துவஷ்டாவின் அநுக்கிரகத்தால் அழகிய உருவமுடையதும், வேண்டாததை விலக்கும் வருணனுடைய நாபியும், உலகில் விளையும் பிரசாபதியி

(ஆட்டின் தலையை வைத்தல்)

பிருந்து உண்டானதும், ஆயிரக்கணக்கான அசுரமாயைகளை யுடையதும், அசுர சம்பந்தமா யுண்டாக்கப்பட்டதுமாகிய செம்மறி ஆட்டின் தலையை, அக்கினியே! நீ, துன்புறுத்தாதே என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், புருடனுடைய தலைக்குத் தெற்கில் செம்மறி ஆட்டின் தலையை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்.

செம்மறி ஆட்டின் தலையைப் போற்றல்

* மந்திரம் :

इमा मूर्णायुं वरुणस्य मायां त्वचं पशूनां द्विपदां चतुष्पदाम् । त्वष्टुः प्रजानां प्रथमं जनित्रमग्ने मा हिꣳसीः परमे व्योमन् । उष्ट्रमारण्य मनुते दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद ।

என்பது.

உரை

வேண்டாததை விலக்கும் அக்கினிசம்பந்தமாய் உண்டாகியதும், மக்களுக்கும் விலங்குகட்கும் தோல்போன்றதும், ஈண்டுக் கம்பலத்தால் போர்த்தல் தோலாம். விலங்கிலும், எருது, பொதி சுமக்குங்கால் பின் புறத்திற் கம்பளியாற் கட்டுதல் வேண்டு மென்க. பிரசாபதியால் உண்டாக்கப் பெற்றவைகளுள் முதலாவதாகத் தோன்றியதுமாம். இவ்வாட்டின் தலை முதன்மையாந் தன்மை வீரிய முடைமையின் என்க. இத்தகைய ஆட்டின் தலையை, அக்கினியே! நீ, துன்புறுத்தாதே என்பது. மற்றவை முன்போல்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், செம்மறி ஆட்டின் தலையைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்.

வெள்ளாட்டின் தலையை வைத்தல்.

மந்திரம் :

यो अग्निरग्नेस्तपसोऽधिजातश्शोचात्पृथिव्या उत वा दिवस्परि । येन प्रजा विश्वकर्मा व्यानट्तमग्ने हेडः परिते वृणक्तु ।

என்பது.

உரை

பிரசாபதியின் தவத்தால் இவ்வுலக அக்கினி உண்டானதாம். அவ்வக்கினி, பூமியின்மேல் காய்கின்றது. அல்லது சுவர்க்கத்தின் மேல் காய்கின்றது. எந்த ஆட்டுவடிவால் பிரசாபதி விலங்குகளை உண்டாக்கினரோ, அந்த ஆடு வெள்ளாடாம். மற்றும், தவத்தால் உண்டாக்கிய வெள்ளாட்டினிடத்தில் அக்கினியே! உனது கோபத்தை எவ்வெள்ளாட்டினால் விசுவகருமா உண்டாக்கினரோ, அத்தகைய வெள்ளாட்டின் தலையை, நீ, நாசஞ் செய்து விடாதே என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், புருடனுடைய தலைக்கு வடக்கில் வெள்ளாட்டின் தலையை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்.

வெள்ளாட்டின் தலையைப் போற்றுதல்.

மந்திரம்:

अजाह्यग्ने रजनिष्टगर्भात्सावा अपश्यज्जनितारमग्रे । तया रोहमाय-
न्नुपमेध्यासस्तया देवा देवतामग्र आयन् । शरभमारण्य मनुते
दिशामि तेन चिन्वानस्तनुवो निषीद ।

என்பது.

உரை

இவ்வெள்ளாடு அக்கினியின் கருப்பத்திலிருந்து உண்டானது. அது அக்கினியினும் பிரசாபதியினிடத்தினுமிருந்து உண்டான பிறகு, தன்னை யுண்டாக்கிய பிரசாபதியைப் பார்த்தது. ஆடு இவ்வாறு பெருமை வாய்ந்த தாமாதலின், அவ்வாட்டால் வேள்வி செய்தற்குரிய எசமானன், விரைவில் சுவர்க்கத்திலேறுகின்றான். அதாவது சுவர்க்கத்தை யடைகின்றனன் என்பதாம். மற்றும், இப்போதுள்ள தேவர்களும், முற் பிறப்பில் வெள்ளாட்டால் கருமத்தை யநுட்டித்து தேவத்தன்மை யடைந்தனர். இத்தன்மைய பெருமை வாய்ந்த ஆட்டின் தலையைத் துன்புறுத்தாதே என்பது. மற்றவை முன்போல்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வெள்ளாட்டின் தலையைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

---

பாதச் செங்கலை வைத்தல்)

## இவ்வநுவாக பரிசேடம்

ஐந்து பசுக்களின் தலைகளுக்குப் பதிலாக வாயு தேவதைச்குரிய ஒரு வெள்ளாட்டுக் கடாவின் தலையை வைக்கும் பட்சத்தில், ஐந்து தலைகளை வைக்கும் ஐந்து மந்திரங்களாலும் வெள்ளாட்டுக் கடாவின் தலை ஒன்றை வைத்து, இரண்டு ஹோமங்களையுஞ் செய்த பிறகு, ஐந்து தலைகளைப் போற்றும் ஐந்து மந்திரங்களாலும் இதைப் போற்றல் வேண்டும்.

சண்டுச் சூத்திரப்படி, 'नमो अस्तु'. என்பது முதலிய மூன்று மந்திரங்களால், மகாக்கினி சயனத்தி(கருடனி)ன் வலது தோளில் பாம்பின் தலையை வைத்தல் வேண்டும். இன்றெனில் மந்திரமாத்திரத்தையும் ஓதலாம்.

### முதலாவது பன்னிரண்டை வைக்கும் முறை.

பிறகு, 'मा छन्दस्तत्पृथिवी' என்பது முதலிய மந்திரத்தால், பதினன்காவது வரிசையின் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'प्रमा छन्दस्तदन्तरिक्षं' என்பது முதலிய மந்திரத்தால், பதின்மூன்றும் வரிசையின் முதலாவதாகிய ஷோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.

'प्रतिमा छन्दस्तद्यौः' என்பது முதலிய மந்திரத்தாலும், 'अस्रीविः छन्दस्तद्दिशः' என்பது முதலிய மந்திரத்தாலும், பன்னிரண்டாம் வரிசையில் மூன்றுவது பாதச் செங்கலையும் நான்காவது பாதச் செங்கலையும் வைத்தல் வேண்டும்.

'विराट् छन्दस्तद्वाक्' பதினோராம் வரிசையில் இரண்டாவது ஷோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.

'गायत्री छन्दस्तदजा' என்பது முதலிய மந்திரத்தால் பத்தாம் வரிசையில் இரண்டாவது ஷோடசிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'त्रिष्टुप्छन्दः' என்பது முதலிய மந்திரத்தால் ஒன்பதாவது வரிசையில் இரண்டாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டும்.

'जगती छन्दस्तद्गौः' என்பது முதலிய மந்திரத்தால் எட்டாம் வரிசையில் இரண்டாவது ஷோடசிக் செங்கல் வைத்தல் வேண்டும்.

'अनुष्टुप्छन्दस्तदायुः' என்பது முதலிய மந்திரத்தால் ஏழாம் வரிசையில் மூன்றுவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'उष्णिहा छन्दस्तच्चक्षुः' என்பது முதலிய மந்திரத்தால் முற்கூறிய வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'पङ्क्तिश्छन्दस्तत्कृषिः' என்பது முதலிய மந்திரத்தால் ஆறும் வரிசையில் முதலாவது ஷோடசிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

(பாதச் செங்கலை

'बृहती छन्दस्तदश्वः' என்பது முதலிய மந்திரத்தால் ஐந்தாம் வரிசையில் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும். இவ்வாறு பன்னிரண்டு மந்திரங்களாலும் பன்னிரண்டு செங்கல்கள் வைக்கப்பட்டன.

இரண்டாம் முறை வைக்கும் பன்னிரண்டு.

மேற் கூறியுள்ள பன்னிரண்டு மந்திரங்களுள் முன்னுள்ள நான்கு மந்திரங்களாலும் பன்னிரண்டாம் வரிசையில், ஐந்தாவது முதல் நான்கு பாதச் செங்கல்களையும் ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டும்.

ஐந்தாம் மந்திரம் முதல் நான்கு மந்திரங்களால், பதினோராம் வரிசை முதல் எட்டாம் வரிசை வரை ஒவ்வொரு வரிசையில் மூன்றுவது மூன்றுவது ஷோடசிக் கல்களாக நான்கு ஷோடசிக் கல்லுகளை ஒவ்வொரு மந்திரத்தால் வைத்தல் வேண்டும்.

ஒன்பதாம் மந்திரம் முதல் நான்கு மந்திரங்களாலும், ஏழாம் வரிசையில், ஐந்து முதல் நான்கு பாத செங்கல்களை ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டும்.

மூன்று முறை வைக்கும் பன்னிரண்டு

முதல் மந்திரத்தால், பதின்மூன்றாம் வரிசையில் ஈற்றிலுள்ள பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

இரண்டாம் மந்திரத்தால், பதின் மூன்றும் வரிசையில் ஈற்றிலுள்ள ஷோடசிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

. மூன்றுவது மந்திரத்தால், பன்னிரண்டாம் வரிசையில் ஒன்பதாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

நான்காவது மந்திரத்தால், பன்னிரண்டாம் வரிசையில் பத்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

ஐந்து முதல் நான்கு மந்திரங்களாலும், பதினோராவது வரிசையிலிருந்து எட்டாவது வரிசை வரை நான்கு வரிசைகளிலும் நான்காவது ஷோடசிச் செங்கலையும், ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டும்.

ஒன்பதாவ்து பத்தாவது மந்திரங்களால் ஏழாவது வரிசையில் ஒன்பதாவது பத்தாவ்து பாதச் செங்கல்களிரண்டையும் வைத்தல் வேண்டும்.

பதினோராவது மந்திரத்தால் ஆறுவது வரிசையில் ஈற்றிலுள்ள ஷோடசிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

வைத்தல்)

*பன்னிரண்டாவது மந்திரத்தால், ஐந்தாம் வரிசையில் நாலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*இவ்வாறு செய்யப் பெற்ற முப்பத்தாறு செங்கல்களும் புருடனுடைய வடிவமாதலின், வேள்வித்தலைவன், ' सहस्रशीर्षा पुरुषः ' என்பது முதலிய புருடசூக்த மந்திரங்களால் அவற்றைப் போற்றல் வேண்டும் என்பதாம்.*

பத்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## பதினோராம் அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

वारुणारण्य प्रधासेपु याज्या अन्त्यानुवाकगाः ।
इन्द्राग्नी तिस्त्र ऐन्द्राग्ने मारुते तु मरुत्त्रयम् ॥ १ ॥
अवो तु वारुणे यागे कयाको काययागके ।
अग्न आदेव (वा) संयाज्ये शंनो वाजेतु वाजिने ॥ २ ॥
आसुद्वयंचाव भृथेऽनुवाक्ये आज्यभागयोः ।
इन्द्रं तत्त्वा प्रधानस्य प्रोक्ते त्वं सत्यमित्यमू ॥ ३ ॥
सं याज्ये इति मन्त्रास्तु विंशतिः समुदीरिताः ।

---

## நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பதினோராம் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிக்குமேல் பதினொரு பதங்களைக்கொண்டது

---

தலைப்பு பெயர் பூண்ட அநுவாக எண் :—

विष्णो॥र्विवस्पर्यैसपतेऽपेत समितं या जाता मानोऽभ्यस्थाध्रुवाऽसि धरुणा दिस्यं गर्भमिन्द्राग्नी रोचनैकादश ॥ (११)

தலைப்புச் சொற்களைக்கொண்ட பஞ்சாதி எண் :—

विष्णोरस्मिन्हव्येति त्वाहं धीतिभिर्होता अष्टाचत्वारिंशत् ॥ (४८)

யாஜ்யாநுவாக்கியங்களைக் கூறும் மந்திரங்கள்.

इन्द्राग्नीरोचना दिवः परिवाजेषु भूषथः । तद्वांश्चेति प्रवीर्यम् । श्नथद्वृत्रमुतसनोति वाजमिन्द्रायो अग्नी सहुरीसपर्यात् । इरज्यन्ता वसव्यस्य भूरेस्सहस्तमा सहसा वाजयन्ता । प्रचर्षणिभ्यः पृतना हवेषु प्रपृथिव्यारिरिचाथे दिवश्च । प्रसिन्धुभ्यः प्रगिरिभ्यो महित्वा प्रेन्द्राग्नी विश्वा भुवनाऽत्यन्या । मरुतो यस्य हि ॥ १ ॥ क्षये पाथा दिवो विमहसः । ससुगोपातमो जनः । यज्ञैर्वा यज्ञवाहसो विप्रस्य वा मतीनाम् । मरुतश्शृणुता हवम् । श्रियसेकं भानुभिस्सं मिमिक्षिरेते रश्मिभिस्त ऋक्वभिस्सुखादयः । ते वाशीमन्त इष्मिणो अभीरवो विद्रे प्रियस्य मारुतस्य धाम्नः । अवते हेड उदुत्तमम् । कया नश्चित्र आभुवदूती सदा वृधस्सखा । कयाशचिष्ठया वृता ॥ २ ॥ को अद्ययुङ्क्ते धुरिगा ऋतस्य शिमीवतो भामिनो दुर्हृणायून् । आसन्निषून् हृत्स्वसो मयोभून् य एषां भृत्या मृणधत्सजीवात् । अग्नेन या देवानाꣳ शन्नो भवन्तु वाजे वाजे । अप्स्वग्ने सधिष्टवसौ-षधीरनुरुध्यसे । गर्भे सञ्जायसे पुनः । वृषासोमद्युमाꣳ असि वृषा-देववृषव्रतः । वृषा धर्माणि दधिषे । इमं मे वरुणतत्त्वायामि त्वन्नो अग्ने सत्वन्नो अग्ने ॥ ३ ॥

*பத்தாம் அநுவாகத்தில் பசுக்களின் தலைகளை வைத்தல் கூறப்பட்டது. இதில் யாஜ்யாநு வாக்கியங்கள் கூறப்படுகின்றன.*

*சாதுர் மாசியங்களுள், வருணப்பிரகாசம் என்னும் இரண்டாம் பருவத்தில், ஐந்திர மேகாதச கபாலம், மாருதம் ஆமீக்ஷாம், வாருணீம் ஆமீக்ஷாம், காயம் ஏக கபாலம் என நான்கு அவிகள் கூறப்படுகின்றன.*

வாக்கியங்கள்)

அவற்றுள், ஐந்திராக்கினியின் புரோநுவாக்கியம் :—

முதல் மந்திரம்

इन्द्राग्नी रोचना दिवः परिवाजेषु भूषथः । तद्वाञ्चेति प्रवीर्यम् ।

என்பது.

உரை

விண்ணுலகை விளக்குகின்ற இந்திராக்கினிகளே! நீவிரிருவரும் அவிக ளென்னும் உணவுப் பொருள்களை எவ்வாற்றானு மடைகின்றீர்கள். இக்கார ணத்தால் உலகினர் உங்களுடைய வன்மையை இனிது உணர்ந்தனர் என்பது.

அதில் யாஜ்யா வாக்கியம்

இரண்டாம் மந்திரம்

श्नथद्वृत्रमुतसनोति वाजमिन्द्रायो अग्नी सहुरीसपर्यात् । इरज्यन्ता वसव्यस्य भूरेस्सहस्तमा सहसा वाजयन्ता ।

என்பது.

உரை

சமானமாய் அழைக்கப் பெற்ற இந்திரனையும், அக்கினியையும், எந்த வேள்வித்தலைவன் வழிபடுகின்றானோ, அவன், பகைவனாகிய விருத்திரனைக் கொல்கின்றான். மற்றும், அனைவருக்கும் அன்னமளிக்கின்றான். அற்றேல் அவ்விருவரும் எத்தன்மையர்களெனின்! ஈசுரத்தன்மையை யடைந்தவர்கள். தமது வன்மையால் பிறருடைய வன்மையை அடக்குகின்றவர்கள். உண வுப் பொருளை விரும்புகின்றவர்கள் என்க.

அதில் விகற்பமாக மற்றொரு யாஜ்யாவாக்கியங் கூறப்படுகின்றது.

மூன்றாம் மந்திரம்.

प्रचर्षणिभ्यः पृतना हवेषु प्रपृथिव्या रिरिचाथे दिवश्च । प्रसिन्धुभ्यः प्रगिरिभ्यो महित्वा प्रेन्द्राग्नी विश्वा भुवनाऽत्यन्या ।

என்பது.

உரை

இந்திராக்கினிகளே! நீங்களிருவரும் அவிகளை யேற்றுக் கொள்வதன் பொருட்டுக் கூப்பிடும் போர்களில், எல்லாரையும் விடச் சிறந்தவர்களா யிருக் கின்றீர்கள். அங்ஙனமே, வான், மண், கடல், மலை, முதலியவைகளையுங் கடந்து இருக்கின்றீர்கள். விரிப்பதிலென்? எல்லாவற்றையுங் கடந்து மேலாய்ச் சிறந் திருக்கின்றீர்கள் என்பது.

மாருதி ஆமிட்சையில் புரோநுவாக்கியம்

நான்காம் மந்திரம்

**मरुतो यस्यहि क्षये पाथादिवो विमहसः । ससुगोपातमो जनः ।**

என்பது.

உரை.

*மிகுந்த ஒளிகளையுடைய மருத்துக்களே! வானுலகிலிருந்து வந்த நீங்கள், எவ் வேள்வித்தலைவன் வீட்டைப் பாதுகாக்கின்றீர்களோ! அவ் வேள்வித்தலைவன் மிகுந்த பாதுகாப்புடையவனாகுக என்பது.*

*அதில் விகற்பமாய் மற்றொரு புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது.*

---

ஐந்தாம் மந்திரம்

**यज्ञैर्वा यज्ञवाहसो विप्रस्य वामतीनाम् । मरुतश्शृणुता हवम् ।**

என்பது.

உரை

*வேள்வியைக் கொண்டு செலுத்தும் மருத்துக்களே! வேள்வியின் பொருட்டு நான் அழைப்பதைக் கேட்பீர்களாக. அல்லது, விப்ரனாகிய எசமானனுடைய சித்தவிருத்தியின் அநுக்கிரகத்தின் பொருட்டு எனது அழைப்பைக் கேட்பீர்களாக என்பது.*

---

அதில் யாஜ்யாவாக்கியம்

ஆறாம் மந்திரம்

**श्रियसेकं भानुभिस्सं मिमिक्षिरेते रश्मिभिस्त ऋकभिस्सुखादयः ।**
**ते वाशीमन्त इष्मिणो अभीरवो विद्रे प्रियस्य मारुतस्य धाम्नः ।**

என்பது.

உரை.

*அத்தகைய மருத்துக்கள், வாதவடிவினர்களாயிருந்து உயிர்களைச் சேர்தற் பொருட்டு இரவியின் கிரணங்களுடன் மேக மழையால் பூமியை யடைய விரும்புகின்றனர். மற்றும், யாஜ்யா புரோநுவாக்கியமான இருக்குக்களால் துதிக்கப் பெற்று நல்ல அவிகளை அருந்துகின்றனர். பிறகு, அம்மருத்துக்கள், களிப்பால் பல்வகையாக இரைச்சலிட்டுக் கொண்டவர்களாயும், தமது கிருகங்களைக் குறித்துச் செல்கின்றவர்களாயும், தமது காரிய முடிந்தமையின் அசுர பயமற்றவர்களாயும் இருந்து, தமக்குப் பிரியமுடைய இடத்தை யடைந்து விட்டார்கள் என்பது.*

---

வாக்கியங்கள்)

வாருணி ஆமிட்சையின் யாஜ்ய புரோநுவாக்கியங்களின் தலைப்புச்சொற்கள்:

ஏழாம் மந்திரம்.

अवते हेड उदुत्तमम् ।  என்பது.

உரை.

'அவதே ஹேட' என்பது புரோநுவாக்கியம். 'உதுத்தமம்' என்பது யாஜ்யா வாக்கியம் என்பதாம்.

---

காயம் ஏக கபாலம் என்பதின் புரோநுவாக்கியம்

எட்டாம் மந்திரம்

कयानश्चित्र आभुवदूती सदा वृधस्सखा । कया शचिष्ठया वृता ।

என்பது.

உரை.

பிரசாபதியின் பாதுகாப்பால் இடையறாது வளர்வதும், மிகப் பிரிய முடையதும் அதிசயமுடையதுமாகிய இந்த வேள்வி எமக்குக் கிட்டிற்று. அத்தகைய வேள்வி, பிரசாபதியின் அதிசயமாகிய வன்மையுடன் கூடியது என்பதாம்,

---

அதற்கே யாஜ்யா வாக்கியம்

ஒன்பதாம் மந்திரம்.

को अद्ययुङ्क्ते धुरिगा ऋतस्य शिमीवतो भामिनो दुर्हृणायून् । आसन्निषून् हृत्स्वसोमयोभून् य एषां भृत्या मृणधत्स जीवात् ।

என்பது.

உரை.

பிரசாபதி, இவ்வேள்வித் தொடக்கச் சமயத்தில், இக்கருமத்திற் குரியவைகளும், தமது பொருளை விளக்குகின்றவைகளும், துன்பத்தைப் போக்குகின்றவைகளும், எமது வாயிலிருந்து கிளம்புகின்றவைகளும், சுகத்தை யுண்டாக்குகின்றவைகளுமான எமது துதியாகிய வாக்கு விசேடங்களை, தனது சித்தத்தில் வைக்கின்றான். அதுகண்டு இத்தகைய துதிகளைச் செய்கின்ற வேள்வித் தலைவன் நீண்டநாள் வாழ்கின்றான் என்பது.

---

சுவிஷ்டகிருதின் யாஜ்யாவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் :—

பத்தாம் மந்திரம்

अग्ने न याऽऽदेवानाम् ।  என்பது.

உரை.

'அக்கினே நய சுபதா' என்பது புரோநு வாக்கியம். 'ஆதேவாநாமபி பந்த்தா' என்பது யாஜ்யாவாக்கியம். இவ்விரண்டிற்கும், 'உபாவாமி இந்திராக்கினீ' என்னும் அநுவாகத்தில் பொருள் கூறப்பட்டிருக்கின்றது என்பது.

'ஆமீட்சா நிட்பாதிந:' என்பதற்கும், 'வாஜின ஹவிஷ:' என்பதற்கும் யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன;



பதினோராம் மந்திரம்

शन्नो भवन्तु वाजे वाजे ।

என்பது.

உரை

'சம்நோபவந்து வாஜிநோ ஹவேஷு' என்பது புரோநுவாக்கியம். 'வாஜே வாஜே அவத' என்பது யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டிற்கும், 'தேவஸ்யாஹம் சவிது:' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.



ஆவிருதத்தில் முதலாவது ஆஜ்ய பாகத்திற்கு புரோநுவாக்கியம்:—

பன்னிரண்டாம் மந்திரம்

अप्स्वग्ने सधिष्टवसौषधीरनुरुध्यसे । गर्भे सञ्जायसे पुनः ।

என்பது.

உரை

அக்கினியே! உனது வன்மை நீரில் இருக்கின்றது. அத்தகைய வன்மை கொடி செடிகளைப் பற்றி நிற்கின்றது. அவைகள் சாடாக்கினி வடிவாய் தீயை ஏற்றுக் கொள்ளுதலுடன் என்க. தீக்கடைக் கோல்களின் கருப்பத்திலிருந்து மீண்டும் மீண்டும் நீ உதித்தின்றாய் என்பது.



இரண்டாவது ஆஜ்ய பாகத்தின் புரோநு வாக்கியம்

பதின்மூன்றாம் மந்திரம்

वृषा सोमद्युमाँ असि वृषादेव वृषव्रतः । वृषाधर्माणि दधिषे ।

என்பது.

உரை.

சோமமே! நீ, விரும்பியவற்றைப் பெய்கின்றவனாயும், ஒளியுடையவனாயும் இருக்கின்றாய். ஆதலின் நீ, அதன் பொருட்டு விரதமுடையவன்.

மற்றும், நீ விரும்பியவற்றைப் பெய்விக்குந் தன்மையனானதால் தர்மங்களைத் தாங்குகின்றாய். சோமமே! நீ, தாங்குகின்றோனாயிருக்கின்றாய் என்பது.

வாருணத்தின் யாஜ்யாநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன :—

---

பதினான்காம் மந்திரம்.

इमं मे वरुण तत्त्वायामि ।

என்பது.

உரை.

'இமம் மே வருண சுருதி' என்பது புரோநு வாக்கியம். 'தத்வாயாமி ப்ரஹ்மணா வந்த்யமான' என்பது யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டிற்கும், 'ஆயுர்தா அக்ன' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது.

---

அக்கினி, வாருண, சுவிஷ்டகிருத் என்பவற்றின் யாஜ்யா வாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் :—

பதினைந்தாம் மந்திரம்.

त्वन्नो अग्ने सत्वन्नो अग्ने ॥

என்பது.

உரை.

'த்வம்நோ அக்னே வருணஸ்ய' என்பது புரோநு வாக்கியம். 'சத்வம் நோ அக்னே அவமோ' என்பது யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டிற்கும், 'ஆயுர்தா அக்னே' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.

பதினோராம் அநுவாகம் முற்றிற்று.

நான்காங் காண்டம் இரண்டாம் பிரபாடகம் முடிந்தது.

---



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## நான்காங் காண்டம் மூன்றும் பிரபாடகம்



விடயச் சுருக்கம்.

प्रपाठके द्वितीयेहि चितिक्षेत्रं निरूपितम् ।
वाच्यास्तृतीयके पञ्च चितयोऽत्र त्रयोदश ॥ १ ॥
अनुवाकास्त्रिभिर्द्वाभ्यां तथा द्वाभ्यां चतुष्टयात् ।
एकेन चितयो याज्या इत्यर्था अनुवाकगाः ॥ २ ॥

*இரண்டாம் பிரபாடகத்தில், மகாக்கினி சயனஞ் செய்ய வேண்டிய முறை கூறப்பட்டது. இம்மூன்றும் பிரபாடகத்தில் ஐந்து சிதிகள் சொல்லப்படுகிறது இது பதின்மூன்று அநுவாகங்களை உடையது. அவைகளிலும், 1, 2, 3, இம் மூன்று அநுவாகங்களால் முதலாவது சிதியையும், 4, 5, இவ்விரண்டு அநுவாகங்களால் இரண்டாம் சிதியையும், 6, 7, இவ்விரண்டு அநுவாகங்களால் மூன்றுவது சிதியையும், 8, 9, 10, 11, இந் நான்கு அநுவாகங்களால் நான்காவது சிதியையும், 12-வது அநுவாகத்தால் ஐந்தாவது சிதியையும் (செங்கல் அடுக்குகளை) அடுக்க வேண்டியது. 13-வது அநுவாகம் யாஜ்யாநு வாக்கியம் என்பது.*



### முதல் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अपामपस्या दिक्ष्वेता उपधेयास्तु विंशतिः ॥

*'அபஸ்யம்' என்னும், இருபது செங்கல்லுகளை வைத்தல் வேண்டும் என்பது.*



## நான்காங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## முதல் அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்கு மேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.

---

'அபஸ்யம்' என்னும் பெயர் கொண்ட செங்கல்களைக் கூறு மந்திரங்கள்.

अपान्त्वेमन्त्सादयाम्यपान्त्वोद्मन्त्सादयाम्यपान्त्वा भस्मन्त्सादयाम्यपान्त्वा ज्योतिषि सादयाम्यपान्त्वाऽयने सादयाम्यर्णवे सदनेसीद समुद्रे सदनेसीद सलिले सदनेसीदाऽपाङ्क्षयेसीदा पाꣳसधिषिसीदा पान्त्वासदने सादयाम्यपान्त्वा सधस्थे सादयाम्यपान्त्वा पुरीषे सादयाम्य पान्त्वायोनौ सादयाम्य पान्त्वा पाथसि सादयामि गायत्री छन्दस्त्रिष्टुप्छन्दो जगती छन्दोऽनुष्टुप्छन्दः पङ्क्तिश्छन्दः ॥ १ ॥

இந்த அநுவாகத்தில் முதல் அடுக்கில் வைக்கும் 'அபஸ்யம்' என்னுஞ் செங்கல்களை வைக்கும் முறை கூறப்படுகின்றது.

ஈண்டு, அபஸ்யம் என்னுஞ் செங்கல்கள் இருபதாம். அவற்றை நான்காகப் பகுத்து, ஒரு ஐந்தை, தலையில் கிழக்கிலிருந்து மேற்காகவும், ஒரு ஐந்தை தென் பக்கத்துச் சிறகில் தெற்கிலிருந்து வடக்காகவும், ஒரு ஐந்தை வாலில் மேற்கிலிருந்து கிழக்காகவும், ஒரு ஐந்தை வடபக்கத்துச் சிறகில் வடக்கிலிருந்து தெற்காகவும் வைத்தல் வேண்டும்.

அவற்றுள் முதலாவது ஐந்து செங்கல்களை வைக்கும் முறை கூறப்படுகின்றது.

---

### முதல் விநியோகம்

### முதலாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

अपां त्वेमन्त्सादयामि ।

என்பது.

(அபஸ்ய மென்னுந்

உரை

*செங்கல்லே! உன்னை, ஓடும் நீரின் முறையில் வைக்கின்றேன் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், பதின்மூன்றாவது வரிசையில் முதலாவது பாதக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

இரண்டாங் கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

अपां त्वोद्मन्त्सादयामि ।

என்பது.

உரை

*செங்கல்லே! உன்னை, அலை யெழும் முறையில் வைக்கின்றேன் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், பதினைந்தாம் வரிசையில் முதலாவது ஷோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

---

மூன்றுங் கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

अपां त्वा भसन्त्सादयामि ।

என்பது.

உரை.

*செங்கல்லே! உன்னை, நீரின் வெண்மை வடிவில் வைக்கின்றேன் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம்மந்திரத்தால், பதினன்காம் வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

நான்காங் கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

अपां त्वा ज्योतिषि सादयामि । என்பது.

உரை.

செங்கல்லே! உன்னை, தண்ணீரின் நிர்மலத்தன்மையில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பதினான்காவது வரிசையில் மூன்றாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां त्वा ऽयने सादयामि ।

என்பது.

உரை

செங்கல்லே! உன்னை, தண்ணீரின் ஆதாரமாகிய ஆறு கிணறு என்பவைகளில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், பதின்மூன்றாம் வரிசையில் இரண்டாவது ஷோடசிக் கல்லை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது ஐந்து.
ஆறாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अर्णवे सदने सीद ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, நீருக்கிடமாகிய ஏரியில் உட்காருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், தென்பக்கத்துச் சிறகில், மேல் வரிசையில் நுனிக் கல்லை விட்டு விட்டு இரண்டாவது கல்லை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

समुद्रे सदने सीद ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, கடலில் உட்காருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், மேற்கூறியபடி வைத்துள்ள செங்கலுக்குப் பக்கத்தில் மற்றொரு செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்

எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सलिले सदने सीद ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, நீருக்கிடமாகிய இடத்தில் உட்காருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்கூறியபடி வைத்துள்ள கல்லுக்கருகில் மூன்றாவதாக ஒரு செங்கலை வைத்தல் வேண்டுமென்பது.

ஒன்பதாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां क्षये सीद ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, தண்ணீர் வறண்ட குளத்தில் உட்காருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்த கல்லுக்கு அடுத்தபடியாக நான்காவது செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

பத்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपाꣳ सधिषि सीद ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, மேகத்திலிருந்து விழும் நீர்க் கட்டியில் உட்காருவாயாக என்பது.

செங்கல்களை வைத்தல்)

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன் வைத்துள்ள கல்லுக்குப் பக்கத்தில் ஐந்தாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்

மூன்றுவது ஐந்து.

பதினோராவது கல்லை வைத்தல்

மந்திரம் :

अपां त्वा सदने सादयामि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, தண்ணீர் நிலைத்திருக்குமிடமாகிய ஆறு முதலியவைகளில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலின் முதல் வரிசையில் முதலாவது பாதக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

பன்னிரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां त्वा सधस्थे सादयामि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, மின்னல் முதலியவைகளுடன் கூடிய மேகத்தில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்கூறிய விடத்தில் இரண்டாவது பாதக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

பதின்மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां त्वा पुरीषे सादयामि ।

என்பது.

உரை

செங்கலே, உன்னை, ஆற்று மணலில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாயின் இரண்டாவது வரிசையில் முதலாவது ஷோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां त्वा योनौ सादयामि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, தண்ணீரின் காரணமாகிய தீயின்கண் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வாயின் மூன்றாவது வரிசையில் முதலாவது சோடசி என்னுங் கல்லை வைத்தல் வேண்டுமெனபதாம்.

---

பதினைந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपां त्वा पाथसि सादयामि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, மேசமானது தண்ணீரை மொள்ளுங் கடலில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாயின் நான்காவது வரிசையில் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

நான்காவது ஐந்து.

மந்திரம் :

गायत्री छन्द स्त्रिष्टुप्छन्दो जगती छन्दोऽनुष्टुप्छन्दः पङ्क्तिश्छन्दः ।

என்பது.

உரை.

செங்கல்களே! நீங்கள், காயத்திரி, திருஷ்டுப், சகதி, அநுஷ்டுப், பங்க்தி என்னும் வடமொழிச் சந்தக்களின் வடிவுகளாக இருக்கின்றீர்கள் என்பது.

வைத்தல்)

சாயணபாடியக் கருத்து.

*இந்த ஐந்து மந்திரங்களாலும், வடபக்கத்துச் சிறகின் நுனியில் இருக்கின்ற கல்லை விட்டுவிட்டு, அந்த வரிசையில், வடக்கிலிருந்து தெற்காக மீந்த ஐந்து செங்கல்களையும் ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டு மென்பதாம்.*

முதல் அநுவாகம் முடிந்தது.

---

*பரிசேடம்.*

*பிறகு, சுக்கிரக்கைத் தழுவி,* (१) ये यज्ञे समगृभ्णन्, (२) ये ज्योतींषि सन्दधति, (३) ये पशवो मे ध्याराः, (४) यः पन्थाविततो देवयानः, (५) यो यज्ञस्सहस्रधारः ॥ *என்னும் ஐந்து மந்திரங்களாலும், முறையே, ஒவ்வொரு மந்திரத்திற்கும் ஒவ்வொரு பொன் தகட்டுத் துண்டாக ஐந்து பொன் துண்டுகளை, கிழக்கு முதலிய நான்கு திக்குக்களிலும் நடுவிலும் வைத்தல் வேண்டும்.*

*இனி, ரிஷ்டிகைகள் எனப்படும் நூறு செங்கல்களை வைக்குமுறை வருமாறு :—*

*'* आयवे स्वाहा *' என்னும் மந்திரத்தால், வடபக்கத்தின் சிறகின் முதலாவது செங்கலாகிய ' அப்யயம் ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'* आयोष्कृते स्वाहा *' என்னும் மத்திரத்தால், முற்கூறியபடி இரண்டாவதாகிய ' அப்யயம் ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'* आयोष्पत्वने स्वाहा *' என்னும் மந்திரத்தால், ஒன்பதாம் வரிசையில் ஈற்றிலுள்ள ' ஷோடசி ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'* विष्णवे स्वाहा *' என்னும் மந்திரத்தால், பத்தாம் வரிசையின் ஈற்றிலுள்ள ' ஷோடசி ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'* बृहस्पतये स्वाहा *' என்னும் மந்திரத்தால், முற்கூறியபடி, மூன்றாவதாகிய ' அப்யயம் ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'* अद्भ्यः संभृतः *' என்பது முதலிய மந்திரத்தால், முற்கூறியபடி நான்காவதாகிய ' அப்யயம் ' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*பிறகு, '* ऋतसदसि *' என்னும் ஏழாவது மந்திரம் முதல் '* धामाऽसि *' என்பது முதலிய பதின்மூன்றும் மந்திரம் வரையுள்ள ஏழு மந்திரங்களாலும், தென்பக்கத்து சிறகின் முதலாவது ' அப்யயம் ' என்னும் ஈற்றுச் செங்கலையும், எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று என்னும் நான்கு வரிசைகளின் முதலாவதான*

நான்கு சோடசிச் செங்கல்களையும், இரண்டாம் வரிசையில் முதலாவதான இரண்டு பாதச் செங்கல்களையும் முறையே ஒவ்வொரு மந்திரத்தால் ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டும்.

மற்றும், 'सनिरसि' என்னும் மந்திரம் முதல், '[illegible]' என்னும் மந்திரம் வரை உள்ள முப்பத்து மூன்று மந்திரங்களாலும், தென்புறத்துச் சிறகில் வைக்காமல் எஞ்சிக் கிடக்கும் இடங்களில் முதலில் தென் கோடியில் பதின்மூன்று கல்லுகள் வைக்க வேண்டிய இடங்களை விட்டு விட்டு, எஞ்சிய விடங்கள் அனைத்திலும், ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொரு கல்லாக முப்பத்து மூன்று செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, 'सपत्नहनं' என்பது முதலிய 48-ம் மந்திரத்திலிருந்து 'वत्सरे सीद' என்னும் 80-வது மந்திரம் வரையுள்ள 34 மந்திரங்களால், வடபுறத்துச் சிறகில் வைக்காமற் கிடக்கும் இடங்களில் வடகோடியில் ஒன்பது செங்கல்கள் வைக்கும் இடங்களை விட்டு விட்டு, மற்ற விடங்கள் அனைத்திலும் மந்திரத்திற்கு ஒன்றாக முப்பத்து நான்கு செங்கல்களை வைத்தல் வேண்டும்.

மற்றும், 'एकस्यां सीद' என்னும் 81-வது மந்திரத்திலிருந்து 'संपदसि' என்பது முதலிய நூறுவது மந்திரம் வரையுள்ள மந்திரங்களால், வாலின், முதலாவது வரிசையின் எட்டாவதான பாதச் செங்கல்லையும், இரண்டாவது வரிசையின் நான்காவது சோடசி என்னும் கல்லையும் விட்டுவிட்டு, எஞ்சிய விடங்களனைத்திலும் ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொன்றாக இருபது செங்கல்களையும் வைத்தல் வேண்டும். இத்துடன் ரிஷீஷ்டிகைகள் என்னுஞ் செங்கல்கள் வைத்து முடிந்தன.

இனி, 'आयुषः प्राणं' என்பது முதலிய பன்னிரண்டு மந்திரங்களாலும், முன்னர், தென்பக்கத்துச் சிறகில் விட்டிருந்த பதின்மூன்று செங்கல்களுள் நான்காவதாகிய தனிச் செங்கலை மாத்திரம் விட்டு விட்டு, எஞ்சிய பன்னிரண்டு செங்கல்களையும், ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொன்றாக வைத்தல்வேண்டும்.

மற்றும், 'पृथिवी वशा' என்பது முதலிய ஐந்து ருத்திர மந்திரங்களாலும், முன்னர் வடபக்கத்துச் சிறகில் விட்டிருந்த ஒன்பது செங்கல்களுள், தனிச் செங்கல்கள் நான்கையும் விட்டுவிட்டு எஞ்சிய செங்கல்களை, ஒவ்வொரு மந்திரத்திற்கு ஒவ்வொன்றாக வைத்தல் வேண்டும்.

இனி, பன்னிரண்டு மட்கலசங்களில் நீர் நிறைத்து வைக்குமுறை வருமாறு :—

'अग्नेत स्य' என்பது முதலிய ருத்திர மந்திரத்தால், ஒரு கலசத்தில் நீரை நிறைத்து இம் மந்திரத்தையே மீண்டும் ஓதிக்கொண்டு மற்றுமொரு கலசத்தில் நீர் நிறைத்துக்கொண்டு, 'शर्मच स्थ' என்பது முதலிய மந்திரத்

வைத்தல்)

தால், கிழக்கேயுள்ள முகத்தில் அதாவது பதினேழாவது வரிசையில் நடுவி லுள்ள பாதச் செங்கலுக்குக் கீழே முன் உழுதிருந்த ஏர்ப்படைச்சாலில் அவ் விரண்டு கலசங்களையும் வைத்தல் வேண்டும்.

அதன் பிறகு, 'ज्योतिषे वां' என்னும் மந்திரத்தால், இரண்டு பொன் துண்டுகளை அவ்விரண்டு கலசங்களிலும் போடல் வேண்டும்.

மற்றும், இவ்வாறே, 'शुक्रास्थवीर्यावती:' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு மட்கலசங்களில் நீர் நிறைத்து 'ऋतंच स्थ' என்பது முதலிய மந்திரத் தால், தென் பக்கத்துச் சிறகின் நுனியின் நான்காவது செங்கலுக்குக் கீழே வைத்து, 'चक्षुषे वां' என்பதால், பொன் துண்டுகளை அவ்விரண்டிலும் போடு தல் வேண்டும்.

அங்ஙனமே, 'मन्द्रास्थ' என்பது முதலிய மந்திரத்தால், இரண்டு மட்கல சங்களில் நீர் நிறைத்து, 'सपत्नघ्नी:' என்பது முதலிய மந்திரத்தால், மேற்கே யுள்ள வாலின் முதல் அடுக்கின் நடுவிலுள்ள பாதச் செங்கலின் கீழே வைத்து, 'रेतसे वां' என்பதால், அவ்விரண்டனுள்ளும் பொன் துண்டுகளைப் போடுதல் வேண்டும்.

மற்றும் 'अधिपतिस्थौजस्वान्' என்பது முதலிய மந்திரத்தால் இரண்டு மட் கலசங்களில் நீர் நிறைத்து, 'रक्षोघ्नीश्चस्थारातिघ्नी:' என்பது முதலிய மந்திரத் தால், வடபுறத்துச் சிறகின் நான்காவது நுனிச் செங்கலின் கீழே வைத்து, 'प्रजाभ्यो वां' என்பதால் அவற்றுள் பொன் துண்டுகளைப் போடுதல் வேண்டும்.

மற்றும், 'क्षत्र भृत:' என்பது முதலிய மந்திரத்தாலும், 'व्रजक्षित:' என் பது முதலியதாலும், நான்கு மட்கலசங்களிலும் நீர் நிறைத்து, 'वसुचस्थ' என் பது முதலிய மந்திரத்தாலும், 'भूतंचस्थ' என்பது முதலியதாலும், நடுவில், அதாவது ஆறாவது வரிசையின் மூன்றாவது கல்லின் கீழே அந்நான்கு கலசங் களையும் வைத்து, 'तेजसे वां' என்னும் மந்திரத்தாலும், 'वर्चसे वां' என்னும் மந்திரத்தாலும், அவ்விரண்டனுள்ளும் பொன் துண்டுகளைப் போடுதல் வேண்டும். இக் கலசங்கட்கு கும்பேஷ்டிகைள் எனப்பெயர்கள்.

பிறகு, 'हिरण्यवर्णा:' என்பது முதலிய அறுவாக மந்திரங்களாலும் நடு வில் வைத்த நான்கு மட்கலசங்களையும் போற்றல் வேண்டும்.

மற்றும், 'दिवि श्रयस्व' என்பது முதலிய மந்திரத்தால், செந்நெல் அரிசி யாற் செய்த பாற்பொங்கலை இக் கலசங்களின் இடையில் நடுவாகப் போடல் வேண்டும்.

பிறகு, 'हिरण्यरूप:' என்பது முதலான இரண்டு மந்திரங்களால், அந்தப் பொங்கலைப் போற்றல் வேண்டும்.

இனி, 'त्रिवृत्ते अग्ने' என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், முகத்தில், அதாவது பதினேழாவது வரிசையிலுள்ள பாதச் செங்கல் ஒன்றை வைத்தல் வேண்டும்.

எசமானன், 'त्रिवृत्ते' என்பது முதலிய மந்திரத்தால், அந்தப் பாதச் செங்கலைப் போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'पञ्चदशौ ते' என்பது முதலிய மந்திரத்தால், தென்பக்கத்துச் சிறகின் நான்காவது செங்கலை வைத்தல் வேண்டும்

எசமானன், 'पञ्चदशौ ते' அக் கல்லைப் போற்றல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'सप्तदशस्ते' என்பது முதலிய மந்திரத்தால், ஏழாவது வரிசையின் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

எசமானன், 'सप्तदशस्ते' என்பது முதலிய மந்திரத்தால், அந்தச் செங்கலைப் போற்றல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'एकविंशौ ते' என்பது முதலிய மந்திரத்தால், வடபக்கத்துச் சிறகின் நான்காவதாகிய நுனிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

எசமானன், 'एकविंशौ ते' என்பது முதலிய மந்திரத்தால், அக் கல்லைப் போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'त्रिणवौ ते' என்பது முதலிய மந்திரத்தால், ஆறுவது வரிசையில் மூன்றுவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.

எசமானன், 'त्रिणवौ ते' என்பது முதலிய மந்திரத்தால், அச் செங்கலை போற்றல் வேண்டும்.

வேட்போன், 'त्रयस्त्रिंशं ते अग्ने' என்பது முதலிய மந்திரத்தால், முதல் வரிசையின் எட்டாவதாகிய பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

எசமானன், 'त्रयस्त्रिंशं ते अग्ने' என்பது முதலிய மந்திரத்தால், அச்செங்கலைப் போற்றல் வேண்டும்.

வேட்போன், 'त्वामग्ने' என்பது முதலிய மந்திரத்தால், ஆறுவது வரிசையின் இரண்டாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டும்.

எஞ்சிய ஐந்து செங்கல்களையும், முன்னர்க் கூறியுள்ள, 'लोकं पृण' என்பது முதலிய இரண்டு மந்திரங்களால் ஒவ்வொரு செங்கலாக வைத்து விடல் வேண்டும். இத்துடன் முதலாவது அடுக்கு முடிந்தது.

வைத்துப் போற்றல்)

பிறகு, இவ்வாறு 200 செங்கல்களை அடுக்கியுள்ள சிதி (சிதியி)ன் மேல் பொன்னை வைத்து, (१) चित्तिमचित्तिं, (२) यत्तेचितं, (३) यास्ते अग्ने, (४) चित्तिमचित्तिं, (५) वयमग्ने धनवन्तः, (६) रायस्पोषं नः, (७) ईशानं त्वा, (८) दुहान्ते द्यौः, (९) यो रुद्रो अग्नौ, என்னும் இவ்வொன்பது ஒன்று மந்திரங்களாலும் இந்த முதலாவது அடுக்கை (சிதியை) ப் போற்றல் வேண்டும். இவ்வாறே மேல் அடுக்க வேண்டிய அடுக்குக்களையும் போற்றல் வேண்டும்.

பிறகு, வடபுறத்தில் நின்று கொண்டிருக்கின்ற கறுப்புக் குதிரையைத் தொட்டு விட்டு, சாத்வாலம் என்னும் மண்ணொடுக்கு மிடத்திலிருந்து மண்ணையெடுத்துக்கொண்டு வந்து, 'पृथ्वी दिवि' என்பது முதலிய மந்திரத்தால் அந்தச் செங்கல் அடுக்கை மூடி விடல் வேண்டும்.

பிறகு, 'ब्रह्म आसन्' என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டு அச்செங்கல் அடுக்கிலிருந்து கீழே இறங்கி விடல் வேண்டும்.

அதன், 'यो अप्स्वन्तरग्निः' என்பது முதலிய எழு மந்திரங்களாலும், சுருவில் ஒவ்வொரு முறை நெய் யெடுத்துக்கொண்டு சயனத்தின்மீது ஹோமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, 'अग्ने देवां इहावह' என்பது முதலிய மந்திரத்தால், இந்தச் செங்கல் அடுக்கைப் போற்றல் வேண்டும்.

பிறகு, மாலையிற் செய்ய வேண்டிய, பிரவர்க்யம் 'உபசத்' என்பவைகளைச் செய்து முடித்துக் கொண்டு, சுப்ரமண்ய ஆவாஹனஞ் செய்தல் வேண்டும். அதன் பிறகு, வெள்ளைக் குதிரையைப் பிடித்துக்கொண்டு, சயனத்தைச்சுற்றி வருதல் வேண்டும்.

அன்றிரவு, நான்கு பசுவின் முலைகளிலுங் கறந்த பாலை, காருகபத்தியத் தீயிற் காய்ச்சுவது முதல் நாபியைத் தொடும் வரை முன்போல் விரத கருமத்தைச் செய்து கொள்ளல் வேண்டும். இரவில் கண் விழித்துக் கொண்டிருத்தலும் வேண்டும். முதலாவது உபசத்தினம் முடிந்துவிட்டது. இவ்வாறே ஒவ்வொருநாட் காலையிலும் முன்போல், பிரவர்க்யம், 'உபசத்' என்பவைகளைச் செய்த பிறகு, செங்கல்களை அடுக்குதல் வேண்டும் மாலையிலும், 'பிரவர்க்யம், உபசத்' என்பவைகளைச் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்யப்படும் ஐந்து சிதி (செங்கல் அடுக்கு)களுக்கு ஆறு உபசத்துத் தினங்கள் உள்ளன. அவற்றுள், இரண்டு நாட்களுக்கு ஒவ்வொரு உபசத் மந்திரத்தால் ஹோமஞ் செய்தல் வேண்டும். ஐந்தாவது அடுக்கை மாத்திரம் இரண்டு நாட்களில் அடுக்குதல் வேண்டும். இந்த ஆறு நாளும் எசமானன் விரதமாயிருந்து பால் அருந்தும் வேளை பன்னிரண்டாம். அவற்றுள், முதலாவது நாள் காலை வேளை, தீட்சை-

விரதத்தில் பால் அருந்தியதுபோல் பால் அருந்தல் வேண்டும். அன்றிரவு மறுநாட் காலை மாலை என்னு மூன்று வேளையும் நான்கு முலைகளிலுங் கறந்த பால் அருந்தல் வேண்டும். மூன்றா நாட் காலை மாலை நான்கா நாள் காலை என்னும் மூன்று வேளைகளிலும் மூன்று முலைகளிற் கறந்த பால் அருந்தல் வேண்டும். நான்காநாள் மாலை ஐந்தாநாள் காலை மாலை என்னு மூன்று வேளைகளிலும் இரண்டு முலைகளிற் கறந்த பால் அருந்தல் வேண்டும் ஆறாநாட் காலையிலோ ஒரு முலையிற் கறந்த பால் அருந்தல்வேண்டும். மாலையில், தீட்சையிற் பால் அருந்தியது போல் அருந்தல் வேண்டும். இவற்றுள் இங்கு மகா சயனத்திற்குரிய விரதம் (பால்) அருந்தும் வேளைகள் பத்து என்பதையுணர்க.

பரிசேடம் முடிந்தது.

---

## இரண்டாம் அநுவாக உபோற்காதம்

### பிராமணம்.

साहस्रं चिन्वीत प्रथमं चिन्वानः गायत्रियैवेमं लोकं मभ्यारोहति ॥

द्विषाहस्रं चिन्वीत द्वितीयं चिन्वानः त्रिष्टुभैवान्तरिक्षं मभ्यारोहति ॥

त्रिषाहस्रं चिन्वीत तृतीयं चिन्वानः जगत्यैवामुं लोकं मभ्यारोहति ॥

அதாவது, முதன் முறை மகாக்கினி சயனஞ் செய்கின்றவன், ஆயிரஞ் செங்கலடுக்கை அடுக்குவானாக. இரண்டா முறை செய்கின்றவன், இரண்டாயிரஞ் செங்கல் அடுக்குக்களை அடுக்குவானாக.

மூன்றா முறை செய்கின்றவன் மூவாயிரஞ் செங்கல் அடுக்குக்களை அடுக்குவானாக என்பதாம்.

ஈண்டு இவ்வாறு, பிராமண மந்திரங்கள் பாகுபாடு செய்திருத்தலின், சங்கிதையில் பொதுவாக மகாக்கினி சயனமாகிய செங்கல் அடுக்குக்களைக் கூறியிருப்பினும் அதற்கு இம் முறையே கருத்தெனக் கொண்டு சூத்திர முறைப்படி அடுக்கு முறைகளைப் பாகுபாடு செய்து கொள்ளல் வேண்டும். அது வருமாறு :—

இப் பிரபாடகத்தின் முதல் அநுவாகத்திற் கூறியுள்ள முதலாவது அடுக்கு ஆயிரங் கல்லுகளை அடுக்கும்போதும் முதலாவது அடுக்காகும். இரண்டாயிரங் கல்லுகளை அடுக்கும்போதும் இதுவே முதலாவது அடுக்காம் மூவாயிரங் கல்லுகளை அடுக்கும்போதும் இதுவே முதலாவது அடுக்காகும். அது எவ்வாறெனின்? தெரிக்குதும், ஆயிரங் கல்லுகளை அடுக்கு மிடத்து ஒவ்வொரு

அடுக்கிற்கும் இருநூறு இருநூறு செங்கல்களாக ஐந்தடுக்குக்களில் ஆயிரம் முடிவு பெறுகின்றது.

இரண்டாயிரஞ் செங்கல்களை அடுக்கும்போதோ, ஒவ்வொரு அடுக்கிற்கும் இருநூறு இருநூறு செங்கல்கள் கொண்ட இரண்டு அடுக்குக்களுஞ் சேர்ந்து ஒரு அடுக்கு (சிதி) என வழங்கப்படுகின்றது. இவ்வாறாகவே, இரண்டு அடுக்குக்கள் கொண்ட ஐந்தடுக்கில் (10) இரண்டாயிரம் முடிவு பெறுகின்றது.

மூவாயிரத்திலோ, இருநூறு இருநூறு கொண்ட மூன்றடுக்குக்களைச் சேர்த்து ஒரு அடுக்கு (சிதி) என்று வழங்கப்படுகின்றது. வழங்குமிடத்து இத்தகைய ஐந்தடுக்கில் (15) மூவாயிரம் முடிவு பெறுகின்றது என்பதை ஆராய்ந்து தெரிந்து கொள்க.

இனி, மூவகைக்கான அடுக்குக்கட்கும் முதலாவதாயிருக்கின்ற முதல் அடுக்கில், மனிதனுடைய தலையை வைத்தல் வேண்டு மென்று சம்ஹிதை மந்திரங் கூறியிருத்தலின், அந்தத் தலைக்கு உடல் போன்ற வடிவஞ் செய்தல் வேண்டு மென்பது அவசியமல்லவா? அன்றியும், எண்சாண் உடம்பிற்கும் சிரசே பிரதானம், என்னும் நியாயத்தால், தலையை மாத்திரம் வைக்கவேண்டு மென்று விதித்த சுருதி, உடலையும் விதித்து விடவில்லையா? பிராமண மந்திரங்களையும் சமன்வயஞ் செய்துகொள்ள வேண்டியதும் முக்கியமா மன்றோ? இவ்வாற்றால் பிரமாணத்தாற் பெறப்பட்ட புருடவடிவை, எல்லாவற்றுள்ளுஞ் சிறந்த பிரமாணமாகிய சூத்திரம், புருடாகிருதி என்னும், முப்பத்தாறு செங்கல்களை, கருட வடிவின் நடுவில் வைத்தல் வேண்டு மென்று விதித்திருக்கின்றது. அதை நிறைவாக்குதற் பொருட்டு நூறு ரிஷிச் செங்கல்களையும் வைக்கும்படி விதித்திருக்கின்றது. இவ்வாறு வைக்கிலோ, மேல் வரும் இரண்டாவது மூன்றாவது அநுவாகங்களிற் கூறியுள்ள 'பிராண பிருத், அபான பிருத்' என்னுஞ் செங்கல்களை இம் முதலாம் அடுக்கில் வைப்பதற்கு இடமில்லை. மேல்வரும் அநுவாகங்களுள் சில அநுவாகங்களைக் கொண்டு ஆயிரங் கல்லுகளை வைத்து முடித்தல் வேண்டும் என்பது முடிவாயிற்று. இதுவே தற்காலத்தில் நடாத்தி வரு முறையாம்.

சிலர், மேற்காட்டிய முறையைத் தழுவாமலும் சூத்திரத்திற் கூறிய ரிஷிச் செங்கல்களை முதல் அடுக்கில் வைக்காமலும், பிராணபிருத் அபானபிருத் என்னுஞ் செங்கல்களை வைத்து முடிப்பர். முடிப்பினும், சங்-கா-5-பிர-2-அநு 10-ல் 'अक्ष्णयोपदधाति' என்றபடி அக்ஷ்ண்யாக அதாவது மூலைச்சாய்வாக அவைகளை வைக்க முடியா தென்பதையு முணர்ந்து கொள்க.

இவ்வாற்றால் பல்வகை நிமித்தங்களைக் கொண்டு, முதல் அடுக்கிலேயே, புருடாகிருதிச் செங்கல்களையும், ரிஷிச் செங்கல்களையும் வைத்து அவ்வடுக்கை

நிறைவாகச் செய்து விட்டு, இரண்டாயிரங் கல் அடுக்கும் பட்சத்தை எடுத்துக் கொண்டு மேல் அடுக்க வேண்டிய அடுக்கில், பிராணபிருத் அபானபிருத் என்னுஞ் செங்கல்களை மூலைச் சாய்வாக அடுக்கு முறையில் அடுக்கி விட்டு, ஏனையவைகளை யெல்லாம், 'லோகம் பிருண' என்பது முதலிய மந்திரத்தாலேயே நிறைத்து அவ்விரண்டு அடுக்குகளையும் ஒரு அடுக்கென எண்ணிக்கொள்ளல் வேண்டும். இம் முறைமையைக் குறிக்கவே மேல்வரும் அநுவாகங்கள் விநியோகிக்கப்படுகின்றன என்பதைச் சுருக்கக் கருத்தாகக் கொள்க.

---

## இரண்டாம் அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

अयं प्राणभृतो दध्यात् पञ्चाशत् पञ्चमन्त्रकैः ॥

(तं तु पञ्चभिः)

ஒவ்வொரு திக்கிலும் பத்துப் பத்துக்களாக ஐம்பது கல்லுகளை வைத்தல். மற்றும், இந்தப் பிராண பிருத் என்னும் ஐம்பது செங்கல்களையும் ஐந்து மந்திர கணங்களால் ஒவ்வொரு மந்திரத்திற்கு பத்துப் பத்தாக வைத்தல் வேண்டு மென்பது.

---

## நான்காங் காண்டம் மூன்றாம் பிரபாடகம்

## இரண்டாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்கு மேல் முப்பது பதங்களைக் கொண்டது.

---

'பிராணபிருத்' என்னும் செங்கல்களை வைத்தற்குரிய மந்திரங்கள்.

अयं पुरो भुवस्तस्य प्राणो भौवायनो वसन्तः प्राणायनो गायत्री वासन्ती गायत्रियै गायत्रं गायत्रादुपाꣳशुरुपाꣳशोस्त्रिवृत्त्रिवृतो रथन्तरꣳ रथन्तराद्वसिष्ठ ऋषिः प्रजापतिगृहीतया त्वया प्राणं गृह्णामि प्रजाभ्योऽयं दक्षिणा विश्वकर्मा तस्य मनो वैश्वकर्मणं ग्रीष्मो मानसस्त्रिष्टुग्ग्रैष्मी त्रिष्टुभं ऐडमैडादन्तर्यामोऽन्तर्यामात्पञ्चदशः पञ्चदशाद् बृहद्बृहतो भरद्वाज ऋषिः प्रजापतिगृहीतया

त्वया मनः ॥ १ ॥ गृह्णामि प्रजाभ्योऽयं पश्चाद्विश्वव्यचास्तस्य चक्षुर्वैश्वव्यचसं वर्षाणि चाक्षुषाणि जगती वार्षी जगत्या ऋक्षममृक्षमाच्छुक्रश्शुक्रात्सप्तदशस्सप्तदशाद्वैरूपं वैरूपाद्विश्वामित्र ऋषिः प्रजापति गृहीतया त्वया चक्षुर्गृह्णामि प्रजाभ्य इदमुत्तरात्सुवस्तस्य श्रोत्रꣳ सौवꣳ शरच्छ्रौत्र्यनुष्टुप्छारद्यनुष्टुभस्स्वारꣳ स्वारान्मन्थीमन्थिन एकविꣳश एकविꣳशाद्वैराजं वैराजाज्जमदग्निर्ऋषिः प्रजापति गृहीतया ॥२॥ त्वया श्रोत्रं गृह्णामि प्रजाभ्य इयमुपरिमतिस्तस्यै वाङ्माती हेमन्तो वाच्यायनः पङ्क्तिर्हैमन्ती पङ्क्त्यैनिधनवन्निधनवत आग्रयण आग्रयणात्त्रिणवत्रयस्त्रिꣳशौ त्रिणवत्रयस्त्रिꣳशाभ्याꣳ शाक्वररैवते शाक्वररैवताभ्यां विश्वकर्मर्षिः प्रजापति गृहीतया त्वया वाचं गृह्णामि प्रजाभ्यः ॥ ३ ॥

---

முதல் அநுவாகத்தில் அபஸ்யங்கள் என்னுஞ் செங்கல்களை வைக்கு முறை கூறப்பட்டது. இதில், 'பிராணபிருத்' என்னும் செங்கல்களை வைக்கு முறை கூறப்படுகின்றது.

ஆயிரங்கல்லுகளை அடுக்கு முறையாகவே ஆக்கிரமணைச் செங்கலை வைப்பது முதல், ரிஷிச் செங்கல்களின் கடைசிக் கல்லை வைக்கும் வரை வைத்து விட்டு, மட்கலசங்களையும் வைத்து விடல் வேண்டும்.

மற்றும், ஏனைய இருபத்தொன்பது செங்கல்களையும் 'லோகம் பிருண' என்பது முதலிய இரண்டு மந்திரங்களினாலே வைத்து விட்டு, மந்திரமின்றி, மணலைக் கொண்டு வந்து அச்செங்கலடுக்கை மூடிவிடல் வேண்டும். மூடி விட்டு, மந்திரமின்றியே அதிலிருந்து கீழே இறங்கி விடல் வேண்டும்.

பிறகு, முன் அடுக்கின் மேல் மற்றொரு செங்கல் அடுக்கை அடுக்கு வதற்குத் தொடங்கும்போது, கிழக்கில் பத்துச் செங்கல்களை மூலைச்சாய்வாக அடுக்கல் வேண்டும். அவற்றுள்,

---

முதலாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

अयं पुरो भुवः ।

என்பது.

உரை.

*கிழக்குத் திக்கில் அந்தப் பிரசாபதியானவன் இருக்கின்றான். அதாவது, செங்கல்லே! நீ, அந்தப் பிரசாபதி வடிவாக இருக்கின்றாய் என்பது பொருள்.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகள் என்னும் ஆறு வரிசைகளுள் முதலாம் வரிசையில் ஓர் நாலுகாகவுள்ள பாதிச் செங்கல் ஒன்றை வைத்தல் வேண்டும் என்பதாம். இவ் வரிசைகள் மேற்கிலிருந்து கிழக்காய் முடிகின்றன.*

---

இரண்டாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

तस्य प्राणो भौवायनः ।

என்பது.

உரை

*இச் செங்கல், அந்தப் பிரசாபதியின் பிராணனாக இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முதல் வரிசையில் ஆறாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

மூன்றாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

वसन्तः प्राणायनः ।

என்பது.

உரை

*இச் செங்கல் அந்தப் பிராணனுடைய வசந்த ரிதுவா யிருக்கின்றது என்பது.*

சாயணபாடிய க்கருத்து.

*இம் மந்திரத்தால், முதலாவது வரிசையில் ஏழாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

---

நான்காவது செங்கலை வைத்தல்.

**மந்திரம் :**

गायत्री वासन्ती ।

என்பது.

உரை

*இச் செங்கல், வசந்த ரிதுவின் காயத்திரிச் சந்தமாக இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முதல் வரிசையின் கடைசியாகிய சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

---

ஐந்தாவது செங்கலை வைத்தல்.

**மந்திரம் :**

गायत्रियै गायत्रम् ।

என்பது.

உரை

*இச் செங்கல் காயத்திரிச் சந்தத்தினுடைய 'காயத்திரி' என்னும் சாமப்பாடலா யிருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆன்ம வரிசையின் இரண்டாவது வரிசையில் ஒன்பதாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

---

ஆறாவது செங்கலை வைத்தல்

**மந்திரம் :**

गायत्रा दुपा॑ँशुः ।

என்பது.

உரை

*இச் செங்கல், காயத்திரிச் சாமப்பாடலால் உண்டானது போன்றுள்ள 'உபாம்சுக்கிரகம்' என்னும் சோமரச பாத்திரமா யிருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இரண்டாவது வரிசையின் பத்தாவதாகிய சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

ஏழாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

उपांशो स्त्रिवृत् ।

என்பது.

உரை

*இச் செங்கல், அந்த உபாம்சுக் கிரகத்திலுண்டாகியது போன்றுள்ள திரிவிருத் (மும்முறை திருப்பல்) என்னும் ஸ்தோமமா (சங்கிதத்தோடு கூடிய துதி மஞ்சரியா) ய் இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இரண்டாவது வரிசையில் பதினோராவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

எட்டாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

त्रिवृतो रथन्तरम् ।

என்பது.

உரை.

*இச் செங்கல், 'திரிவிருத்' என்னும் ஸ்தோமத்திலிருந்து உண்டானது போன்றுள்ள 'ரதந்தரம்' என்னுஞ் சாமப்பாடலா யிருக்கின்றது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், இரண்டாவது வரிசையின் பன்னிரண்டாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஒன்பதாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

रथन्तराद्वसिष्ठ ऋषिः ।

என்பது.

உரை.

*இச் செங்கல், ரதந்தர மென்னும் சாமப்பாட்டிலிருந்து உண்டாகியது போன்றுள்ள வசிட்டரிஷியாக இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மூன்றும் வரிசையில் ஆறுவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

பத்தாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

प्रजापति गृहीतया त्वया प्राणं गृह्णामि प्रजाभ्यः ।

என்பது.

உரை.

செங்கலே! கூறிப் போந்த வகையால் உபசாரமாக, பிராண முதலான வடிவங்களாக பிரசாபதியாற் கொள்ளப்பட்ட உன்னால், பிரசைகளின் பிராணனைக் கவர்ந்து கொள்கின்றேன். அதாவது, பிரசைகளின் பிராணன் சித்தியாதற் பொருட்டு உன்னை இங்கு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றாம் வரிசையில் ஏழாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

தெற்குத் திக்கில் வைக்க வேண்டிய இரண்டாவது பத்துச் செங்கல்களுள் முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयं दक्षिणा विश्वकर्मा ।

என்பது.

உரை.

'விசுவ கருமன்' என்னும் இந்தப் பிரசாபதி, தெற்குத் திசையிலிருக்கின்றான். அதாவது, செங்கலே! நீ, அவ் வடிவா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்பக்கச் சிறகின் முடிவிலுள்ள முதல் வரிசையில் முதலாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तस्य मनो वैश्वकर्मणम् ।

என்பது.

உரை.

இச் செங்கல், அந்தப் பிரசாபதியிலிருந்து உண்டாகிய மனமா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன் வைத்ததற்கு இரண்டாவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ग्रीष्मो मानसः ।

என்பது.

உரை

*இச் செங்கல், மனதிலிருந்துண்டாகிய கிரீஷ்ம ருதுவா (வேனிற் காலமா)க இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், இரண்டாவது வரிசையில் இரண்டாவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

त्रिष्टुग्ग्रैष्मी ।

என்பது.

உரை.

*இச் செங்கல், வேனிற் காலத்திலுண்டாகியது போன்றுள்ள திரிஷ்டுப் என்னும் வடமொழிச் சந்தமா யிருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முன் வைத்த செங்கலுக் கடுத்த மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्रिष्टुभ ऐडम् ।

என்பது.

உரை.

*இச் செங்கல், திரிஷ்டுப்ச் சந்தத்திலிருந்து உண்டாகியது போன்றுள்ள 'ஐடம்' என்னும் ஒரு வகைச் சாமப்பாடலா யிருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முன் வைத்ததிற் கடுத்த நான்காவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஆருவது செங்கலை வைத்தல்

மந்திரம் :

ऐडादन्तर्यामः ।

என்பது.

உரை

இச் செங்கல், 'ஐடம்' என்னும் சாமப்பாடலி லிருந்துண்டாகியது போன்றுள்ள அந்தர்யாமிக்கிரகம் என்னும் சோமரசப் பாத்திரமா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மூன்றுவது வரிசையில் நான்காவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अन्तर्यामात्पञ्चदशः ।

என்பது.

உரை

இச் செங்கல், அந்தரியாமி என்னும் சோமரசத்தை யிடித்து வைக்கும் பாத்திரத்திலிருந் துண்டாயது போன்ற பஞ்சதசத் (பதினைந்து முறை திருப்பும்) ஸ்தோம கீதமுடைய துதிமஞ்சரியா யிருக்கின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்ததிற்கருகில் ஐந்தாவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पञ्चदशाद् बृहत् ।

என்பது.

உரை

பஞ்சதசத்தி (பதினைந்து முறை திருப்பிப் பாடுந் துதிமஞ்சரியி) லிருந்து உண்டாகியது போன்றுள்ள பிருகத் என்னும் ஒருவகைச் சாமப்பாடலா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன் வைத்ததிற் கருகில் ஆருவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஒன்பதாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

शृद्वतो भरद्वाज ऋषिः ।

என்பது.

உரை

இச் செங்கல், பிருகத் என்னுஞ் சாமத்திலிருந்து உண்டாவது போன்றுள்ள பரத்வாச ரிஷியா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்புறத்து நாலாவது வரிசையில் ஆறாவதாகிய சிறகுக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

பத்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रजापति गृहीतया त्वया मनो गृह्णामि प्रजाभ्यः ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னால் பிரசாபதியின் மன முதலியவைகளைக் கவருந் தன்மையால் எல்லா உயிர்களின் கேத்திரங்களையுங் கவர்ந்து கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்ததிற் கடுத்த ஏழாவது சிறகுக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

மேற்கில் வைக்கும் மூன்றாவது பத்தில்
முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयं पश्चाद्विश्व व्यचाः ।

என்பது.

உரை

உலகை வியாபித்துள்ள பிரசாபதி என்பவன் மேற்குத் திசையில் இருக்கின்றான். அதாவது, செங்கலே! நீ, அத்தகைய பிரசாபதியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகளுள் மூன்றாவது வரிசையில் இரண்டாவதாகிய சோடசி என்னுங் கல்லை வைத்தல் வேண்டும் என்பதாம்.

## இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तस्य चक्षुर्वैश्वव्यचसम् ।

என்பது.

உரை.

இச் செங்கல், பிரசாபதி யிடத்திலிருந் துண்டாகிய கண்களாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், மேற்படி ஆன்ம வரிசைகளுள் முதலாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

## மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वर्षाणि चाक्षुषाणि ।

என்பது.

உரை.

இச் செங்கல், நேத்திரத்திலிருந் துண்டாகிய மழைக் காலமா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி மூன்றாவது வரிசையில் முதலாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

## நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

जगती वार्षी ।

என்பது.

உரை.

இச் செங்கல், மழைக் காலத்திலுண்டாகிய ‘ சகதி ’ என்னும் வடமொழிச் சந்தமா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாயின் வரிசைகளுள் மூன்றாவது வரிசையில் முதலாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

जगत्या ऋक्षमम् ।

என்பது.

உரை.

இச் செங்கல், 'சகதி' என்னுஞ் சந்தத்திலிருந் துண்டாகிய 'ருக்ஷம்' என்னுஞ் சாமப் பாடலாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ऋक्षमाच्छुक्रः ।

என்பது.

உரை.

இச் செங்கல், ருக்ஷம் என்னுஞ் சாமத்திலிருந் துண்டாகிய சுக்ரக்கிர ரகம் என்னுஞ் சோமரசப் பாத்திரமாய் இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது வரிசையில் முதலாவது பாதிக் கல்லை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

शुक्रात्सप्तदशः ।

என்பது.

உரை.

இச் செங்கல், சுக்கிரக் கிரகத்திலிருந் துண்டாகிய பதினேழு முறை திருப்புதலாகிய ஸ்தோமமா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது வரிசையில் இரண்டாவது பாதிக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

### எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सप्तदशाद्वैरूपम् ।

என்பது.

உரை

இச் செங்கல், பதினேழு முறை திரும்பும் ஸ்தோமத்திலிருந் துண்டாகிய வைரூபம் என்னுஞ் சாமப் பாடலாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலின் வரிசைகளுள் முதலாவது வரிசையில் முதலாவது பாதிச் செங்கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

### ஒன்பதாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वैरूपाद्विश्वामित्र ऋषिः ।

என்பது.

உரை

இச் செங்கல் வைரூபத்திலிருந் துண்டாகிய விசுவாமித்திர ரிஷியாயிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

### பத்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रजापति गृहीतया त्वया चक्षुर्गृह्णामि प्रजाभ्यः ।

என்பது.

உரை.

செங்கல்லே! பிரசாபதியின், கண் முதலியவைகளாகக் கொண்ட உன்னால் பிரசைகளின் நேத்திரத்தைக் காத்து கொள்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது ஷோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

வடக்கில் வைக்கும் நான்காவது பத்தில்

முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

इदमुत्तरात्सुवः ।

என்பது.

உரை

உலகைச் செலுத்தும் பிரசாபதி என்பவன் வடபக்க மிருக்கின்றான். செங்கலே! நீ, அத்தகைய பிரசாபதியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வடபக்கத்துச் சிறகின் முற்பாதியின் முதலாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तस्य श्रोत्रᳪ सौवं ।

என்பது.

உரை

இந்தச் செங்கல், பிரசாபதியிலிருந்துண்டாகிய செவியாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்த செங்கலுக் கருகில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

शरच्छ्रौत्री ।

என்பது.

உரை

இச் செங்கல் செவியிலிருந்துண்டாகியது போன்றுள்ள, சரத் (குளிர்) காலமாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி இரண்டாவது வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

अनुष्टुप्शारदी ।

என்பது.

உரை.

இச் செங்கல், குளிர்காலத்திலுண்டாகியது போன்றுள்ள வடமொழி அநுட்டுப் என்னுஞ் சந்தமாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி வரிசையில் மூன்றுவதாகிய சிறகுச்செங்கலை வைத்தல் வேண்டும் என்பது.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अनुष्टुभ स्वारं ।

என்பது.

உரை.

இச் செங்கல், அநுட்டுப் என்னுஞ் சந்தத்திலிருந்துண்டாகிய 'சுவாரம்' என்னுஞ் சாமப்பாடலா யிருக்கின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स्वारान्मन्थी ।

என்பது.

உரை

இச் செங்கல், சுவாரம் என்னும் சாமப்பாடலிலிருந்துண்டாகிய மந்திக் கிரகமாகிய 'சோமரசப் பாத்திரமாயிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி மூன்றுவது வரிசையில் நான்காவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

मन्थिन एकविंꣳशः ।

என்பது.

உரை.

இச் செங்கல், மந்தி என்னுங் கிரகத்திலிருந்துண்டாகிய இருபத்தொரு முறை திருப்பும் ஸ்தோமமாய் இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் ;

एकविंꣳशाद्वै राजम् ।

என்பது

உரை

இச் செங்கல், இருபத்தொரு முறை திருப்புஞ் ஸ்தோமத்திலிருந்துண்டாகிய வைராசம் என்னுஞ் சாமப்பாடலாயிருக்கின்றது.

சாயணபாடிய க்கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वैराजाज्जमदग्निर्ऋषिः ।

என்பது.

உரை.

இச்செங்கல், வைராசம் என்னும் சாமத்திலிருந்துண்டாகிய சமதக்கினி ரிஷியாயிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி நான்காம் வரிசையில் ஆறுவதாகிய சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

பத்தாவது செங்கலை வைத்தல்.

மந்திரம் :

प्रजापति गृहीतया त्वया श्रोत्रं गृह्णामि प्रजाभ्यः ।

என்பது.

உரை.

செங்கலே! பிரசாபதியின் செவி முதலியவைகளாகுந் தன்மையால், உன்னாலேயே பிரசைகளின் செவிகளைக் கொள்கின்றேன் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஏழாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நடுவில் வைக்கும் ஐந்தாவது பத்தில்
முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் ;

इयत्तुपरिमतिः ।

என்பது.

உரை.

உலகை மதிக்கும் பிரசாபதியானவர், மேல் திக்கில் இருக்கின்றார். செங்கலே! நீ, அத்தகைய பிரசாபதியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகளுள் மூன்றாவது வரிசையில் ஐந்தாவதாகிய சோடசி என்னுஞ் செங்கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तस्यै वाङ्मती ।

என்பது.

உரை.

இச் செங்கல், அத்தகைய பிரசாபதியிலிருந்து உண்டாகிய வாக்காக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது வரிசையில் எட்டாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

हेमन्तो वाच्यायनः ।

என்பது.

உரை.

இச் செங்கல், வாக்கிலிருந்து உண்டாகிய பனிக் காலமாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஏழாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

पङ्क्तिर्हैमन्ती ।

என்பது.

உரை

இச் செங்கல், பனிக்காலத்திலிருந் துண்டாகிய 'பங்க்தி' என்னும் வட மொழிச் சந்தமாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पङ्क्त्यै निधनवत् ।

என்பது.

உரை

இச் செங்கல், பங்க்தி என்னுஞ் சந்தத்திலிருந்துண்டாகிய 'நிதனவத்' என்னுஞ் சாமப்பாடலா யிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறுவது செங்கலை வைத்தல்

மந்திரம் :

निधनवत आग्रयणः ।

என்பது.

உரை

இச் செங்கல், 'நிதனவத்' என்னுஞ் சாமப்பாடலிலிருந்துண்டாகிய ஆக்ராயணம் என்னும் சோமரச பாத்திரமாயிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आग्रयणात् त्रिणवत्रयस्त्रिंशौ ।

என்பது.

உரை.

இச்செங்கல், ஆச்ராயணம் என்னுஞ் சோமரசபாத்திரத்திலிருந்துண்டாகிய, இருபத்து ஏழு, முப்பத்துமூன்று என்னும் இரண்டு ஸ்தோமங்களாக இருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றுவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्रिणवत्रयस्त्रिंशाभ्यां शाक्वररैवते ।

என்பது.

உரை

இச் செங்கல், இருபத்து ஏழு, முப்பத்து மூன்று ஸ்தோமங்களிலிருந்துண்டான, 'சாக்வரம்' 'ரைவதம்' என்னும் இரண்டு வடமொழிச் சந்த வடிவாயிருக்கின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றுவதாகிய பாதிச்செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

ஒன்பதாவது கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

शाक्वररैवताभ्यां विश्वकर्मर्षिः ।

என்பது.

உரை.

*இச் செங்கல், சாக்வரம், ரைவதம் என்னுஞ் சாமங்களிலிருந்துண்டாகிய விசுவகருமரிஷியாக இருக்கின்றது என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவதாகிய பாதிச் செங் கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

பத்தாவது கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

प्रजापति गृहीतया त्वया वाचं गृह्णामि प्रजाभ्यः ।

என்பது.

உரை

*செங்கலே ! பிரசாபதியின் வாக்கு முதலானவைகளாகுந் தன்மைபற்றி உன்னால், பிரசைகளின் வாக்கைக் கொள்கின்றேன் என்பதாம்.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் முதலாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.*

இரண்டாவது அநுவாகம் முடிந்தது.

---

## மூன்றாவது அநுவாகம்

விடயச் சுருக்கம்.

प्राचीत्यपानभृत्संयदिति नाम द्वयान्विताः ।
पञ्चाशत्पूर्ववद्दिक्षु मध्ये चोपदधातिताः ॥ १ ॥

*முன்போல் திக்குக்குப் பத்துப் பத்துக்களாக ஐம்பது கல்லுகளை வைத் தல் வேண்டும் என்பது.*

## நான்காங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## மூன்றாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்கு மேல் இருபத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

'அபானபிருத்' என்னும் செங்கல்களை வைத்தற்குரிய மந்திரங்கள்.

प्राची दिशां वसन्त ऋतूनामग्निर्देवता ब्रह्मद्रविणन्त्रिवृत्सो-
मस्स उपञ्चदशवर्तनिस्त्र्यविर्वयः कृतमयानां पुरोवातो वातस्सानग
ऋषिर्दक्षिणा दिशां ग्रीष्म ऋतूनामिन्द्रो देवता क्षत्रन्द्रविणं पञ्च-
दशस्स्तोमस्स उसप्तदशवर्तनिर्दित्यवाड्वयस्त्रेताऽयानान्दक्षिणाद्वातो
वातस्सनातन ऋषिः प्रतीची दिशां वर्षा ऋतूनां विश्वे देवा
देवताविट् ॥ १ ॥ द्रविणं सप्तदशस्स्तोमस्स उवेकविꣳशवर्तनि-
स्त्रिवत्सोवयोद्वापरोऽयानां पश्चाद्वातो वातोऽहभून ऋषि रुदीची
दिशाꣳ शरदृतूनां मित्रावरुणौ देवता पुष्टन्द्रविणमेकविꣳशस्स्तो-
मस्स उत्रिणववर्तनिस्तुर्यवाड्वय आस्कन्दोऽयानामुत्तराद्वातो वातः प्रत्न
ऋषिरूर्ध्वा दिशाꣳ हेमन्तशिशिरावृतूनां बृहस्पतिर्देवता वर्चो
द्रविणन्त्रिणवस्स्तोमस्स उत्रयस्त्रिꣳशवर्तनिः पष्ठवाद्वयोऽभिभूर-
यानां विष्वग्वातो वातस्सुपर्ण ऋषिः पितरः पितामहाः परेऽवरेते
नः पान्तु तेनोऽवन्त्वस्मिन्ब्रह्मन्नस्मिन्क्षत्रेऽस्यामाशिष्यस्यां पुरोधा-
यामस्मिन्कर्मन्नस्यां देवहूत्याम् ॥ २ ॥

இரண்டாமநுவாகத்தில், 'பிராணபிருத்' என்னுஞ் செங்கல்களை வைக்கும் வகை கூறப்பட்டது, இதில், 'அபானபிருத்' என்னுஞ் செங்கல்களை வைக்கும் வகை கூறப்படுகின்றது.

கிழக்கில் வைக்கவேண்டிய பத்தில்
முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्राची दिशाम् ।

என்பது.

உரை

செங்கலே! நீ, திசைகளுக்குள் கிழக்குத் திசையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகளுள் நான்காம் வரிசையில் ஏழாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वसन्त ऋतूनाम् ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, இருது காலங்களுக்குள் வசந்த காலமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्निर्देवता ।

என்பது.

உரை

செங்கல்லே! நீ, தேவதைகளுக்குள் அக்கினி தேவதையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி ஐந்தாவது வரிசையில் பன்னிரண்டாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

ब्रह्म द्रविणम् ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, தேடுந் தனங்களுக்குள் அந்தணர்க்குரிய தனமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினோராவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் ;

त्रिवृत्स्तोमः ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, ஸ்தோமங்களுக்குள் (துதிவிசேடங்களுக்குள்) திரிவிருத் (மும்முறை திருப்பும்) ஸ்தோமமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பத்தாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஆறுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स उ पञ्चदश वर्तनिः ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, பஞ்சதச (பதினைந்துமுறை) ஸ்தோமத்தை யுண்டாக்குகின்ற 'திரிவிருத்' என்னும் ஸ்தோமத்தின் சக்தியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஒன்பதாவதாகிய பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्र्यविर्वयः ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, வருடங்களுக்குள் ஒன்றரை வருட வயது வடிவாக இருக்கின்றாய் என்பது.*

*ஈண்டு, திரியவி, என்னுஞ் சொல் ஒன்றரை வருடத்தைக் குறிப்பிடுகின்றது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகளுள் ஆறாவது வரிசையில் எட்டாவதாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

कृतमयानां ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, யுகங்களுக்குள் கிருதயுகமாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி ஆறாவது வரிசையில் ஏழாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஒன்பதாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पुरो वातो वातः ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, வாயுக்களுக்குள், 'புரோவாதம்' என்னும் வாயுவாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

பத்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सानग ऋषिः ।

என்பது.

உரை

செங்கலே! நீ, இருடிகளுக்குள் சானகர் என்னும் இருடியாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது, பாதிக் கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

தெற்குச் சிறகில் வைக்க வேண்டிய பத்தில்
முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

दक्षिणा दिशां ।

என்பது.

உரை

செங்கலே! நீ, திசைகளுக்குள் தென் திசையாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்பக்கத்துச் சிறகின் முதல் வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ग्रीष्म ऋतूनां ।

என்பது.

உரை

செங்கலே! நீ, இருதுக்களுக்குள் கிரீஷ்மருதுவா (கிருவேனிற் காலமா)க இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்,

---

हवन्तविश्पतिम् । हव्यवाहं पुरुप्रियम् । तꣳहि शश्वन्त ईडते स्रुचा देवं घृतश्चुता । अग्निꣳ हव्याय वोढवे । इन्द्राग्नी रोचना दिवश्श्नथद् वृत्रमिन्द्रं यो विश्वतस्परीन्द्रन्नरो विश्वकर्मन् हविषा वावृधानो विश्वकर्मन् हविषा वर्धतेन ॥ ८ ॥

பன்னிரண்டாம் அநுவாகத்தில், அசபத்னம், விராசம் என்னுஞ் செங்கல் கூறப்பட்டன. இது, முடிவிலுள்ள அநுவாகமாதலால் இதில் யாஜ்யாநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன.

ஈண்டு, சாதுர்மாசியங்களுள், சாகமேத மென்னும் மூன்றாவது பருவத்தில், அக்கினியனீகவத்திற்கு எட்டுக்கபாலங்கள் வைக்கப்படுகின்றன. 'சாகம்ஞர்யேஷிஞத்யத' என்பது முதலான அவிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் மேல்வருவது முதலாவது ஆஜ்யபாகத்திற்குப் புரோநுவாக்கியம் :—

முதல் மந்திரம்.

अग्निर्वृत्राणि जङ्घनद्द्रविणस्युर्विपन्यया । समिद्धश्शुक्र आहुतः ।

என்பது.

உரை

கருமத்தை யநுட்டிப்பதற்குத் தடையான பாவங்களைப் போக்குவதும் எமது சிறந்த துதியால், எமக்குத் தனத்தைக் கொடுக்க விருப்புள்ளதும், முறைப்படி வளர்க்கப்பெற்றதும், ஒளி பொருந்தியதும், எம்மால் உருவாக்கப்பெற்றதுமாகியது அக்கினி. 'எமக்கு அருள் செய்க' என்பது, ஈண்டு எஞ்சி நின்றது என்பது.

இரண்டாவது ஆஜ்யபாகத்திற்குப் புரோநுவாக்கியம் கூறப்படுகின்றது :—

இரண்டாம் மந்திரம்.

त्वꣳ सोमासि सत्पतिस्त्वꣳ राजोत वृत्रहा । त्वं भद्रो असि क्रतुः ।

என்பது.

உரை

சோமமே! நீ, நன்கு ஆசரிக்கப்பெற்ற கருமங்கட்குத் தலைவனாயிருக்கின்றாய். மற்றும், பாவத்தைப் போக்குகின்றதும், மங்கலக் கிருதுமாக இருக்கின்றாய் என்பது.

என்று, இவ்விரண்டு மந்திரங்களும், விதிவாக்கியத்தாற் பெறப்படுவனவாம். ஆயினும், அமாவாசையின் பிரகிருதித் தன்மையால் வரும் விருதன்வதிகளிரண்டின் அடைவை நீக்குதற்கு மீண்டும் ஓதப்பட்டன என்பதை யுணர்க.

இனி, பிரதானமாகிய அக்கினி அனீகவதிகளின் அவிகட்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது :—

மூன்றாம் மந்திரம்.

भद्राते अग्ने स्वनीक सन्दृग्घोरस्य सतो विपुणस्य चारुः । नयत्ते शोचिस्तमसा वरन्त न ध्वस्मानस्तनुविरेप आधुः ।

என்பது.

உரை.

அழகிய சுவாலையாகிய சேனையையுடைய அக்கினியே! உனது சரித்திரங்கள் மங்களமானவைகள். எவ்வாற்றாலெனின்? நீ, எசமானன் முதலானோர்களை இனிது நோக்குகின்றாய். கோரமாகிய உனது சுவாலை, எமது நலங்கட்குக் காரணமானது. உனது ஒளி, ஒருபோதும் இருட்டால் மறைக்கப்படுவதில்லை. இது, கொலைத் தொழிலையுடைய அசுரர்கள், உனது திருமேனியில் அடிக்கப்படாததாலென்க என்பது.

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

நான்காம் மந்திரம்.

भद्रन्ते अग्ने सहसिन्ननीक मुपाक आरोचते सूर्यस्य । रुशद्दृशे ददृशे नक्तयाचिदरूक्षितन्दृश आरूपे अन्नम् ।

என்பது.

உரை.

ஆற்றலுடைய அக்கினியே! மங்களமாகிய சுவாலை யென்னும் உன்னுடைய சைன்யம் அருகில் விளங்குகின்றது. அத்தகைய உனது சைன்யம், பாம்பு முதலானவைகளை வழியிற் காணவும், உண்ணுங்கால், எறும்பு முதலானவைகள் மிதியாமல் அன்னத்தைப் பார்த்துக்கொள்ளவும், இருள் சூழ்ந்த இரவிலும் உயிர்களாற் பார்க்கப்படுகின்றது என்பது.

அதற்கே விகற்பத்தில் மற்றொரு யாஜ்யாவாக்கியங் கூறப்படுகின்றது :—

ஐந்தாம் மந்திரம்.

सैनानीकेन सुविदत्रो अस्मे यष्टा देवाँ आयजिष्ठ स्वस्ति । अदब्धो गोपा उतनः परस्पा अग्ने द्युमदुत रेवद्दिदीहि । என்பது.

உரை

ஒரு சுவாலைக் கூட்டத்தால் அறிகின்றதும், எம்பொருட்டு தேவர்களைக் குறித்து வேள்வியைத் தேடுவதும், உள்ளவாறே யாகத்தை முற்றுவிப்பதும், ஒருவராலும் துன்புறுத்தப்படாததும், வேள்வியைப் பாதுகாப்பதும், எம்மை அதிசயமாய்ப் பரிபாலிப்பதுமாகிய அக்கினியே! நீ, ஒளியினையுடையதாய், மிகுந்த தனமுடைய, வீடு, நிலம் முதலியவைகளைப் பாதுகாப்பாயாக என்பது.

சுவிஷ்டகிருதின் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது :—

ஆறும் மந்திரம்.

स्वस्ति नो दिवो अग्ने पृथिव्या विश्वायुर्धेहि यजथाय देव । यत्सीमहि दिवि जातप्रशस्तं तदस्मासु द्रविणन्धेहि चित्रम् ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, மண்ணுலகத்தும், விண்ணுலகத்தும், நீண்டநாள் யாம் வாழும்படி ஆயுளைக் கொடுப்பாயாக. சுவர்க்கத்திலுண்டாகிய தீயே! நீ, போற்றத்தக்கதும், இரத்தின முதலிய பல்வகை வேறுபாடுகளை யுடையதுமாகிய தனத்தை, செலவுக்குத் தக்கவாறு எமக்குக் கொடுப்பாயாக என்பது.

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

ஏழாம் மந்திரம்.

यथाहोतर्मनुषो देवताता यज्ञेभिस्सूनो सहसो यजासि । एवानो अद्य समनाऽसमानानुशन्नग्न उशतो यक्षि देवान् ।

என்பது.

உரை

ஆற்றலாற் கடைந்தெடுக்கப்படுதலின் ஆற்றலின் புத்திரனாகிய அக்கினியே! நீ, ஹோதாவின் அருளால் மக்களையும் பாதுகாக்கின்றாய். வேள்வியில் தேவர்களையும் பூசிக்கின்றாய். அவ்வாறே, உன்னைப் போன்று ஒளிர்கின்றவர்களும், உன்னிடத்தில் அன்பு வைத்துள்ளவர்களுமான தேவர்களை ஆராதிப்பாயாக என்பது.

'சாந்தபன மருத்துக்களுக்கு மத்தியானத்திற் பொங்கல் செய்க' என்பதில், முதலாவது ஆஜ்யபாகத்திற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது :—

எட்டாம் மந்திரம்.

अग्निमीडे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् । होतारꣳ रत्नधातमम् ।

என்பது.

உரை

முதலிலுள்ள ஆகவனீயத்தில் தாபிக்கப்பட்டதும், அநுட்டிக்குங்கருமத்திற்கு ஹோதாவைத் தோற்றுவிப்பதும், விளக்கமுடையதும், தேவர்களையழைப்பதும் அதிசயமான இரத்தின முதலியவைகளைத் தேடுவதுமாகிய அக்கினியைத் துதிக்கின்றேன் என்பது.

இரண்டாவது ஆஜ்யபாகத்திற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது :—

ஒன்பதாம் மந்திரம்.

वृषासोमद्युमा॑ऽ असि वृषादेव वृषव्रतः। वृषाधर्माणि दधिषे।

என்பது.

உரை.

சோமமே! நீ, விரும்பியவற்றைச் சொரிகின்றவனும், விளக்க முடையவனுமாக இருக்கின்றாய். தேவ! நீ, பொழிகின்றவனாதலின் பொழிவதற்கு நிமித்தமாகிய செயல்களை யுடையவன். மற்றும், நீ, விரும்பியவற்றைச் சொரிகின்றவனாதலின் புண்ணியகருமங்களைப் பாதுகாக்கின்றாய் என்பது.

பிரதான அவிகட்குப புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது :—

பத்தாம் மந்திரம்.

सान्तपना इद॑ँ हविर्मरुतस्तज्जुजुष्टन। युष्माकोतीरिशादसः।

என்பது.

உரை.

பகைவரைக் கெடுக்கும் மருத்துக்களே! நீவிர், எம்மாற் கொடுக்கப்படும் அவிகளை யுண்பீர்களாக. எதன் பொருட்டெனின்? உமது பசி முதலானவைகளைத் தணிப்பதன் பொருட்டென்க என்பது.

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

பதினோராம் மந்திரம்

योनो मर्तो वसवोदुर्हृणायुस्तिरस्सत्यानि मरुतो जिघा॑ँसात्। द्रुहः पाशं प्रतिसमुचीष्ट तपिष्ठेन तपसा हन्तनातम्।

என்பது.

உரை

வாசத்திற்கு நிமித்தமாகிய மருத்துக்களே! நீவிர், தீமை மிகுந்த எந்தப் பாவிகள், 'இவர்கட்கு எவ்வாற்றானும் தீமை செய்யமாட்டேன்' என்னுஞ் சபதத்தை ஒழித்துவிட்டு, எம்மைக் கொல்லல் வேண்டுமென்று நினைக்கின்றார்

களோ, அந்தத் தீயோர்களை, கழுத்தில் தளை மாட்டிக் கொள்ளும்படி செய்வாயாக. அதாவது தவத்தால் அவர்களைக் கொன்று விடுவாயாக என்பது.

அதற்கே விகற்ப யாஜ்யாவாக்கியங் கூறப்படுகின்றது :—

பன்னிரண்டாம் மந்திரம்.

संवत्सरीणा मरुतस्स्वर्का उरुक्षयास्सगणा मानुषेषु । तेऽस्मत्पाशान्प्रमुञ्चन्त्वꣳहसस्सान्तपना मदिरा मादयिष्णवः ।

என்பது.

உரை.

ஒருமுறை வேள்வியாற் பூசிக்கில் ஒருவருடம் வரை பாதுகின்றவர்களும், நன்கு போற்றத்தக்கவர்களும், பரந்த வீட்டையுடையவர்களும், எழு கணங்களுடன் கூடியவர்களும், பகைவரை முழுதும் வாட்டுகின்றவர்களும், களிப்புடையவர்களும், எமக்குங் களிப்பைக் கொடுக்கின்றவர்களுமான மருத்துக்கள், மிகுந்த பாவமுடையவைகளும், நிர்ப்பந்த காரணர்களுமான தமது பாசக்கயிறுகளை, எம்மிடத்திலிருந்து அவிழ்த்து எமது பகைவரின் கழுத்துக்களிற் கட்டுவார்களாக என்பது.

அதிலுள்ள சுவிஷ்டகிருத்திற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது :—

பதின்மூன்றும் மந்திரம்.

पिप्रीहि देवाꣳ उशतो यविष्ठविद्वाꣳ ऋतूꣳ ऋतुपते यजेह । ये दैव्या ऋत्विजस्तेभिरग्ने त्वꣳ होतॄणामस्या यजिष्ठः ।

என்பது.

உரை.

கட்டிளமையுடைய அக்கினியே! நீ, விருப்புற்ற தேவர்கட்குக் களிப்புண்டாக்குவாயாக. சூரியனைப் இருதுக்களைப் பரிபாலிப்போய்! நீ, இருதுவாகிய காலவிசேடங்களை யறிவா யாதலின் உரிய காலத்தில் இங்கு யாகஞ் செய்வாயாக. மற்றும், தேவ! ரித்துவிக்குக்களுள்ளும், இவ்வேள்வித்தலைவனுக்கு, நீ, சிறந்த வேட்போனா யிருக்கின்றாய் என்பது.

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

பதினான்காம் மந்திரம்.

अग्ने यदद्य विशो अध्वरस्य होतः पावकशोचे वेष्ट्वꣳ हि यज्वा ।
ऋता यजासि महिना वि यद्भूर्हव्या वह यविष्ठ या ते अद्य ।

என்பது.

வாக்கியங்கள்)

உரை.

சுவிஷ்டகிருத் என்னும் அக்கினியே! நீ, ஆசரிக்கப்படும் இவ்வேள்வி யிலுள்ள அவியை யருந்துவாயாக. ஓமத்திற்கிறைவ! பாவக! சோதக! ஒளிர் வோய்! நீ, வேள்வித்தலைவ னாதலின், வேள்வியில், தனது மகிமையால் தேவர் களைக் களிப்புறுவிக்கின்றாய். மற்றும், சுட்டிளமைய! நீ, இத்தன்மைய சிறப்புடையனாதலின், யாம் இப்பொழுது கொடுக்கும் அவிகளை ஏற்றுக் கொள்வாயாக என்பது.

"மருத்துக்களுக்கும், கிருகமேதிகளுக்கும் எல்லாவற்றிலுங் கறந்த பாலில் மாலையில் பொங்கல்" என்பதில், முதலாவது ஆஜ்ய பாகத்திற்குப் புரோநு வாக்கியங்கள் கூறப்படுகின்றது:—

---

பதினைந்தாம் மந்திரம்.

अग्निना रयिमश्नवत्पोषमेव दिवे दिवे । यशसं वीरवत्तमम् ।

என்பது.

உரை

இவ் வக்கினியால் அனைவரும் தனத்தை யடைகின்றார்கள். தனத்தை யடைவது மாத்திரமன்று, மற்றோ, அது குறையாததோடு அதன் வளர்ச் சியையு மடைகின்றனர். எத்தகைய வளர்ச்சி யெனின்? பெருமை யுடைய தும், மிகுந்த வீரமுடையதும், எமது புத்திரர்களைக் கொண்டதுமாமென்க என்பது.

இரண்டாவது ஆஜ்ய பாகத்தின் புரோநு வாக்கியங் கூறப்படுகிறது:—

---

பதினாறும் மந்திரம்.

गयस्फानो अमीवहा वसुवित्पुष्टिवर्धनः । सुमित्रस्सोमनो भव ।

என்பது.

உரை

சோமமே! நீ, எம்பொருட்டு, வீட்டைப் பெருகச் செய்கின்றவனும் நோய்களைப் போக்குகின்றவனும், தனத்தைக் கொடுக்கின்றவனும், ஆ முதலிய வைகளை வலியுறுத்துகின்றவனும், நல்ல எசமானனாகிய மித்திரனை யுடைய வனு மாவாயாக என்பது.

பிரதானத்திற்குப் புரோநு வாக்கியங்கள் கூறப்படுகின்றது:—

பதினேழாம் மந்திரம்.

गृहमेधास आगत मरुतो माऽपभूतन। प्रमुञ्चन्तो नो अꣳहसः।

என்பது.

உரை.

கிருகத்திற் செய்யும் எக்ஞங்களையுடைய மருத்துக்களே! நீவிர், இங்கு வருவீர்களாக. என்ன செய்து கொண்டெனின்? எமது பாவங்களை முழுதுந் தொலைத்துக் கொண்டென்க. ஒருக்காலும் வழுவாதீர்கள் என்பது.

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது:—

---

பதினெட்டாம் மந்திரம்.

पूर्वीभिर्हि ददाशिमशरद्भिर्मरुतो वयम्। महोभिश्चर्षणीनाम्।

என்பது.

உரை

மருத்துக்களே! எசமானர்களான யாம், அநாதிகாலந்தொட்டு மகத்தான நெல் முதலியவைகளுடனும், வருடங்களுடனும். வேள்விச்செயலாளர்களுக்கு நடுவில் இருந்து கொண்டு அவி கொடுக்கின்றோமாதலின், நீவிர் வருவீர்களாக என்பது.

முற்கூறிய அதற்கே விகல்பமாகிய வேறொரு யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது:—

---

பத்தொன்பதாம் மந்திரம்.

प्रबुध्निया ईरते वो महाꣳसि प्रणामानि प्रयज्यवस्तिरध्वम्।
सहस्रियन्दम्यं भागमेतं गृहमेधीयं मरुतो जुषध्वम्।

என்பது.

உரை

மருத்துக்களே! அநாதிகாலமாய் வந்த உங்களுடைய ஒளிகள், இனிமை செய்கின்றன. நல்வேள்விகளிலிருக்கின்ற உங்களுடைய கிருகமேதிகளான மருத்துக்கள் என்னும் பெயர்களை உலகிற்கறிவிப்பீர்களாக. ஆயிரத்திற் கொப்பான கிருகமேதிகளான உங்களைக் குறித்துக் கொடுக்கப்படும் புரோடாச பாகத்தை அருந்துவீர்களாக என்பது.

அதிலேயே சுவிஷ்டகிருத்திற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது:—

இருபதாம் மந்திரம்.

उपयमेति युवतिस्सुदक्षन्दोषावस्तोर्हविष्मती घृताची । उपस्वैन-
मरमतिर्वसूयुः ।

என்பது.

உரை.

மந்திரத்துடன் கூடியதும், எல்லா அவிகளுடன் கூடியதும், நெய்யால் உறுதியுற்றதுமாகிய இவ்வாகுதி, இரவிலும் பகலிலும் குசலமாகிய சுவிஷ்டகிருத் என்னும் அக்கினியை அடைகின்றது. இத்தகைய சுவிஷ்டகிருத் அக்கினியை, தனத்தை விரும்பிய எசமானர்கள் தமது அவியால் ஒருக்காலும் தவறாமல் வழிபடுகின்றார்கள் என்பது.

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

இருபத்தோன்றாம் மந்திரம்.

इमो अग्नेवीततमानि हव्याऽजस्रोवक्षिदेवतातिमच्छ । प्रतिन
ईंसुरभीणिवियन्तु ।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, மிகப்பிரியமுள்ள இந்த அவிகளை, தேவர்கள் பெற்றுக் கொள்ளுமாறு இடைவிடாமற் கொண்டு செல்வாயாக. நறுமணமுள்ள எமது அவிகளை, தனித்தனி தேவர்கள் அருந்துவார்களாக என்பது.

"கிரீடை செய்யும் மருத்துக்கட்கு ஏழு கபாலங்களில் புரோடாசஞ் செய்க" என்பது முதலியதில், அவிகளுக்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது :—

இருபத்திரண்டாம் மந்திரம்.

क्रीडं वश्शर्धो मारुतमनर्वाणंरथे शुभम् । कण्वा अभिप्रगायत ।

என்பது.

உரை

கண்ணுவர் முதலான வேத ஆசிரியர்களே! நீவிர், உங்களுடைய விளையாட்டிற்குக் காரணமும், மருத்துக்களைப் பற்றியதும், பகைவர்களால் அடக்க முடியாததும், இரதத்தைச் செலுத்துவதில் வன்மையுடையதுமாகிய போற்றலை, வைதிகத் துதிகளால் யாண்டும் பாடுவீர்களாக என்பது.

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது :—

இருபத்துமூன்றாம் மந்திரம்.

अत्यासोनये मरुतस्स्वञ्चो यक्षदृशो न शुभयन्तमर्याः । ते हर्म्येष्ठा-
श्शिशवो न शुभ्रावत्सासोन प्रक्रीडिनः पयोधाः ।

என்பது.

உரை

இடையறாது நடை இல்லாதவர்களும், அழகிய நடை யுடையவர்களும், வேள்வியைப் பார்க்க வந்தவர்கள் போன்று விருப்பு மிகுதியால் இங்கு வந்திருக்கின்றவர்களும், அரச புத்திரன் போன்று மலையிற் சஞ்சரிக்கின்றவர்களும், குழந்தை போன்று இங்கு மங்கும் ஓடி விளையாடுகின்றவர்களும், மேகத்தை யுண்டாக்கி அதில் நீரைத் தாங்குகின்றவர்களுமான, எவர்கள் தமது சஞ்சாரத்தால் உலகனைத்தையும் திருப்தி செய்கின்றார்களோ? அத்தகைய மருத்துக்கள் எமக்கு அருள் செய்வாராக என்பது.

மேற்கூறிய அதற்கே விகல்பித்து மற்றொரு புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது:—

இருபத்துநான்காம் மந்திரம்.

प्रैषामज्मेषु विथुरेव रेजते भूमिर्यामेषु यद्धयुञ्जते शुभे । ते क्रीडयो
धुनयो भ्राजदृष्टयस्स्वयं महित्वं पनयन्त धूतयः ।

என்பது.

உரை.

இம் மருத்துக்களுடைய சஞ்சாரத்தால், பூமி, கணவனில்லாத பெண் நடுங்குவது போல் நடுங்குகின்றது. மேகத்தில் நீரைச் சேர்க்கின்ற மருத்துக்களின் மகிமையைத் தாமே துதிக்கின்றார்கள். அவர்கள் எத்தகையர்களெனின்? விளையாட்டை மேற் கொண்டவர்களும், இடையறாது அசைகின்றவர்களும், மின்னலாகிய பார்வையையு டையவர்களும். பகைவரை நடுங்கச் செய்கின்றவர்களுமாவர் என்பது.

மேற்கூறிய அதற்கே விகல்பித்து மற்றொரு யாஜ்யை கூறப்படுகின்றது:—

இருபத்தைந்தாம் மந்திரம்.

उपह्वरेषु यदचिध्वं ययिं वय इव मरुतः केनचित्पथा । श्चोतन्तिकोशा
उपवो रथेष्वाघृतमुक्षता मधुवर्णमर्चते ।

என்பது.

உரை.

மருத்துக்காள்! நீவிர் பறவைகள் போன்று, யாதோ ஒரு வழியாய்ச் சென்று அருகை யடையும்போதும், மேகங்கள் உண்டாகும்போதும், தனம் நிறைந்த வீட்டைப்போன்ற மேகங்கள் உங்களுடைய தேர்கட்கருகில் வரும் போதும் நீர் ஒழுகுகின்றது. நீவிரும், தேனின் நிறமும், இரசமுமுடைய நெய் யொத்த நீரை, எசமானன் பொருட்டு யாண்டும் பெய்விப்பீர்களாக என்பது.

அதிலே சுவிஷ்டகிருத்திற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது:—

இருபத்தாறும் மந்திரம்.

अग्निमग्निं हवीमभिस्सदा हवन्त विश्पतिम् । हव्यवाहं पुरुप्रियम् ।

என்பது.

உரை.

மக்களைப் பரிபாலிப்பதும், தேவர்கட்கு அவியைக் கொண்டு செல்வதும், அநேக எசமானர்களுக்கு மிகப் பிரியமுடையதுமாகிய அவ்வவ் வேள்வி அக் கினியை அழைப்பஃது மேற்கொண்டசொற்களால் இடையறாது அழைக்கின் றார்கள் என்பது.

மேற்கூறிய அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது:—

இருபத்தேழாம் மந்திரம்.

तं हि शश्वन्त ईडते स्रुचा देवं घृतश्चुता । अग्निं हव्याय वोढवे ।

என்பது.

உரை.

இடையறாது அநுட்டிக்கின்றவர்களும், நெய்யொழுகும் 'சுருக்' என்னும் அகப்பை விசேடத்துடன் கூடியவர்களுமான வேள்விச் செயலாளர்கள், அவி களை ஏற்றுச் செல்வதற்கு அக்கினி தேவனைத் துதிக்கின்றார்கள் என்பது.

மற்றும், "ஐந்திராக்னம் ஏகாதசகபாலம், ஐந்திரசரும், வைசுவகர்மணம் ஏககபாலம்" என்னும் மூன்று அவிகளுள் ஐந்திராக்கினியின் புரோநுவாக் கியங் கூறப்படுகின்றது:—

இருபத்தெட்டாம் மந்திரம்.

इन्द्राग्नी रोचनादिवः परि वाजेषु भूषथः ।

என்பது.

உரை.

'இந்திராக்னீ ரோசனாதிவ' என்பது புரோநுவாக்கியம், 'சநத்வருத்ரம்' என்பது யாஜ்யா வாக்கியம் என்பதாம். இதற்கு, 'ரோசநாதிவ' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது.

ஐந்திரத்தின், யாஜ்ய புரோநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் கூறப் படுகின்றன:—

---

இருபத்தோன்பதாம் மந்திரம்.

इन्द्रं वो विश्वतस्परीन्द्रन्नरः ।

என்பது.

உரை.

'இந்திரம் வோ விசுவத: பரீ' என்பது புரோநுவாக்கியம், 'இந்திரம் நர' என்பது யாஜ்யா வாக்கியம். இவ்விரண்டிற்கும், 'இந்திரம் வோ விசுவத: பரி ஹவா மஹே' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது என்பது.

வைசுவகருமத்தில், யாஜ்ய புரோநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன:—

---

முப்பதாம் மந்திரம்.

विश्वकर्मन् हविषावा वृधानो विश्वकर्मन् हविषा वर्धनेन ।

என்பது.

உரை.

இவற்றுள், 'விசுவகர்மன் வாவ்ருதான' என்பது புரோநுவாக்கியம், 'விசுவகர்மன் ஹவிஷா வர்தனேன' என்பது யாஜ்யா வாக்கியம் என்பது.

இவ்விரண்டிற்கும், 'ய இமா விசுவாபுவநாநி சுஹ்வத்' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது.

பதின்மூன்றுவது அநுவாகம் முற்றிற்று.

மூன்றும் பிரபாடகம் முடிந்தது.

---



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

---

### விடயச் சுருக்கம்.

प्रपाठके तृतीयेऽस्मिं श्चितयः पञ्चवर्णिताः ।
चतुर्थे पञ्चमचितेः शेषः सर्वो विधीयते ॥ १ ॥

மூன்றாவது பிரபாடகத்தில் ஐந்தாவது செங்கல் அடுக்குக் கூறப்பட்டது. நான்காம் பிரபாடகத்தில் ஐந்தாவது அடுக்கில் எஞ்சிய அனைத்துங் கூறப்படுகின்றது.

---

### முதல் அநுவாகம்.

#### விடயச் சுருக்கம்.

इष्टकारश्मिरित्येकत्रिंशत्तु स्तोमभागकाः ॥ १ ॥

முதலநுவாகத்தில் முப்பத்தொரு ஸ்தோமபாகங்களென்னும் செங்கல் கூறப்படுகின்றது.

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

### முதல் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

---

ஸ்தோமபாகங்க ளென்னுஞ் செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

रश्मिरसि क्षयाय त्वा क्षयं जिन्व प्रेतिरसि धर्माय त्वा धर्मं जिन्वान्वितिरसि दिवे त्वा दिवं जिन्व सन्धिरस्यन्तरिक्षाय त्वाऽन्तरिक्षं जिन्व प्रतिधिरसि पृथिव्यै त्वा पृथिवीं जिन्व विष्टम्भोऽसि वृष्ट्यै त्वा वृष्टिं जिन्व प्रवाऽस्यह्ने त्वाऽहर्जिन्वानुवाऽसि रात्रियै त्वा रात्रिं-

झिन्वोशिगसि ॥ १ ॥ वसुभ्यस्त्वा वसूञ्झिन्वप्रकेतोऽसि रुद्रेभ्यस्त्वा रुद्राञ्झिन्वसुदीतिरस्यादित्येभ्यस्त्वाऽऽदित्याञ्झिन्वौजोऽसि पितृभ्यस्त्वा पितृञ्झिन्वतन्तुरसि प्रजाभ्यस्त्वा प्रजाञ्जिन्व पृतनाषाडसि पशुभ्यस्त्वा पशूञ्झिन्वरे वदस्योषधीभ्यस्त्वौषधीर्जिन्वाभिजिदसि युक्तग्रा वेन्द्रायत्वेन्द्रञ्झिन्वाधिपतिरसि प्राणाय ॥ २ ॥ त्वा प्राणञ्झिन्व यन्ताऽस्यपानायत्वाऽपानञ्झिन्व स॒ꣳसर्पोऽसि चक्षुषेत्वा चक्षुर्जिन्व वयोधा असि श्रोत्रायत्वा श्रोत्रञ्झिन्व त्रिवृदसि प्रवृदसि संवृदसि विवृदसि स॒ꣳरोहोऽसि नीरोहोऽसि प्ररोहोऽस्यनुरोहोऽसि वसुकोऽसि वेषश्रिरसि वस्यष्टिरसि ॥ ३ ॥

*இதில், எஞ்சிய ஸ்தோமபாகங்க ளென்னுஞ் செங்கல்களை எவ்வேழாக வைக்கும் முறை கூறப்படுகின்றது அவற்றுள், கிழக்கில்வைக்க வேண்டிய ஏழில்,*

---

முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

रश्मिरसि क्षयायत्वा क्षयं जिन्व ।

என்பது.

உரை

*செங்கலே! நீ, இரவியின் கிரண வடிவாயிருக்கின்றாய்; நிவாச சித்தியின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். நிவாசத்தைத் தேடுவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், பன்னிரண்டாவது வரிசையில் ஐந்தாவது பாதச் செங் கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रेतिरसि धर्मायत्वा धर्मं जिन्व ।

என்பது.

செங்கல்கள்)

உரை

செங்கலே! நீ, மிகச் செல்லுந் தன்மையதா யிருக்கின்றாய். விதித்த கருமாநுட்டானத்தின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். தருமத்தைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறுவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம்:

अन्वितिरसि दिवेत्वा दिवं जिन्व ।

என்பது.

உரை

செங்கலே! நீ, அநுகூலப் போக்கையுடையதா யிருக்கின்றாய். சுவர்க்கத்தின்பொருட்டு உன்னை வைக்கின்றேன். சுவர்க்கத்தைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஏழாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம்:

संधिरस्यन्तरिक्षायत्वाऽन्तरिक्षं जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, விண்ணிற்கும் மண்ணிற்கும் இடையிலுள்ள சந்தருவலோகப் பகுதியா யிருக்கின்றாய். அந்தரிக்கத்தின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். அந்தரிக்கத்தைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எட்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रतिधिरसि पृथिव्यै त्वा पृथिवीं जिन्व ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, மண்ணின் பகுதியாயிருக்கின்றாய். மண்ணின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். நீ மண்ணுலகைத் தேடுவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஒன்பதாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஆருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विष्टम्भोऽसि वृष्ट्यैत्वा वृष्टिं जिन्व ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, மேகமாய் இருக்கின்றாய். மழையின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். நீ மழையைத் தேடுவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பத்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रवाऽस्यह्ने त्वाऽहर्जिन्व ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, உஷாக் காலமாக இருக்கின்றாய், உன்னை, நாளின் பொருட்டு வைக்கின்றேன். பகலைத் தேடுவாயாக என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினோராவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

தெற்குப்பக்கத்தில் வைக்கவேண்டிய எழில்,

முதலாவது கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

अनुवासि रात्रियै त्वा रात्रिं जिन्व ।

என்பது.

உரை

செங்கலே! நீ, இரவி யொடுங்கிய பின் நிகழும் மாலைப் போதாக இருக்கின்றாய். இரவின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். இரவைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தெற்கு பக்கத்துச் சிறகின் இரண்டாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

उशिगसि वसुभ्यस्त्वा वसूं जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, வசுக்களால் விரும்பப்படுவதா யிருக்கின்றாய். வசுக்களின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். வசுக்களைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रकेतोऽसि रुद्रेभ्यस्त्वा रुद्राञ्जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, உருத்திரர்களின் இடமாக இருக்கின்றாய். உருத்திரர்களின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். உருத்திரர்களைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி நான்காவது வரிசையில் முதலாவது சிற குச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सुदीतिरस्याऽऽदित्येभ्यस्त्वाऽऽदित्यान् जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, அழகிய ஒளியாயிருக்கின்றாய். சூரியர்களின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். சூரியர்களைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி நாலாவது வரிசையில் இரண்டாவது சிற குச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ओजोऽसि पितृभ्यस्त्वा पितॄञ्जिन्व ।

என்பது.

உரை

செங்கலே! நீ, பிதிர்க்களின் அநுக்கிரக சாமர்த்தியமாயிருக்கின்றாய். பிதிர்க்களின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். பிதிர்க்களைப் பிரியப்படுத்து வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி ஐந்தாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

ஆறாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तन्तुरसि प्रजाभ्यस्त्वा प्रजा जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, பிள்ளை, பேரன்மார் முதலான தொடர்பு வடிவா யிருக்கின்றாய். பிள்ளைகளின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். பிள்ளைகளைத் தேடு வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पृतनाषाडसि पशुभ्यस्त्वा पशून् जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, பசு முதலியவைகளைக் கவருதற்கு வரும் பிறருடைய சேனையை அடக்குவோனாக இருக்கின்றாய். விலங்குகளின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். விலங்குகளைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மேற்கில் வைக்க வேண்டிய ஏழனுள்,

முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

रेवदस्योषधीभ्यस्त्वौषधीर्जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, கொடி செடி முதலானவைகளாலாய தனம் என்றுஞ் சிவனமா யிருக்கின்றாய். கொடி செடிகளின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். கொடி செடிகளைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலின் முதல் வரிசையில் ஒன்பதாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अभिजिदसि युक्तग्रावेन्द्राय त्वेन्द्रं जिन्व ।

என்பது.

உரை

செங்கலே! நீ, நாற்புறத்தும் பகைவரை யடக்குமல்லனாக இருக்கின்றாய். கல்லை யொத்த வச்சிரத்தைக் கையில் உடையவனும், இந்திரியங்களுக்கு அதிட்டானனுமாகிய இந்திரன் பொருட்டு உன்னை வைக்கின்றேன். இந்திரனுக்குக் களிப்புண்டாக்குவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பத்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றாவது கல்லை வைத்தல்,

மந்திரம் :

अधिपतिरसि प्राणाय त्वा प्राणं जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, பிராணவடிவத் தலைவனா யிருக்கின்றாய். பிராணன் பொருட்டு உன்னை வைக்கின்றேன். பிராணனைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினோராவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

यन्ताऽस्यपानाय त्वाऽपानं जिन्व

என்பது.

உரை

செங்கலே! நீ, வெளியில் வரும் சுவாசத்தை மீண்டும் உட்புகும்படி செய்யும் வாயுவாக இருக்கின்றாய். அபானன் பொருட்டு உன்னை வைக்கின்றேன். அபானனைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

செங்கல்கள்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பன்னிரண்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सꣳसर्पोऽसि चक्षुषेत्वा चक्षुर्जिन्व ।

என்பது.

உரை

செங்கலே ! நீ, கண்ணாக இருக்கின்றாய். கண்ணின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். கண்ணைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதின்மூன்றாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वयोधा असि श्रोत्रायत्वा श्रोत्रं जिन्व ।

என்பது.

உரை.

செங்கலே ! நீ, ஒலியைக் கேட்கும் ஆற்றலாக இருக்கின்றாய். செவியின் பொருட்டு உன்னை வைக்கின்றேன். செவியைப் பிரியப்படுத்துவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

त्रिवृदसि ।

என்பது.

உரை

செங்கலே ! நீ, ஆண் பெண் புணர்ச்சி என்னும் மூன்றாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினேழாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

வடபக்கத்தில் வைக்க வேண்டிய ஏழு

மந்திரம்:

(1) प्रवृदसि, (2) संवृदसि, (3) विवृदसि, (4) संरोहोसि, (5) नीरोहोसि, (6) प्ररोहोऽसि, (7) अनुरोहोऽसि । என்பது.

உரை.

செங்கல்களே! நீங்கள், ஆண் பெண் புணர்ச்சிக்கு பின்னுண்டாகுஞ் செய்கையாகவும், அச் செய்கைப் பின்னுண்டாகு நற்செய்கையாகவும், முன்னர், யோனியாகிய மண்ணில் இந்திரியமாகிய வித்தை ஊன்றலாகவும், ஊன்றிய வித்து கருப்பப் பையில் நன்கு சேருவதாகவும், சேர்ந்து உடம்பு வடிவாய்த் திரள்வதாகவும், திரண்டு குழந்தையாய் வருதலாகவும் இருக்கின்றீர்கள் என்பது. இவற்றை மந்திர முறையாய்க் கொள்க.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களேழாலும், முறையாய், வடபக்கத்துச் சிறகின், ஏழாவது வரிசையில் முதலிலிருந்து மூன்று சிறகுச் செங்கல்களையும், எட்டாவது வரிசையில் முதலாவது இரண்டாவது சிறகுச் செங்கல்களையும், ஒன்பதாவது பத்தாவது வரிசைகளில் முதலாவது சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

நடுவில் வைக்க வேண்டிய மூன்று.

மந்திரம்:

(1) वसुकोऽसि, (2) वेषश्रिरसि, (3) वस्यष्टिरसि ॥

என்பது.

உரை.

செங்கல்களே! நீங்கள், தனமுடைய புதல்வனாகவும், தனத்தை வளர்க்கின்றவனாகவும், வளர்த்து அநுபவிக்கின்றவனாகவும் இருக்கின்றீர்கள் என்பது

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்கள் மூன்றாலும், ஆன்ம வரிசை ஒன்பதில், இரண்டாவது, மூன்றாவது, நான்காவதான மூன்று சோடசி என்னுஞ் செங்கல்களை வைத்தல் வேண்டு மென்பதாம்.

முதலாம் அநுவாகம் முற்றிற்று.

இரண்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

राज्ञीनाकसदःपञ्च सर्वशेषोऽन्तरित्ययम् ।

'நாகசத்துக்கள்' என்னும், ஐந்து கல்லுகளை வைத்தல் என்பது.

---

நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

இரண்டாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் நாற்பது பதங்களைக் கொண்டது.

---

நாகசத்துக்கள் என்னுஞ் செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

राज्ञ्यसि प्राचीदिग्वसवस्ते देवा अधिपतयोऽग्निर्हेतीनां प्रतिधर्ता त्रिवृत्त्वास्तोमः पृथिव्याᳫं श्रयत्वाज्यमुक्थमव्यथयत्स्तभ्नातुरथन्तरᳫं सामप्रतिष्ठित्यै विराडसि दक्षिणादिग्रुद्रास्ते देवा अधिपतय इन्द्रो हेतीनां प्रतिधर्ता पञ्चदशस्त्वास्तोमः पृथिव्याᳫं श्रयतु प्रउगमुक्थमव्यथयत्स्तभ्नातु बृहत्सामप्रतिष्ठित्यै सम्राडसि प्रतीचीदिक् ॥ १ ॥ आदित्यास्ते देवा अधिपतयस्सोमो हेतीनां प्रतिधर्ता सप्तदशस्त्वास्तोमः पृथिव्याᳫं श्रयतु मरुत्वतीयमुक्थमव्यथयत्स्तभ्नातु वैरूपᳫं सामप्रतिष्ठित्यै स्वराडस्युदीचीदिग्विश्वेते देवा अधिपतयो वरुणो हेतीनां प्रतिधर्तैकविᳫंशस्त्वास्तोमः पृथिव्याᳫं श्रयतु निष्केवल्यमुक्थमव्यथयत्स्तभ्नातु वैराजᳫं सामप्रतिष्ठित्या अधिपत्न्यसि बृहतीदिङ्मरुतस्ते देवा अधिपतयः ॥ बृहस्पतिर्हेतीनां प्रतिधर्ता त्रिणवत्रयस्त्रिᳫंशौ त्वास्तोमौ पृथिव्याᳫं श्रयतां वैश्वदेवाग्निमारुते उक्थे अव्यथयन्तीस्तभ्नीताᳫं शाक्वर

रैवते सामनी प्रतिष्ठित्या अन्तरिक्षायर्षयस्त्वा प्रथमजा देवेषुं
दिवो मात्रया वरिणा प्रथन्तु विधर्ता चायमधिपतिश्च ते त्वा सर्वे
संविदाना नाकस्य पृष्ठे सुवर्गे लोके यजमानञ्च सादयन्तु ॥ ३॥

முதலநுவாகத்தில் ஸ்தோமபாகங்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன. இதில், நாகசத்துக்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்படுகின்றன.

---

(வி-1) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

राड्यसि प्राचीदिग्वसवस्ते देवा अधिपतयोऽग्निर्हेतीनां प्रतिधर्ता
त्रिवृत्त्वास्तोमः पृथिव्याᳪं श्रयत्वाज्य मुक्थमव्यथयत्स्तभ्नातु
रथन्तरᳪं सामप्रतिष्ठित्यै ।

என்பது

உரை

செங்கலே! நீ, விளங்குகின்ற கிழக்குத் திசை வடிவாயிருக்கின்றாய். உன்னை நன்கு பரிபாலிக்கின்றவர்கள் எட்டு வசுக்களாவர். உன்னைத் துன்புறுத்தும் பிறருடைய படைகளை நீக்குவது அக்கினியாகும். திரிவிருத் (மும்முறைகொண்ட) ஸ்தோமம், உன்னைப் பூமியில் நிறுவுக. 'प्रवोदेवाय अग्नये' என்னும் ஆச்ய சஸ்திரம் பீடையைப் போக்குக, உறுதிப்படுத்துக. 'ரதந்தரம்' என்னுஞ் சாமப் பாடல் உனது நீண்ட கால வாழ்வின் பொருட்டாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றங்குலம் உயரமுடைய ஒரு பாதச் செங்கலை, பதினாறும் வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலாக வைத்தல் வேண்டும் என்பதாம்.

இம் மந்திர முதலிய ஐந்து மந்திரங்களிலும் ஒவ்வொன்றிலும் ஆறாவது மந்திரத்தைச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

ஈண்டு, பாதச் செங்கல் ஆறங்குலம் உயர முடையதாயினும், ஆணையும் பெண்ணையும் ஒன்று கூட்டி வைப்பதுபோல் பாவனை செய்தலின், அதாவது ஒரு செங்கலின்மேற் மற்றொரு செங்கலையும் வைக்கவேண்டி யிருத்தலின் இவைகள் மூன்றங்குலங் கனமுடையனவா யிருத்தல் வேண்டும் என்பதை யுணர்க.

(வி-2)　இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विराडसि दक्षिणादिग्रुद्रास्ते देवा अधिपतय इन्द्रो हेतीनां प्रतिधर्ता पञ्चदशस्त्वास्तोमः पृथिव्याꣳ श्रयतु प्रउगमुक्थमव्यथयत्स्तभ्नातु बृहत्साम प्रतिष्ठित्यै ।

என்பது.

உரை

செங்கலே! நீ, இனிது விளங்குந் தெற்குத் திசையாக இருக்கின்றாய். உன்னை நன்கு பரிபாலிப்பவர்கள் உருத்திர தேவர்கள். பிறருடைய படையை நீக்குகின்றவன் இந்திரன். பதினைந்து முறை ஸ்தோமம் உன்னைப் பூமியில் நிறுவுக. 'வாயு ரக்ரேகா' என்னுஞ் சஸ்திரம், அதாவது 'பிரஉக' சஸ்திரம் உன்னை உறுதிப்படுத்துக. பீடையைப் போக்குக. 'பிருகத்' என்னுஞ் சாமப்பாடல், உனது நீண்ட கால வாழ்விற்கு நிமித்தமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், தென்பக்கச் சிறகின் முதல் வரிசையில், முன்போலுள்ள ஒரு சிறுச் செங்கலை முன்றாவதாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-3)　மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सम्राडसि प्रतीचीदिगादित्यास्ते देवा अधिपतयस्सोमो हेतीनां प्रतिधर्ता सप्तदशस्त्वास्तोमः पृथिव्याꣳ श्रयतु मरुत्वतीय मुक्थमव्यथयत्स्तभ्नातु वैरूपꣳ सामप्रतिष्ठित्यै ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, பெரிதும் விளங்கும் மேற்குத் திசையாக இருக்கின்றாய். உன்னை, இனிது பரிபாலிக்கின்றவர்கள் ஆதித்தர்கள். சோமன், உன்னைப் பற்றும் பிறருடைய படையை நீக்குபவன். பதினேழு முறை ஸ்தோமம உன்னைப் பூமியில் நிறுவுக. 'आत्वा रथं यथोतये' என்பது முதலிய மருத்வதீய சஸ்திரம் பீடையை நீக்குக. உறுதிப்படுத்துக. வைரூபம் என்னுஞ் சாமப் பாடல், உனது நீண்ட கால வாழ்விற்கு நிமித்தமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போன்ற ஒரு பாதச் செங்கலை, வாலின் முதல் வரிசையில் எட்டாவதாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-4) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स्वराडस्युदीचीदिग्विश्वेते देवा अधिपतयो वरुणो हेतीनां प्रतिधर्तैक-
विꣳशस्त्वास्तोमः पृथिव्याꣳ श्रयतु निष्केवल्यमुक्थमव्यथयत्स्तभ्नातु
वैराजꣳसामप्रतिष्ठित्यै ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, இயற்கை விளக்கமாகிய வடக்குத் திசையாக இருக்கின்றாய். உன்னை, இனிது பரிபாலிக்கின்றவர்கள் விசுவே தேவர்கள். உன்னைப் பற்றும் பிறருடைய படையை நீக்குகின்றவன் வருணன். இருபத்தொருமுறைகொண்ட ஸ்தோமம் உன்னைப் பூமியில் நிறுவுக. 'अभित्वा शूरनोनुमः' என்பது முதலிய நிட்கேவல்யமென்னுஞ் சஸ்திரம் பீடையை நீக்குக. உறுதிப்படுத்துக. 'வைராசம்' என்னுஞ் சாமப்பாடல் உனது நீண்ட கால வாழ்விற்கு நிமித்தமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன்போன்றுள்ள ஒரு சிறகுச் செங்கலை, வடபக்கச் சிறகின் பதினோராவது வரிசையில் மூன்றாவதாக வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-5) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अधिपत्न्यसि बृहतीदिग्मरुतस्ते देवा अधियतयो बृहस्पतिर्हेतीनां प्रतिधर्ता
त्रिणवत्रयस्त्रिꣳशौत्वास्तोमौ पृथिव्याꣳ श्रयतां वैश्वदेवाग्निमारुते
उक्थे अव्यथयन्तीस्तभ्नीताꣳ शाक्वररैवते सामनी प्रतिष्ठित्यै ।

என்பது.

உரை

செங்கலே! நீ, நன்கு பாதுகாக்கும் மேல் திசையா யிருக்கின்றாய். உன்னைப் பரிபாலிப்போர்கள் மருத்துக்கள். உன்னைப் பற்றும் பிறருடைய படையை நீக்குபவன்-பிருகற்பதி. இருபத்தேழுமுறை கொண்ட ஸ்தோமம் உன்னைப் பூமியில் நிறுவுக. 'தத்ஸவிதுர் வ்ருணீமஹே' என்பது முதலிய வைசுவதேவ சஸ்திரமும், 'வைசுவாநராய ப்ருதுபாசஸே' என்னும் அக்கினி மாருத சஸ்திரமும் பீடையைப் போக்குக. உறுதிப்படுத்துக. 'சாக்வரம்'

'ரைவதம்' என்னுஞ் சாமப்பாடல்கள் உனது நீண்ட கால வாழ்விற்கு நிமித்தங்களாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போன்ற ஒரு பாதச் செங்கலே, ஆன்ம வரிசைகளுள் ஏழாம் வரிசையில் ஆறுவதாக வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

மேற்கூறிய ஐந்து மந்திரங்களிலுஞ் சேர்த்துக்கொள்ள வேண்டிய எஞ்சிய மந்திரம்.

மந்திரம் :

अन्तरिक्षायर्षयस्त्वा प्रथमजा देवेषु दिवो मात्रया वरिणा प्रथन्तु विधर्ता चायमधिपतिश्च ते त्वा सर्वे संविदानानाकस्य पृष्ठे सुवर्गे लोके यजमानञ्च सादयन्तु ।

என்பது.

உரை.

தேவர்களுக்குள் முதலில் உண்டாகிய நாரதர் முதலான ரிஷிகள், செங்கலாகிய உன்னை, வானில் வியாபித்தற் பொருட்டு, போற்றத்தக்க வான் பரிமாணத்தாற் பரப்புவார்களாக. மற்றும், உன்னைப் பரிபாலிக்கின்றவர்களும், பாதுகாப்பாளராக நிற்கின்றவர்களுங் கூடி, சுவர்க்கம் போன்ற இப் பூமியின் மீது உன்னை வைப்பார்களாக. எசமானனையும் சுவர்க்கத்தி லிருத்துவார்களாக என்பது.

இரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

---

மூன்றாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अये पुरः पञ्चचोडास्तेभ्य इत्यनुषज्यते ।
आस्वश्रोत्स्वयमातृण्णां परमेष्ठीति सादयेत् ॥ १ ॥
प्रोथद्विकर्णीमादध्यान्मन्त्रा अष्टा इहेरिताः ॥

சோடா, என்னும் ஐந்து செங்கல்களை வைத்தல். இயற்கையாய்த் துவாரம் உள்ள சுக்காங் கல்லைத் தொடுதல். அதை வைத்தல் விகர்ணீ என்னுங் கல்லை வைத்தல்' என்பது.

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

## மூன்றும் அநுவாகம்.

மூன்று பஞ்சாதிகட்கு மேல் இருபத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

இரண்டா மநுவாகத்தில் நாக சத்துக்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன. இதில், 'சோடா' என்னுஞ் செங்கல்கள் கூறப்படுகின்றன.

अयं पुरो हरिकेशस्सूर्यरश्मिस्तस्य रथगृत्सश्च रथौजाश्च
सेनानि ग्रामण्यौ पुञ्जिकस्थलाच कृतस्थलाचाप्सरसौ यातुधाना
हेतीरक्षाꣳसि प्रहेतिरयन्दक्षिणा विश्वकर्मा तस्य रथस्वनश्च रथे
चित्रश्च सेनानि ग्रामण्यौमेनकाच सहजन्याचाप्सरसौदङ्क्ष्णवः
पशवो हेतिः पौरुषेयो वधः प्रहेतिरयं पश्चाद्विश्वव्यचास्तस्यरथ-
प्रोतश्चासमरथश्च सेनानि ग्रामण्यौ प्रम्लोचन्तीच ॥ १ ॥ अनु-
म्लोचन्तीचाप्सरसौ सर्पा हेतिर्व्याघ्राः प्रहेतिरयमुत्तरात्संयद्वसु-
स्तस्य सेनजिच्चसुषेणश्च सेनानि ग्रामण्यौ विश्वाचीच घृताची
चाप्सरसावापो हेतिर्वातः प्रहेतिरयमुपर्यर्वाग्वसुस्तस्यतार्क्ष्यश्चारि-
ष्टनेमिश्च सेनानि ग्रामण्यावुर्वशीच पूर्वचित्तिश्चाप्सरसौ विद्युद्धेति-
रवस्फूर्जन्प्रहेतिस्तेभ्यो नमस्तेनो मृडयन्तु तेयम् ॥ २ ॥ द्विष्मो
यश्च नो द्वेष्टितं वोजं भेदधाम्यायोस्त्वा सदने सादयाम्यवत-
श्छायायान्नमस्समुद्रायनमस्समुद्रस्य चक्षसे परमेष्ठीत्वा सादयतु
दिवः पृष्ठेव्यचस्वतीं प्रथस्वतीं विभूमतीं प्रभूमतीं परिभूमतीं दिवं
यच्छ दिवन्दृꣳह दिवं माहिꣳसीर्विश्वस्मै प्राणायापानाय व्यानायो-
दानाय प्रतिष्ठायै चरित्राय सूर्यस्त्वाऽभिपातु मह्यास्वस्त्या छर्दिषा

शन्तमेन तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवा सीद । प्रोथदश्वो नयवसे अविष्यन् यदा महस्संवरणाद्व्यस्थात् । आदस्य वातो अनुवाति शोचिरध स्म ते व्रजनं कृष्णमस्ति ॥ ३ ॥

இனி, முன்வைத்துள்ள நாகசத்துக்கள் என்னும் ஐந்து செங்கல்களின் மீதும் மந்திரமின்றி மணலைப் போட்டுவிட்டு, அவைகளின் மீதே வைக்க வேண்டிய ஆறனுள்,

(வி-1) முதலாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

अयं पुरो हरिकेशस्सूर्यरश्मिस्तस्य रथगृत्सश्च रथौजाश्च सेनानि ग्रामण्यौ पुञ्जिकस्थला च क्रतुस्थला चाप्सरसौ यातुधाना हेती रक्षाꣳसि प्रहेतिः । என்பது.

உரை

இவ் வக்கினி கிழக்குத் திசையில், பொன்போன்ற சுவாலைகளையும், இரவி போன்ற கிரணங்களையும் உடையதாய் இருக்கின்றது. இதற்கு, இரதத்தில் மிக விருப்புடையவனும், தனது கிராமத்திற்கு அழைத்துச் செல்கின்றவனுமான ரதகிருத்-ரதௌஜன் என்னும் இரண்டு திருப்பணியாளர்கள் உளர். இவர்கள் சேனாநி கிராமணி என வழங்கப் பெறுவர். புஞ்சிகஸ்தலன், கிருதஸ்தலன் என்னும் மற்று மிரண்டு முக்கியமான அப்சரசர்கள் உளர். அசுரர்களின் படை, இராக்கதர்களின் கூரியபடைகளும் உள என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், மேல்வரும் ஆறுவது மந்திரத்தையுஞ் சேர்த்து ஓதிக் கொள்வதுடன் பகைவனுடைய பெயரையேனும், அல்லது பாவத்தையேனுங் கூறிவிட்டு, முன் பதினொருவது வரிசையில் இரண்டாவதாக வைத்துள்ள பாதியாகிய பாதச்செங்கலின் மேல், மூன்றங்குலம் உயரமுடைய மற்றொரு பாதியாகிய பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-2) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयं दक्षिणा विश्वकर्मा तस्य रथस्वनश्च रथेचित्रश्च सेनानि ग्रामण्यौ मेनका च सहजन्या चाप्सरसौ दङ्क्ष्णवः पशवो हेतिः पौरुषेयो वधः प्रहेतिः । என்பது.

உரை.

அக்கினி ஹோத்திர முதலான எல்லாக் கருமங்களையுமுடைய அக்கினி தெற்குத் திசையிலிருக்கின்றது. அதற்கு, ரதஸ்வனன் என்னும் இரதச் சித்திரனும், ரதேசித்திரன் என்னும் கிராமணியும், மேனகை, சஹஜன்யா என்னும் அப்சரசர்களும் பணியாளர்களாவர். கொல்லுந் தன்மையுடைய புலி முதலியவைகள் படைகள். போரிற் கொல்லும் மனிதக் கொலை கூரியபடையாம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்த முறையாகவே, தெற்குச் சிறகின் முதல் வரிசையில் மூன்ருவதாக முன் வைத்துள்ள சிறகுச் செங்கலின் மீது மூன்றங்குலம் உயரமுடைய ஒரு சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-3) மூன்ருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयमुत्तरात्संयद्वसुस्तस्य सेनजिच्चसुषेणश्च सेनानि ग्रामण्यौ विश्वचीच घृताचीचाप्सरसा वापो हेतिर्वातः प्रहेतिः ।

என்பது.

உரை.

தனத்தைப் பெற்றுள்ள அக்கினி வடக்குத் திக்கில் இருக்கின்றது. சேனஜித், சுஷேணம் என்பவர்களும், விசுவாசு, கிருதாசி என்னும் அப்சரசர்களும் பணியாளர்களாவர், அதற்கு தண்ணீர் படை, காற்றுக் கூரியபடை என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன் வைத்த முறையாகவே வடபக்கச் சிறகின் பதினோராவது வரிசையில் மூன்ருவதாக வைத்த சிறகுச் செங்கலின் மீது, மூன்றங்குலம் உயரமுடைய ஒரு சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம். இது பாட முறையிற் பின்னுள்ளது.

---

(வி-4) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयमुपर्यर्वाग्वसुस्तस्यताक्ष्यश्चारिष्टनेमिश्च सेनानि ग्रामण्यावुर्वशीच पूर्वचित्तिश्चाप्सरसौ विद्युद्धेतिरवस्फूर्जन्प्रहेतिः ।

என்பது.

உரை.

மேலிருந்து கீழே விழும் மின்னலாகிய அக்கினி மேல் திசையிலிருக்கின்றது. இதற்கு, தார்க்ஷியன் இரதமோட்டுகின்றவன். அரிஷ்டநேமி கிராமத்திற் சேர்ப்பவன். ஊர்வசி, பூர்வசித்தி என்பவர்கள் அப்சரசர்கள். பயப்படுத்தும் மின்னல்படையாம். கொல்லும் மின்னல் கூரிய படை என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்த முறையாகவே, ஆன்ம வரிசைகளுள் ஏழாவது வரிசையில், ஆறாவதாக, முன் வைத்திருக்கின்ற பாதச் செங்கலின் மேல் மூன்றங்குலம் உயரமுள்ள மற்றொரு பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பது.

---

(வி-5) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयं पश्चाद्विश्वव्यचास्तस्य रथप्रोतश्चासमरथश्च सेनानि ग्रामण्यौ
प्रम्लोचन्तीचानुम्लोचन्तीचाप्सरसौ सर्पा हेतिर्व्याघ्राः प्रहेतिः ।

என்பது.

உரை

உலகை வியாபிக்கும் அக்கினி மேற்குத் திசையிலிருக்கின்றது; இதற்கு ரதப்ரோதன், அசமரதன் என்பவர்களும், இரதக்காரனும், கிராமத்திற் சேர்ப்பவராவார்கள். ப்ரம்லோசாந்தி, அநும்லோசாந்தி என்பவர்கள் அப்ரசர்கள். பாம்புகள் படைகள். சிம்மம் கூரிய படை என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன் வைத்த முறைப்படியே, வாலின் முதல் வரிசையில் எட்டாவதாக வைத்துள்ள பாதச் செங்கலின் மீது மூன்றங்குலம் உயரமுள்ள ஒரு பாதச் செங்கலைக் கிழக்கு முகமாய் வைத்தல் வேண்டுமென்பதாம்.

இது பாடமுறையில் முன்னுள்ளது.

---

இது, மேலே கூறிய ஐந்து மந்திரங்களிலுஞ் சேர்த்துக்கொள்ள வேண்டிய மந்திரம்.

तेभ्यो नमस्ते नो मृडयन्तु तेयन्द्विष्मो यश्च नो द्वेष्टि तं वोजम्भे
दधामि ।

என்பது,

உரை.

இவ்வக்கினிக்கும், அதனுடைய சேனானி, கிராமணி, அப்சரசர்கள், படைக்கலம், கூரியபடை என்பவைகட்கும் வணக்கம். அவைகள் எம்மைச் சுகப்படுத்துவனவாகுக. எம்மிடத்தில் பொறாமையுள்ளவனும், எம்மால் துவேஷிக்கப்பட்டவனுமாகிய பகைவனை, உங்களுடைய அருளைப் பெற்ற யான், உங்களுடைய வாயில் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரம் மேலே கூறிய மந்திரங்களுடன் ஒவ்வொன்றிலுஞ்சேர்த்து ஓதல் வேண்டியது என்பதாம்.

---

(வி-6) தொடுதல்.

மந்திரம் :

आयोस्त्वासदने सादयाम्यवतश्छायायान्नमस्समुद्रायनमस्समुद्रस्य चक्षसे ।

என்பது.

உரை.

உலகைக் காக்கும் இரவி, குளிர்ச்சியைக் கொடுத்தபோது அவ்விடத்தில், செங்கலே! உன்னை வைக்கின்றேன். கடல் போன்ற இரவிக்கு வணக்கம். கடலின் ஒளிக்கு வணக்கம் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன்னர், எருதின் தோலிற் கட்டிக் கொண்டு வந்துள்ள எஞ்சிய சுக்கான் கல் ஒன்றைத் தொட்டுப் போற்றல் வேண்டுமென்பதாம்.

மற்றும், மந்திரமின்றி, அந்தச் சுக்கான்கல்லை, குதிரையும் முகர்ந்து பார்க்கும்படி செய்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-7) சுக்கான் கல்லை வைத்தல்

மந்திரம் :

परमेष्ठी त्वा सादयतु दिवः पृष्ठे व्यचस्वतीं प्रथस्वतीं विभूमतीं प्रभूमतीं परिभूमतीं दिवं यच्छ दिवन्दृꣳह दिवं मा हिꣳसीर्विश्वस्मै प्राणायापानाय व्यानायोदानायप्रतिष्ठायै चरित्राय सूर्यस्त्वाऽभिपातु मह्या स्वस्त्या छर्दिषा शन्तमेनतया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை.

விளக்கமுடையதும், விரிவுடையதும், பல்வகைக் காரியங்களை யுண்டாக்கும் புதிய சத்தியையுடையதுமாகிய அத்தகைய உன்னை, சத்தியலோகத்திலிருக்கின்ற பிரமன், சுவர்க்கத்தின் மேல் வைப்பானாக. நீ சுவர்க்க போகத்தை எசமானனுக்கு நிடமிப்பாயாக. சுவர்க்கத்தை உறுதிப்படுத்துவாயாக. சுவர்க்கத்தைக் கெடுக்காதே. பிராணன் அபானன் முதலிய வாயுவிருத்திகளின் பொருட்டும், தனது வீட்டில் நிலைத்திருத்தற் பொருட்டும், நால் வழி நடப்பதற்கும், சூரியன், உன்னை நாற்புறத்தும் பாதுகாப்பானாக. எவ்வாறெனின்? பெரிய யோக க்ஷேமத்தாலும், பெருஞ் சுகந்தரும் ஒளியாலும் என்க. உனது அதிட்டான தேவதையால் அருள் செய்யப் பெற்று அங்கிரசர் செய்த மகாக்கினிசயனத்தில் உட்கார்ந்தது போல் இங்கு உட்காருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், 'சுவ:' என்னும் வியாகிருதியையுஞ் சேர்த்துக் கொண்டு, முன் போல் ஒரு கல்வி யில்லாதவனுடன், வேட்போன் நின்று கொண்டு அந்தச் சுக்கான் கல்லை, கருட சயனத்தின் நடுவில் வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, வேட்போன், அச் சுக்காங் கல்லின் மேல் 'चित्तिं जुहोमि' என்பது முதலிய மந்திரத்தால் ஒரு ஓமஞ் செய்தல் வேண்டும்.

எசமானன், 'विश्वकर्मण इदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும். இடது மூக்கால் சுவாசத்தை விடல் வேண்டும்.

கல்வியில்லாதவன், எசமானனிடத்திலிருந்து கோக்களைப் பெற்று, அவைகளை வேட்போனுக்குக் கொடுத்தல் வேண்டும்.

'இயற்கைச் சுக்கான் கல்லின் சாமமறைப் பாடலைப் பாடுவாயாக' என்று வேட்போன், பிரஸ்தோதாவை ஏவுதல் வேண்டும்.

பிரஸ்தோதா, 'सुवः' (சுவ:) என்பது முதலிய சாமப் பாடலைப் பாடல் வேண்டும்.

---

(வி-௮) விகர்ணி என்னுஞ் செங்கலை வைத்தல்.

மந்திரம் :

प्रोथदश्वोनयवसे अविष्यन् यदा महस्संवरणाद्व्यस्थात् । आदस्यवातो
अनुवातिशोचिरधस्मते व्रजनं कृष्णमस्ति ॥

என்பது.

உரை

இவ்வக்கினி, குதிரையை கட்டுமிடத்திலிருந்து எழுந்து செல்லும்போது குதிரை புல்லிற்குக் கனைத்தல் போன்று, ஒளி வீசிக்கொண்டு ஒளிர்கின்றது. பிறகு, இவ்வாறு ஒளிரும் அக்கினியைப் பற்றிக் கொண்டு, வாயு அசைகின்றது. அக்கினியே! உனது சுவாலையுடன் காற்றுஞ் சேர்ந்த பிறகு, காட்டிலுள்ள அழகிய இடம் கறுப்பாகி விடுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

'இம் மந்திரத்தால், ஆன்ம வரிசைகளுள் பதினான்காவது வரிசையில், 'விகர்ணி' யென்னும் பாதச் செங்கலை ஐந்தாவதாக வைத்தல் வேண்டும் என்பதாம்.

மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

பரிசேடம்.

பிறகு 'सुवरसि' (சுவரஸி) என்பது முதலிய சூத்திர மந்திரத்தால், ஒரு பொன் துண்டை, அவ்வடுக்கின் மீது உரியதோரிடத்தில் வைத்தல் வேண்டும்.

அதன் பிறகு. 'चौरपराजिता' என்பது முதலான மந்திரத்தால் ஏழாவது வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இனி, கா. 4, பிர-2, 9-அநுவாகத்திலுள்ள, 'स्वराट्' என்பது முதலிய மந்திரத்தால், 'ரேதஸிக்' என்னும் ஒருபாதச் செங்கலை ஏழாவது வரிசையில் மூன்றுவதாக வைத்தல் வேண்டு மென்பதாம். இதன் விவரம் முன்காட்டப் பட்டுள்ளது.

பிறகு, 'प्रजापतिः' என்பது முதலிய ஆறும் அநுவாக மந்திரத்தால், முன் எருதுத் தோலிற் கட்டிக் கொண்டு வந்ததில் மீந்த 'விஸ்வஜ்யோதி:' என்னும் பாதச் செங்கலை, ஏழாம் வரிசையில் ஒன்பதாவதாக வைத்தல் வேண்டும்.

பின், 'तपश्च, तपस्यश्च' என்பது முதலான பதினோராவது அநுவாக மந்திரங்களிரண்டாலும், பத்தாவது பதினோராவது வரிசைகளிரண்டிலும், முன்போல் ஊகித்துக்கொண்டு, இரண்டாவதாகவுள்ள இரண்டு சோடசிகள் என்னுஞ் செங்கல்களை ஒருங்கே வைத்தல் வேண்டும்.

பிறகு, மந்திரமின்றி, இவ்விரண்டு செங்கல்களையும் வேலம் பாசியால் மூடிவிடல் வேண்டும்.

மற்றும் 'देवानां यान्यसि' 'देवानां देवयान्यसि' என்பது முதலிய சூத்திர மந்திரங்களிரண்டாலும், பத்தாவது, பதினோராவது வரிசையில் நான்காவதான சோடசி என்னுஞ் செங்கல்களிரண்டையும் வைத்தல் வேண்டும்.

செங்கல்கள்)

இனி, மந்திரமின்றி, செங்கலடுக்கினின்றும் கீழே இறங்கி விடல் வேண்டும்.

உச்சிப்போதில் இரண்டு பசு முலைப்பாலருந்தல் விரதம். மாலையில் பிரவர்க்கியம், 'உபசத்' என்பவைகளைச் செய்தபின், வெள்ளைக்குதிரையைப் பிடித்துக்கொண்டு செங்கலடுக்கைச் சுற்றி வரல் வேண்டும்.

இரவில், இரு முலைப்பாலருந்தல் விரதம். கண்விழிப்பில்லை. ஆனால், 'அக்னேத்வம்' என்பது முதலிய மந்திரத்தைச் செபித்தல் வேண்டும். மற்றும், மூன்று அத்திக்குச்சிகளை நெய்யில் ஊற வைத்தல் வேண்டும்,

இத்துடன் ஐந்தாவது நாள் முடிந்தது.

பரிசேடம் முற்றிற்று.

---

## நான்காம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

अग्नाहैतस्तु गायत्र्यो भुवस्तु त्रिष्टुभांत्रयम् ।
जनतिस्रो जगत्यः स्युस्त्वां द्वित्रानुष्टुभां त्रयम् ॥ १ ॥
एना तिस्रो बृहत्यः स्युरग्न इत्युष्णिहां त्रयम् ।
आते पङ्क्तित्रयं ह्यग्नेऽक्षरपङ्क्ति चतुष्टयम् ॥ २ ॥
अग्निमेका ह्यतिच्छन्दा अग्ने त्वं द्विपदात्रयम् ।
एकोनत्रिंशदेतानिच्छन्दांस्युपदधाति हि ॥ ३ ॥

காயத்திரி யென்னும் மூன்று கல்களை வைத்தல், திருஷ்டுப் என்னும் மூன்று கல்களை வைத்தல், ஜகதி என்னும் மூன்று கல்களை வைத்தல், அநுஷ்டுப் என்னும் மூன்று கல்களை வைத்தல், பிருகதி என்னும் மூன்று கல்களை வைத்தல், உஷ்ணிக்கு என்னும் மூன்று கல்களை வைத்தல், பங்க்தி என்னும் மூன்று கல்களை வைத்தல், அக்ஷரபங்க்தி என்னும் நான்கு கல்களை வைத்தல், அதிச்சந்தம் என்னும் ஒரு கல்லை வைத்தல், த்விபதா என்னும் கல்களை வைத்தல் என்பது.

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

### நான்காம் அநுவாகம்.

எட்டுப் பஞ்சாதிகட்கு மேல் ஐந்து பதங்களைக் கொண்டது.

---

சந்தங்க ளென்னுஞ் செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

अग्निर्मूर्धा दिवः ककुत्पतिः पृथिव्या अयम् । अपाꣳ रेताꣳसि
जिन्वति । त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य
वाघतः । अयमग्निस्सहस्रिणो वाजस्य शतिनस्पतिः । मूर्धा कवी
रयीणाम् । भुवो यज्ञस्य रजसश्च नेता यत्रा नियुद्भिस्सचसे
शिवाभिः । दिवि मूर्धानं दधिषे सुवर्षां जिह्वामग्ने चकृषे हव्यवाहम् ।
अबोध्यग्निस्समिधा जनानाम् ॥ १ ॥ प्रति धेनुमिवायतीमुषासम् ।
यह्वा इव प्र वयामुज्जिहानाः प्र भानवस्सिस्रते नाकमच्छ । अबो
चाम कवये मेध्याय वचो वन्दारु वृषभाय वृष्णे । गविष्ठिरो नमसा
स्तोममग्नौ दिवीव रुक्ममुर्व्यञ्चमश्रेत् । जनस्य गोपा अजनिष्ट जा
गृविरग्निस्सुदक्षस्सुविताय नव्यसे । घृतप्रतीको बृहता दिविस्पृ-
शा द्युमद्विभाति भरतेभ्यश्शुचिः । त्वामग्ने अङ्गिरसः ॥ २ ॥ गुहा-
हितमन्वविन्दञ्छिश्रियाणं वनेवने । स जायसे मथ्यमानस्सहो मह-
त्त्वामाहुस्सहसस्पुत्रमङ्गिरः । यज्ञस्य केतुं प्रथमं पुरोहितमग्निन्नर-
स्त्रिषधस्थे समिन्धते । इन्द्रेण देवैस्सरथꣳ स बर्हिषि सीदन्नि होता
यजथाय सुक्रतुः । त्वां चित्रश्रवस्तम हवन्ते विक्षु जन्तवः । शोचि-
ष्केशं पुरुप्रियाग्ने हव्याय वोढवे । सखायस्संवस्सम्यञ्चमिषम् ॥

स्तोमंश्चाग्नये । वर्षिष्ठायक्षितीनामूर्जो नप्त्रे सहस्वते । सꣳसमि-
द्युवसे वृषन्नग्ने विश्वान्यर्य आ । इडस्पदे समिध्यसे सनो वसून्या-
भर । एनावो अग्निन्नमसोर्जोनपातमाहुवे । प्रियश्चेतिष्ठमरतिꣳस्व-
ध्वरं विश्वस्य दूतममृतम् । सयोजते अरुषो विश्वभोजसा सदुद्रव-
त्स्वाहुतः । सुब्रह्मा यज्ञस्सुशमी ॥ ४ ॥ वसूनान्देवꣳराधो जना-
नाम् । उदस्य शोचिरस्थादाजुह्वानस्य मीढुषः । उद्धूमासो अरु-
षासो दिविस्पृशस्समग्निमिन्धते नरः । अग्ने वाजस्य गोमत ईशा-
नस्सहसो यहो । अस्मेधेहि जातवेदो महिश्रवः । स इधानो वसु-
ष्कविरग्निरीडेन्यो गिरा । रेवदस्मभ्यं पुर्वणीकदीदिहि । क्षपो राज-
न्नुतत्मनाऽग्नेवस्तो रुतोषसः । सतिग्मजम्भ ॥ ५ ॥ रक्षसोदहप्रति ।
आते अग्न इधीमहिद्युमन्तन्देवाजरम् । यद्धस्यातेपनीयसी समिद्दीद-
यतिद्यवीषꣳस्तोतृभ्य आभर । आते अग्न ऋचाहविश्शुक्रस्य ज्यो-
तिषस्पते । सुश्चन्द्रदस्मविश्पते हव्यवाट् तुभ्यꣳहूयत इषꣳस्तोतृभ्य
आभर । उभे सुश्चन्द्रसर्पिषोदर्वी श्रीणीष आसनि । उतो न उत्पु-
पूर्याः ॥ ६ ॥ उक्थेषु शवसस्पत इषꣳस्तोतृभ्य आभर । अग्नेतम-
द्याश्वन्नस्तोमैः क्रतुन्न भद्रꣳहृदिस्पृशम् । ऋध्यामात ओहैः । अधा-
ह्यग्ने क्रतोर्भद्रस्य दक्षस्य साधोः । रथीर्ऋतस्य बृहतो बभूथ ।
आभिष्टे अद्यगीर्भिर्गृणन्तोऽग्ने दाशेम । प्रते दिवोनस्तनयन्ति शुष्माः।
एभिर्नो अर्कैर्भवानो अर्वाङ् ॥ ७ ॥ सुवर्नज्योतिः । अग्ने विश्वेभि-
स्सुमना अनीकैः । अग्निꣳहोतारं मन्येदास्वन्तं वसोस्सूनुꣳसहसो
जातवेदसम् । विप्रन्न जातवेदसम् । य ऊर्ध्वया स्वध्वरो देवो

देवाच्या कृपा । घृतस्य विभ्राष्टिमनु शुक्रशोचिष आजुह्वानस्य सर्पिषः । अग्ने त्वन्नो अन्तमः । उतत्राता शिवोभव वरूथ्यः । तन्त्वा शोचिष्ठ दीदिवः । सुम्नाय नूनमीमहे सखिभ्यः । वसुरग्नि-र्वसुश्रवाः । अच्छानक्षिद्युमत्तममोरयिन्दाः ॥ ८ ॥

மூன்றும் அநுவாகத்தில் சோடா என்பது முதலான செங்கல்கள் கூறப்பட்டன. இதில், சந்தங்கள் என்னுஞ் செங்கல் கூறப்படுகின்றன.

இனி, ஆறுவது 'உபசத்' தினத்தில், காலையில், பிரவர்க்கியம், உபசத் என்பவைகளைச் செய்த பிறகு, ஐந்தாவது அடுக்கில் பாக்கியுள்ள, 'யாக்ஞசேநீ' என்னும் அடுக்கை அடுக்குதல் வேண்டும்.

முதலில், மந்திரமின்றி செங்கலடுக்கின் மேல் ஏறிக் கொள்ளல் வேண்டும்.

---

கிழக்கில் வைக்க வேண்டிய காயத்திரிச் சந்த மென்னு மூன்று செங்கல்களுள்
(வி-1) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्निर्मूर्धा दिवः ककुत्पतिः पृथिव्या अयम् । अपाꣳ रेताꣳसि जिन्वति ।

என்பது.

உரை.

இவ் வக்கினி, இரவி வடிவால் சுவர்க்கத்திற்குத் தலை போன்றது. மண்ணுலகிலும், காய்தல், பக்குவஞ் செய்தல் முதலானவைகளால் பரிபாலிப்பதாகின்றது. மற்றும், நீரின் காரியமான தாவர சங்கம வுடம்புகளை, சாடராக்கினி வடிவால் இன்புறச் செய்கின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பதினைந்தாவது வரிசையில் முதலாவதாகிய சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-2) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्वामग्ने पुष्करादध्यथर्वा निरमन्थत । मूर्ध्नो विश्वस्य वाघतः ।

என்பது.

உரை

அக்கினியே! உன்னை, தலை போன்று போற்றத்தக்கதும், உலகைத் தாங்குவதுமாகிய தாமரை யிலையின் மீது, அதர்வரிஷி, இனிது கடைந்தெடுத்தனர் என்பது.

ஈண்டுத் தாமரையிலை, திக்கடையும் வேள்வி வாயிலாக உலகனைத்தையுந் தாங்குகின்ற தென்பதைக் காண்க.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பதினைந்தாவது வரிசையில் இரண்டாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-3) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अयमग्निस्सहस्रिणो वाजस्य शतिनस्पतिः । मूर्धाकवीरयीणाम् ।

என்பது.

உரை.

ஆயிரக் கணக்கானவைகளும், நூற்றுக் கணக்கானவைகளுமான உணவுப் பொருள்கட்கு இவ் வக்கினி, இறையாம். ஆதலின் தலைமையாம். அறிவுடைய இத்தகைய அக்கினி, தனங்களைக் கொடுப்பதாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பதினாறாவது வரிசையில், மூன்றாவது பாதச் செங்கலை வைத்தல வேண்டும் என்பதாம்.

---

தெற்கில் வைக்க வேண்டிய திருஷ்டுப்ச் செங்கல்கள் மூன்றனுள்

(வி-4) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

भुवो यज्ञस्य रजसश्चनेतायत्रा नियुद्भिस्सचसे शिवाभिः । दिवि मूर्धानन्दधिषे सुवर्षाञ्जिह्वामग्ने चकृषे हव्यवाहम् ।

என்பது.

உரை.

மண்ணுலகில் ஆசரிக்கும் வேள்விக்கும், செலுத்தும் ரசோ குணத்திற்கும் நியதாவாகிய அக்கினியே! நீ, எவ்வானுலகில், இரவியாகி இயற்கையாய் வந்து நிற்கின்றவைகளும், உத்தமங்களுமான குதிரைகளை இரதத்தில்

பூட்டுகின்றனையோ! அத்தகைய வானுலகில், சுவர்க்கத்தில் நிலைத்துள்ள தலைமை போன்று உயர்ந்த நிலைமையை யடைகின்றாய். மற்றும், அக்கினியே! நீ, இவ் வேள்வியில், அவிசைத் தாங்கும் நாக்காகிய சுவாலையை உண்டாக்கு கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென் பக்கத்துச் சிறகின் இரண்டாவது வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-5) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अबोध्यग्निस्समिधा जनानां प्रतिधेनुमिवायती मुषासम् । यह्वा इव प्रवयामुज्जिहानाः प्रभानवस्सिस्रते नाकमच्छ ।

என்பது.

உரை.

பசுச்சாலையில், காலையில் பசுக்களை எழுப்பி விடுவது போல், வேள்விச் செயலாளர்களின் சமித்துக்களால் அக்கினி எழுப்புவிக்கப் பெற்றது. எழுப்பிய அக்கினியின் சுவாலைகள், சுவர்க்கத்தையடைய மிக நன்றாய் மேலெழும்புகின்றன. எதைப்போலெனின்? பட்சிகளுக்குட் சிறந்த பட்சி மிக நன்றாய்ப் பறப்பது போன்றென்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-6) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अवोचाम कवये मेध्याय वचो वन्दारु वृषभाय वृष्णे । गविष्ठिरो नमसा स्तोममग्नौ दिवीव रुक्ममुर्व्यञ्चमश्रेत् ।

என்பது.

உரை

வேள்விக்குரியதும், சிறந்ததும், வேண்டியவற்றைப் பொழிவதும், பூமியில் நிலைத்ததும், கவித்தன்மை வாய்ந்த வித்வானுமாகிய அக்கினிக்கு, கீதத்தோடு கூடியதும், போற்றத் தக்கதுமாகிய வாக்கை யாம், சொல்கின்றோம்.

செங்கல்கள்)

சந்தியாவந்தன காலத்திற் சொல்லும் வாக்கியங்களை, விரிந்த வானில் உள்ள பரந்த வொளியுடைய இரவி ஏற்றுக் கொள்வது போல், அதை, அக்கினி ஏற்றுக்கொள்க என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி மூன்றாவது வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மேற்கில் வைக்க வேண்டிய சகதிச் சந்தக்கல்லுகள் மூன்றனுள்

(வி-7) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

जनस्य गोपा अजनिष्ट जागृविरग्निस्सुदक्षस्सुविताय नव्यसे । घृतप्रतीको बृहता दिविस्पृशाद्युमद्विभाति भरतेभ्यश्शुचिः ।

என்பது.

உரை

உயிர்களைப் பாதுகாப்பதும், மிகக் குசலமும், கருமத்தில் விழிப்புடையதும், வாயில் நெய்யையுடையதுமாகிய இவ்வக்கினி, துதிகளையுடைய கருமம் முடிவுறுதற் பொருட்டு உண்டாயிற்று. இத்தகைய அக்கினி, மிகப் பெரிதும், சுவர்க்கம் வரை செல்வதுமாகிய சுவாலைக் கூட்டத்தால் ஒளிரப் பெற்றதாய்ப் புனிதமுற்றுத் தாங்கும் எசமானன் முதலியோர்களின் பொருட்டு மிக ஒளிர்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலின் இரண்டாவது வரிசையில் நான்காவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-8) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्वामग्ने अङ्गिरसो गुहाहितमन्वविन्दञ्छिश्रियाणं वनेवने । सजायसे मथ्यमानस्सहो महत्त्वामाहुस्सहसस्पुत्रमङ्गिरः ।

என்பது.

உரை.

அக்கினியே! தீக்கடைக் கோல் முதலிய இரகசிய விடங்களில் இருப்பதும், ஒவ்வொரு வனத்திலும் தாவானல வடிவாய் இருப்பதுமாகிய உன்னை, அங்கிரச மகரிஷி இனிது கடைந்தனர். அத்தகைய நீ, போராற்றலால் கடையுமிடத்து உதிப்பாயாக. அங்ஙனமுள்ள அக்கினியே! உன்னை, வன்மையின் புதல்வனென்று கூறுகிறார்கள். வலிமையின் போராற்றல் கொண்டு கடையும்போது உதித்தலால் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-9) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

यज्ञस्य केतुं प्रथमं पुरोहितमग्निन्नरस्त्रिषधस्थे समिन्धते । इन्द्रेण
देवैस्सरथꣳ सबर्हिषि सीदन्निहोतायजथाय सुक्रतुः ।

என்பது.

உரை.

வேள்வியை யுணர்வதும், வேள்வித் தொடக்கத்திலேயே அடையப் பெற்றதுமாகிய அக்கினியை, வேள்விச் செயலாளர்கள், மூன்று குண்டங்களில் வைத்து வளர்க்கின்றார்கள். அழகிய வேள்வியைத் தோற்றுவிக்கும் அவ்வக்கினி, வேள்வியானது சித்தித்தற்பொருட்டு, தேவர்களை யழைப்பதாய் இந்திரனுடனும் தேவர்களுடனும் இவ் வேள்வியில் தேரின்மீதிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

வடக்கில் வைக்க வேண்டிய அநுஷ்டுப் செங்கல்லுகள் மூன்றனுள்
(வி-10) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

त्वाञ्चित्र श्रवस्तमहवन्ते विक्षुजन्तवः । शोचिष्केशंपुरुप्रियाग्ने हव्याय
वोढवे ।

என்பது.

உரை.

மிகப் பெரிய கீர்த்தியை யுடையதும், எசமானர்கட்குப் பிரிய முடையது மாகிய அக்கினியே! சுவாலைகளென்னும் தலைமயிர்களை யுடைய உன்னை, அவியைக் கொண்டு போதற் பொருட்டு, உயிர்களுக்குள் மனிதராய்ப் பிறந்தவர்கள் அழைக்கின்றார்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வடபக்கச் சிறகின் ஒன்பதாவது வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-11) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सखायस्संवस्सम्यञ्चमिषꣳ स्तोमञ्चाग्नये । वर्षिष्ठायक्षितीनाम् ऊर्जोनप्त्रे सहस्वते ।

என்பது.

உரை.

ஒருவர்க்கொருவர் நட்புடையவர்களாயின எசமான, வேள்விச் செயலாளர்களே! நீவிர், இனிய உணவைத் தேடிக் கொள்வீர்களாக. மற்றும், பாதுகாப்போர்களுக்குள் மிகப் பழைமையானதும், வன்மையைக் கெடுக்காததும், தானுகவே மிகுந்த வன்மையுடையதுமாகிய அக்கினியின் பொருட்டுத் துதிகளைத் தேடுவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி பத்தாம் வரிசையில மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-12) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सꣳसमिद्युवसे वृषन्नग्ने विश्वान्यर्य आ । इडस्पदे समिध्यसे सनो वसून्याभर ।

என்பது.

உரை

வேண்டியவற்றை யளிக்கும் அக்கினியே! நீ, பயன்களெல்லாவற்றையும் தேடி எசமானனிடத்திற் சேர்ப்பாயாக. ஈசரனுகிய நீ, மண் வேதியில்

(சந்தங்கள் என்னுந்

இனிது வளர்க்கப் பெறுகின்றாய். அத்தகைய பெரியோனாகிய நீ, எமக்கு மிகுந்த தனத்தைக் கொண்டு வந்து கொடுப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி பத்தாவது வரிசையில் நான்காவது சிறுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.



நடுவில் வைக்க வேண்டிய பிருகத் சந்தக்கல்லுகள் மூன்றனுள்

(வி-13) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

**एनावो अग्निन्नमसोर्जोनपातमाहुवे । प्रियञ्चे तिष्ठमरतिं स्वध्वरं विश्वस्यदूतममृतम् ।**

என்பது.

உரை

எசமான வேட்போர்களே! உங்களுடையதும், அன்னத்தைக் கெடுக்காததும், எசமானனுடைய பிரிய காரணமும், மிக நன்று புணர்வதும், எல்லா ஈகைகளை யுடையதுமாகிய அக்கினியை, வணக்கத்தோடு கூடிய யான் அழைக்கின்றேன். மற்றும், அக்கினி, நல்ல வேள்வியைத் தோற்றுவிப்பதும், உலகனைத்திற்கும் தூதன்போல் காரியங்களைச் செய்வதும், எல்லா வீட்டிலும் பக்குவ முதலானவற்றைச் செய்வதும், இறப்பிலாததுமாம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அன்ம எட்டாவது வரிசையில் முதலாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.



(வி-14) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

**सयोजते अरुषो विश्वभोजसा सदुद्रवत्स्वाहुतः । सुब्रह्मा यज्ञस्सुशमी वसूनान्देवं राधो जनानाम् ।**

என்பது.

உரை.

அவ் வக்கினி, தொடங்கிய கருமத்தைக் கூட்டிவைக்கின்றதும், எசமானனிடத்தில் அன்புடையதும், உலகை எரித்துண்பதுமாம். மற்றும், வேள்விச் செயலாளர்களால் நற்கருமத்தில் ஆகுதி செய்யப் பெற்றதும், அழகிய

, செங்கல்கள்)

வேள்விச் செயலாளனுகிய, அல்லது, மந்திரமாகிய பிரமனை யுடையதும், வேள்வியிற் போற்றத்தக்கதும், பாவத்தை முழுதும் நீக்குவதுமாகிய அவ்வக்கினி, வாழும் உயிர்களின் வியவகாரத்திற்குக் காரணமாகிய உணவைத் தேடுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி ஒன்பதாவது வரிசையில் முதலாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-15) மூன்றுவது கல்லை வைத்தல்

மந்திரம் :

उदस्य शोचिरस्थादाजुह्वानस्य मीढुषः । उद्धमासो अरुषासो दिविस्पृशः समग्निमिन्धते नरः ।

என்பது.

உரை.

யாண்டும் ஓமத்தைத் தோற்றுவிப்பதும், ஆகுதி மூலமாய் மழை பெய்விக்கும் வன்மையை யுடையதும், புகையோடெழுவதும், தன்புறுத்தாததும், வானை யளாவியதுமாகிய இவ்வக்கினியின் சுவாலை ஒளிவிட்டு எழும்புகின்றது. இவ் வாறும்படி வேள்விச் செயலாளர்கள் தீயை வளர்க்கின்றுர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென் பக்கத்துச் சிறகின் கடைசியிலுள்ள 'அப்யயம்' என்னுஞ் செங்கல்களுள் மூன்றுவதை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

உஷ்ணிக் சந்தக் கல்லுகள் மூன்றனுள்,

(வி-16) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्ने वाजस्य गोमत ईशानस्सहसो यहो । अस्मे धेहि जातवेदो महिश्रवः ।

என்பது.

உரை

ஆக்களுடன் கூடிய உணவிற்கு இறைவனும், வன்மைக்குப் புதல்வனும், தோன்றும் பொருளை யுணர்கின்றவனுமாகிய அக்கினியே! நீ, எமக்கு பெருங் கீர்த்தியைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி பத்தாவது வரிசையில் முதலாவது 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-17) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स इधानो वसुष्कविरग्निरीडेन्यो गिरा। रेवदस्मभ्यं पुर्वणीकदीदिहि।

என்பது.

உரை

பெருஞ் சைன்யத்தையுடைய அக்கினியே! நீ, எமக்கு, தனத்துடன் கூடிய வீடு நில முதலியவைகளைக் கொடுப்பாயாக. நீ எத்தன்மையனெனின்? வளர்க்கப் பெற்றவனும், நிவாசத்திற்குக் காரணனும், கவிஞனும், ஆதியில் வேள்வியைத் தொடங்குகின்றவனும், மந்திரமாகிய துதியால் போற்றத்தக்கவனுமாவாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்பக்கச் சிறகின் கடைசிச் செங்கல்களுள் நான்காவதாகிய 'அப்யயம்' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

(வி-18) மூன்ருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

क्षपो राजन्नुतत्मनाऽग्नेवस्तोरुतोषसः। सतिग्मजम्भ रक्षसोदहप्रति।

என்பது.

உரை.

அக்கினியே! நீ, பகலிலும், அதிகாலையிலுமுள்ள இராக்கதர்களை ஒழிப்பாயாக. ஒளி மிகுந்த அக்கினியே! உனது சேனைவாயிலாக ஒழிப்பதோடு நீயும் இராக்கதர்களை ஒழிப்பாயாக. கூரிய சுவாலைகளை யுடையோய்! அத்தகைய நீ இராக்கதர்களை எரித்து விடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசை பதினென்ருவதில் முதலாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

'பங்க்தி' என்னுஞ் செங்கல்லுகள் மூன்றனுள்

(வி-19) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आते अग्न इधीमहि द्युमन्तन्देवाजरम् । यद्धस्यातेपनीयसी समिद्दीद॰
यतिद्यवीषᳪस्तोतृभ्य आभर ।

என்பது.

உரை.

மூப்பு இல்லாத (கட்டிளமையுடைய) அக்கினி தேவ! உன்னை, நாற்புறமுஞ் சுவாலைகளையுடையதாக வளர்க்கின்றோம். அசேதனமாகிய சமித்து, உன்னை, நாடோறும் வளர்க்கின்றதெனின்? சேதனர்களான யாம் வளர்க்கின்றோம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? நீ, துதிப்போர்களுக்கு உணவைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், எட்டாவது ஆன்ம வரிசையில் ஐந்தாவதாகிய (கடைசி) சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-20) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आते अग्न ऋचाहविश्शुक्रस्य ज्योतिषस्पते । सुश्चन्द्रदस्मविश्पते हव्यवाद्‌-
तुभ्यᳪ हूयत इषᳪस्तोतृभ्य आभर ।

என்பது.

உரை

புநிதமாகிய ஒளியைப் பாதுகாப்பதும், மிகக் களிப்பை யுண்டாக்குவதும், பாவத்தைப் போக்குவதும், மக்களைப் பரிபாலிப்பதும், அவியைத் தாங்கிச் செல்வதுமாகிய அக்கினியே! உனக்கு, நாற்புறமும் அவிகள் ஓமஞ் செய்யப் படுகின்றன. நீ, வேள்விச் செயலாளர்கட்கு உணவுகளைத் தேடுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி ஒன்பதாவது வரிசையின் கடைசியாகிய சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-21) மூன்றாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

उभे सुश्चन्द्रसर्पिषो दर्वी श्रीणीष आसनि। उतो न उत्पुपूर्या उक्थेषु शवशस्पत इष॑स्तोतृभ्य आभर।

என்பது.

உரை.

அக்கினியே! களிப்பைக் கொடுக்கும் உனது முகத்தில், அகப்பைகள் போன்றுள்ள இரண்டு கன்னங்களும் நெய்யை வடிக்கின்றன. (வாய் நிறைய நெய் உண்ணல் அருந்தப் பெற்றது என்பதாம்.) வன்மைக்கிறைவ! சஸ்திரங்கள் என்னுந் துதிகளையுடைய வேள்விகளில் எம்மைச் சிறப்புடன் சேர்ப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி பத்தாவது வரிசையில் கடைசியாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

அட்சரபந்திகள் என்னும் மூன்றனுள்,

(வி-22) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्नेतमद्याश्वन्नस्तोमैः क्रतुन्न भद्र॑ हृदिस्पृशम्। ऋध्यामात ओहैः।

என்பது.

உரை.

அக்கினியே! உட்களிப்பையுடைய உன்னை, புல் முதலியவைகளால் குதிரையைத் தக்கதாய்ச் செய்வது போலும், எல்லா வேள்வி யநுட்டானங்களாலும் சோதிட்டோமம் என்னும் யாகத்தை தக்கதாய்ச் செய்வது போலவும் இக் கருமத்தில், உனது துதிமஞ்சரிகளால், தக்கோனாய்ச் செய்கின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வடபக்கச் சிறகின் மூன்றாவதாகிய அப்யயம் என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-23) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अधाह्यग्ने क्रतोर्भद्रस्य दक्षस्य साधोः । रथीर्ऋतस्य बृहतो बभूथ ।

என்பது.

உரை.

அக்கினியே! எமது துதியின்பின், மங்களமும், தனது பயனை யளிக்கும் வன்மை யுடையதும், கிரணங்களால் முடிவதும், உண்மைப் பயனுடையதும், பெரிதுமாகிய எனது வேள்விக் கருமத்திற்கு, தேருடையனுந் தன்மையை ஏற்றுக்கொள்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பதினோராவது ஆன்ம வரிசையில் கடைசியாகிய 'சோடசி' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-24) மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आभिष्टे अद्यगीर्भिर्गृणन्तोऽग्ने दाशेम । प्रते दिवोनस्तनयन्ति शुष्माः ।

என்பது.

உரை

அக்கினியே! உனக்கு இவ் வேள்விக்கருமத்தில், மந்திரங்களால் துதிக்கின்ற யாம் அவி கொடுக்கின்றோம். உனது சுவாலைகள், வானின் மேகம் போல், உன்னை ஒலிக்கச் செய்கின்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடபக்கச் சிறகின் நான்காவது அப்யயம் என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-25) மூன்றுவது கல்லை வைத்தலில் விகற்பம்.

மந்திரம் :

एभिर्नो अर्कैर्भवानो अर्वाङ् स्वर्णज्योतिः । अग्ने विश्वेभिस्सुमना अनीकैः ।

என்பது.

உரை.

அக்கினியே! எல்லாச் சைன்யங்களுடன் கூட நன்மனமுடையோனும், இப்போது செய்கின்ற எமது ஆராதனைகளால், சுவர்க்கத்தை விளக்கும் இரவியைப் போலவும், எமக்கருகில் வருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும் மேற்படி செங்கலை வைக்கலாம் என்பதாம்.

---

(வி-26) அதிச்சந்த மென்னுங் கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्निꣳ होतारं मन्ये दास्वन्तं वसोस्सूनुꣳ सहसो जातवेदसम् । विप्रन्न जातवेदसम् । य ऊर्ध्वया स्वध्वरो देवो देवाच्या कृपा । घृतस्य विभ्राष्टिमनुशुक्र शोचिष आजुह्वानस्य सर्पिषः ।

என்பது.

உரை.

தனத்தைக் கொடுப்பதும், வன்மையின் புதல்வனும், தோன்றியவற்றை யுணர்வதுமாகிய அக்கினியை, அந்தணர்கள் வேதத்திலுதித்தவனை அறிவாளி என்று எண்ணுவதுபோல, தேவர்களை யழைப்பது என்று எண்ணுகின்றார்கள். மிக வுயரமாய், தேவர்களை நோக்கிச் செல்கின்ற சுவாலைகளால் வேள்வியைத் தோற்றுவிக்கும் அக்கினி, புநிதமாகிய விளக்கமுடையதும், இடையறாது ஆகுதி செய்யப்படுவதும், ஒழுகுந் தன்மையுடையதுமாகிய நெய்யால் சிறப்பாக ஒளிர்கின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், எட்டாவது ஆன்ம வரிசையில் மூன்றாவதாகிய சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

துவிபத மென்னும் மூன்றனுள்

(வி-27) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्ने त्वन्नो अन्तमः । उतत्राता शिवो भव वरूथ्यः ।

என்பது.

உரை

அக்கினியே! நீ, எமக்கு, மிக அருகிலுள்ளதாய் ஆவாயாக. வீட்டில் நடோறும் சாந்நித்தியமா யிருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாலின் நான்காவது வரிசையில் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-28) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तन्त्वा शोचिष्ठ दीदिवः । सुम्नाय नूनमीमहे सखिभ्यः ।

என்பது.

உரை.

மிகப்புநிதமும், மிக ஒளிர்வதுமாகிய அக்கினியே! உன்னை, நண்பர்களான எமது நலத்தின் பொருட்டு யாம் அடைகின்றோம் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-29) மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वसुरग्निर्वसुश्रवाः । अच्छानक्षिद्युमत्तमोरयिन्दाः ।

என்பது.

உரை.

ஒளி மிகுந்ததும், தனத்தைக் கொடுப்பதும், தனத்தை யுடையதுமாகிய இவ் வக்கினி, உருத்திரன் முதலான தேவர்களால் அன்போடு கேட்கப்படுகின்றது. அத்தகைய அக்கினியே! நீ, தனது நோக்கை யடைவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றுவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இம் மூன்றையும் மூச்சு விடாமல் ஒழுங்காக வைத்தல் வேண்டு மென்பதை யுணர்க.

நான்காம் அநுவாகம் முற்றிற்று.

---

ஐந்தாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

इन्द्रेति सयुजस्त्वष्टा चाघारादिपदेष्वपि ।
अनुषङ्गस्स्येति तथाऽम्बा इत्यष्टौ मता: ॥ १ ॥
अम्बेति कृत्तिका: सप्तनामासीत्यनुषज्यते ।
पृथिव्रि भिर्मण्डलाख्या मन्त्रा अष्टादशेरिता: ॥ २ ॥

'சயுக்கு' என்னும் எட்டுக் கல்லுகளை வைத்தல், கிருத்திகை என்னும் ஏழு கல்லுகளை வைத்தல், மண்டலம் என்னும் மூன்று கல்லுகளை வைத்தல் என்பது.

---

நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

ஐந்தாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

---

'சயுக்' என்னுஞ் செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

इन्द्राग्निभ्यां त्वास युजा युजा युनज्म्याघाराभ्यान्तेजसा
वर्चसोक्थेभिस्स्तोमेभिश्छन्दोभीरय्यैपोषाय सजातानां मध्यमस्थे
याय मया त्वास युजा युजा युनज्म्यम्बादुलानितत्निरभ्रयन्ती
मेघयन्ती वर्षयन्ती चुपुणीकानामासि प्रजापतिना त्वा विश्वाभि-
र्धीभिरुपदधामि पृथिव्युदपुरमन्नेनविष्टा मनुष्यास्ते गोप्तारोऽग्नि-
र्वियत्तोऽस्यान्तामहं प्रपद्येसा ॥ १ ॥ मे शर्मचवर्मचास्त्वधिद्यौर-
न्तरिक्षं ब्रह्मणाविष्टा मरुतस्ते गोप्तारो वायुर्वियत्तोऽस्यान्तामहं
प्रपद्येसामे शर्मचवर्मचास्तु द्यौरपराजिताऽमृतेन विष्टाऽऽदित्यास्ते
गोप्तारस्सूर्यो वियत्तोऽस्यान्तामहं प्रपद्ये सामे शर्मचवर्मचास्तु ॥ २ ॥

நான்காம் அநுவாகத்தில் சந்தச் செங்கல்கள் வைக்கும் முறை கூறப்பட்டது. இதில், 'சயுக்' என்பது முதலிய செங்கல்கள் கூறப்படுகின்றன.

---

சயுக் என்னும் எட்டனுள்

(வி-1) முதலாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

इन्द्राग्निभ्यां त्वा सयुजा युजा युनज्मि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, இந்திர அக்கினிகளுடன் கூட்டி வைக்கும் சம்பந்தத்தால் இங்குச் சேர்த்து வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தென்பக்கத்துச் சிறகின் நடுவிலுள்ள ஆறுவது வரிசையில் முதலாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்,

---

(வி-2) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आघाराभ्यां ।

என்பது.

உரை.

இம் மந்திரத்துடன், ஆகார ஆகுதிகளுடன் கூட்டி வைக்கும் சம்பந்தத்தால் முன் மந்திரத்திலுள்ள 'त्वा सयुजा युजा युनज्मि' என்னு மந்திரத்தையுஞ் சேர்த்துக்கொண்டு, மேற்படி நடுவரிசையில் இரண்டாவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-3) மூன்ருவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

तेजसा ।

என்பது.

உரை

அழகுடன் கூட்டிவைக்கும் சம்பந்தத்தால் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், முன்போலச் சேர்த்துக்கொண்டு, மேற்படி நடுவரிசையில் மூன்ருவது செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-4) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वर्चसा ।

என்பது.

உரை

தனத்துடன் கூட்டிவைக்கும் சம்பந்தங்களால் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், முன்போற் சேர்த்துக்கொண்டு, மேற்படி சிறகின் ஏழாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-5) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

शस्त्रेभिः ।

என்பது.

உரை.

சஸ்திரங்களென்னுந் துதிகளுடன் கூட்டி வைக்குஞ் சம்பந்தங்களால் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், முன்போற் சேர்த்துக்கொண்டு, மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-6) ஆறுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स्तोमेभिः ।

என்பது.

உரை.

ஸ்தோத்திரங்களுடன் கூட்டி வைக்குஞ் சம்பந்தங்களால் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், முன்போற் சேர்த்துக்கொண்டு, மேற்படி வரிசையில் மூன்றுவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-7) ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

छन्दोभिः ।

என்பது.

உரை.

*சந்தங்களுள் கூட்டி வைக்குஞ் சம்பந்தங்களால் என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்துடன், முன்போற் சொற்களைச் சேர்த்துக்கொண்டு மேற்படி எட்டாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கல்லை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

(வி-8) எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

रय्यै पोषाय सजातानां मध्यमस्थेयायमया त्वास युजा युजा युनज्मि ।

என்பது.

உரை

*செங்கலே! உன்னை, தனத்தின் பொருட்டும், உறுதியின் பொருட்டும், சுற்றத்தார்களுக்குள் தலைமையா யிருத்தற் பொருட்டும் என்னுடன் கூட்டி வைக்கும் சம்பந்தத்தால் இங்கு வைக்கின்றேன் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

*ஈண்டுச் சூத்திரப்படி, 'ஜீமூதம்' என்னும் ஐந்து மந்திரங்களுள், 'रोहितेषु' என்பது முதலிய முதல் மந்திரத்தால் மேற்படி எட்டாவது வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'अरुणेषु' என்பது முதலிய இரண்டாவது மந்திரத்தால், மேற்படி ஒன்பதாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'कृष्णेषु' என்பது முதலிய மூன்றா மந்திரத்தால் மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'नीलेषु' என்பது முதலிய நான்கா மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

*'सितेषु' என்பது முதலிய ஐந்தா மந்திரத்தால் மேற்படி பத்தாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.*

கிருத்திகைகள் என்னும் ஏழு செங்கல்களுள்.

(வி-9) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'अम्बा' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை

செங்கலே! நீ 'அம்பா' என்னுங் கிருத்திகை வடிவாயிருக்கின்றாய். அத்தகைய உன்னை, பிரசாபதியால் ஏவப்பட்ட எமது புத்திகளினைத்தாலும் வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி பத்தாவது வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம். இதில், 'नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि' என்னும் இம் மந்திரத்தின் சுற்றிலுள்ளதை முதலாவது பகத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவ்வாறே மேல்வரும் மந்திரங்களிலுஞ் சேர்த்துக் கொள்ளல் வேண்டும் என்பதை யுணர்க.

---

(வி-10) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'दुला' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை.

இதில் துலா என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-11) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'नितत्निः' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை

இதில் 'நிதத்தினி' என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி பதினோராவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல்வேண்டு மென்பதாம்.

(வி-12) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'अभ्रयन्ती' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை

இதில் 'அப்ரயந்தி' என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-13) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'मेघयन्ती' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை

இதில் 'மேகயந்தி' என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-14) ஆறுவது கல்லை வைத்தல்

மந்திரம் :

'वर्षयन्ती' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை.

இதில் 'வர்ஷயந்தீ' என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-15) ஏழாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

'चुपुणीका' नामासि प्रजापतिना त्वा विश्वाभिर्धीभिरुपदधामि ।

என்பது.

உரை

இதில் 'சுபுணிகா' என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்படி சிறகில் சுற்றிலுள்ள இரண்டாவது 'அப்யயம்' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

'மண்டலம்' என்னும் மூன்றனுள்

(வி-16) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पृथिव्युदपुरमन्नेन विष्टा मनुष्यास्ते गोप्तारोऽग्निर्वियत्तोऽस्यान्तामहं
प्रपद्ये सामे शर्मच वर्मचास्तु ।

என்பது.

உரை.

செங்கலே! உணவுப் பொருளால் நிறையப்பெற்ற பூமி, நீரால் நிறைந்திருக்கிறது. மக்கள் உனது பாதுகாப்பாளர். இப் பூமியில் அக்கினி நன்கு பாதுகாக்க முயன்றது. அந்தப் பூமி வடிவாகிய செங்கலே! உன்னை யான் அடைந்துள்ளேன். அத்தகைய செங்கல் எனது தலைவனுடைய இல்லமாகுக. பாதுகாக்கும் கவசமுமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலாவது செங்கல் அடுக்கின் நான்காவது வரிசையில் மூன்றாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இது முன் விநியோகிக்கப்பட்டது.

(வி-17) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अधिद्यौरन्तरिक्षं ब्रह्मणा विष्टा मरुतस्ते गोप्तारो वायुर्वियत्तोऽस्यान्तामहं प्रपद्ये सामे शर्मच वर्मचास्तु ।

என்பது.

உரை.

செங்கலே ! நெருங்கிய சனங்களால் நிறையப் பெற்ற அந்தரிட்சம், சுவர்க்கத்திலுஞ் சிறந்தது. மக்கள் உனது பாதுகாப்பாளர் என்பது விசேடம். மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றுவது அடுக்கின் நான்காவது வரிசையில் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இது, முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-18) மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

द्यौरपराजिताऽमृतेन विष्टाऽऽदित्यास्ते गोप्तारस्सूर्यो वियत्तोऽस्यान्तामहं प्रपद्ये सामे शर्मच वर्मचास्तु ।

என்பது.

உரை.

செங்கலே ! சுவர்க்கம் அமுதத்தால் நிறையப் பெற்றது. உனது பாதுகாப்பு, பிறரால் வெல்லமுடியாதது. ஆதித்தர்களுள் முக்கியமானவன் சூரியன் என்பது. ஏனையவை முன் போன்றன.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஐந்தாவது அடுக்கின் ஏழாவது வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இது, முன் விநியோகிக்கப்பட்டது.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## ஆறும் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

बृह विश्वमजेत्येता विश्वज्योतिष ईरिताः ।
पुरो वृष्टिसनीः पञ्च ह्यग्नेः संयानिकाष्टकम् ॥ १ ॥
सत्यादित्येष्टका अष्टा वृचे पञ्च घृतेष्टकाः ।
यशः पञ्च यशोदाः स्युः सादयाम्यनुपठ्यते ॥ २ ॥
षष्ठानुवाके संप्रोक्ताश्चतुस्त्रिंशत्तु मन्त्रकाः ।

*விசுவஜ்யோதிகள், என்னும் மூன்று கல்களை வைத்தல். விருஷ்டிசனி என்னும் ஐந்து கல்களை வைத்தல். சம்யானி என்னும் எட்டுக்கல்களை வைத்தல். ஆதித்தியம் என்னும் எட்டுக்கல்களை வைத்தல். கிருதேஷ்டகா என்னும் ஐந்து நெய்க்கட்டிகளை வைத்தல். எசோதா என்னும் ஐந்து கல்களை வைத்தல் என்பது.*

---

நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம

ஆறும் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

விசுவசோதி முதலிய செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

बृहस्पतिस्त्वा सादयतु पृथिव्याः पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणायापानाय विश्वञ्ज्योतिर्यच्छाग्निस्तेऽधिपतिर्विश्वकर्मा त्वा सादयत्वन्तरिक्षस्य पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणायापानाय विश्वञ्ज्योतिर्यच्छ वायुस्तेऽधिपतिः प्रजापतिस्त्वा सादयतु दिवः पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणायापानाय विश्वञ्ज्योतिर्यच्छ परमेष्ठी तेऽधिपतिः पुरोवातसनिरस्यभ्रसनिरसि विद्युत्सनिः ॥ १ ॥ असि स्तनयित्नुसनिरसि वृष्टिसनिरस्यग्नेर्यान्यसि देवानामग्नेयान्यसि वायोर्यान्यसि देवानां वायोयान्यस्यन्तरिक्षस्य यान्यसि देवाना-

मन्तरिक्षयान्यंस्यन्तरिंक्षमस्यन्तरिंक्षायत्वा सलिलायंत्वा सर्णाका-
यत्वा सतींकायत्वा केतांयत्वा प्रचेंतसेत्वा विवंस्वतेत्वा दिवस्त्वा
ज्योतिंष आदित्येभ्यंस्त्ववर्चेत्वां रुचेत्वांद्युतेत्वां भासेत्वा ज्योतिंषे त्वा
यशोदान्त्वा यशंसि तेजोदान्त्वा तेजंसि पयोदान्त्वा पयंसि
वर्चोदान्त्वा वर्चंसि द्रविणोदान्त्वा द्रविंणे सादयामि तेनार्षिणातेन
ब्रह्मणा तयां देवतंयाऽङ्गिरस्वद्ध्रुवासींद ॥ २ ॥

ஐந்தாம் அநுவாகத்தில் 'சயுக்' என்பது முதலிய செங்கல்கள் கூறப்பட்டன. இதில் விசுவச்சோதி என்பது முதலான செங்கல்கள் கூறப்படுகின்றன.

---

விசுவசோதி என்னும் மூன்றனுள்

(வி-1) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

बृहस्पतिस्त्वा सादयतु पृथिव्याः पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणाया-
पानाय विश्वञ्ज्योतिर्यच्छाग्निस्तेऽधिपतिः ।

என்பது.

உரை.

செங்கலே! ஒளியுடையதாகிய உன்னை, பிருகற்பதியானவர் பிராணிகளின் பிராண அபான விருத்திகளின் பொருட்டுப் பூமியின் மேல் வைப்பாராக. நீ சுவர்க்கத்தை விளக்கும் முழுப் பிரகாசத்தையும் நியமிப்பாயாக. உன்னை, அக்கினி பரிபாலிப்பாராக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலாவது செங்கலடுக்கின் ஐந்தாவது வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இது முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-2) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विश्वकर्मात्वा सादयत्वन्तरिक्षस्य पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणाया-
पानाय विश्वञ्ज्योतिर्यच्छ वायुस्तेऽधिपतिः ।

என்பது.

உரை.

செங்கலே! விசுவகர்மா, உன்னை, பிராண அபானன் பொருட்டு சுவர்க்கத்தினின்று மேலுலகமாகிய அந்தரிக்ஷத்தில் வைப்பாராக. அது உனது பட்டினமாம்; அதற்கு முழுச் சோதியை யளிப்பாயாக. வாயு உன்னைப் பாதுகாப்பாராக மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றாவது செங்கலடுக்கில் ஏழாவது வரிசையில் முதலாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது

---

(வி-3) மூன்றுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रजापतिस्त्वा सादयतु दिवः पृष्ठे ज्योतिष्मतीं विश्वस्मै प्राणायापानाय
विश्वं ज्योतिर्यच्छ परमेष्ठी तेऽधिपतिः ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, பிரசாபதி பிராணன்; அபானன் பொருட்டு சுவர்க்கத்தில் வைப்பாராக. அது உனது பட்டினம்; அதற்கு முழுச் சோதியை நியமிப்பாயாக. பரமேஷ்டி உன்னைப் பாதுகாப்பாராக. மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஐந்தாவது செங்கலடுக்கின் ஏழாவது வரிசையில் ஒன்பதாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம். இது முன் விநியோகிக்கப்பட்டது.

---

விருஷ்டிசனி என்னும் ஐந்தனுள்

(வி-4) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पुरोवात सनिरसि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, மழை பெய்வதற்கு முன் வீசும் காற்றைக் கொடுப்பதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு, பாதச் செங்கலை கையில் எடுத்துக் கொண்டு செங்க லடுக்கை வலம் வந்து, அக் கல்லை, பதினாறும் வரிசையில் முதலாவதாக வைத் தல் வேண்டு மென்பதாம்.

(வி-5) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अम्भसनिरसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, கறுத்த மேகத்தைக் கொடுப்பதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு, சிறகுச் செங்கல்லைக் கையில் எடுத்துக்கொண்டு முன்போல் வலம் வந்து, அக் கல்லை தென் பக்கச் சிறகின் முதல் வரிசையில் நான்காவதாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-6) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विद्युत्सनिरसि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, மின்னலைக் கொடுக்கின்றதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு, பாதச் செங்கலை கையில் எடுத்துக்கொண்டு முன் போல் வலம் வந்து, அக் கல்லை, வாலின் முதல் வரிசையில் ஐந்தாவதாக வைத் தல் வேண்டு மென்பதாம்.

(வி-7) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

स्तनयित्नुसनिरसि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, இடியைக் கொடுக்கின்றதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு, சிறகுச் செங்கலை கையில் எடுத்துக் கொண்டு முன்போல் வலம் வந்து, அக் கல்லை, வடபக்கச் சிறகின் பதினோராவது வரிசையில் நான்காவதாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-8) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

वृष्टिसनिरसि ।

என்பது.

உரை.

செங்கலே ! நீ, மழையைக் கொடுப்பதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஒரு, சோடசிச் செங்கலை கையில் எடுத்துக் கொண்டு முன்போல் வலம் வந்து, அக் கல்லை, எட்டாவது வரிசையில் இரண்டாவதாக வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

சம்யாநி என்னும் எட்டனுள்

(வி-9) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्नेर्यान्यसि ।

என்பது.

உரை.

செங்கலே ! நீ, செங்கல்களின் அடுக்கு வடிவமாகிய தீயை அடைவிப்பதாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முதல் அடுக்கின் பதின்மூன்றாவது வரிசையில் மூன்றாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இது முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-10) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

देवानामग्नेयान्यसि ।

என்பது.

செங்கல்கள்)

உரை

செங்கலே! நீ, 'அக்கினியே! நீ, தேவர்களை யடைவிப்பதா யிருக்கின்றாய்' என்னுஞ் சொல்லைக் கொண்டதாகிய தேவர்களுடைய சம்பந்த முடையதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலடுக்கின் பதினொன்காவது வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப் பட்டது.

---

(வி-11) மூன்றாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

वायोर्यन्यसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, வாயுவை அடைவிப்பதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாவது செங்கல் அடுக்கில் ஆன்ம வரிசைகளுள் ஐந்தாவதில் ஐந்தாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-12) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

देवानां वायो यान्यसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, 'வாயுவே! நீ தேவர்களை அடைவிப்பதாக இருக்கின்றாய்' என்னுஞ் சொல்லைக் கொண்டதாகிய தேவர்களின் சம்பந்த முடையதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இரண்டாவது அடுக்கின் ஐந்தாவது ஆன்ம வரிசையில் ஆறாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

(வி-13) ஐந்தாவது கல்லே வைத்தல்

மந்திரம் :

अन्तरिक्षस्य यान्यसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, அந்தரிட்சத்தை யடைவிப்பதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றாவது அடுக்கின் ஏழாவது வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-14) ஆறாவது கல்லே வைத்தல்.

மந்திரம் :

देवानामन्तरिक्ष यान्यसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, தேவர்களை யடைவிப்பதாயிருக்கின்றாய் என்னுந் தேவ சம்பந்தமுடையதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், மூன்றாவது அடுக்கின் ஏழாவது வரிசையில் மூன்றாவது பாதச் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

(வி-15) ஏழாவது கல்லே வைத்தல்.

மந்திரம் :

अन्तरिक्षमसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, அந்தரிட்சமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நான்காவது அடுக்கின் ஆன்ம வரிசைகளுள் மூன்றாவதில் நான்காவது சோடசி என்னுஞ் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

(வி-16) எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अन्तरिक्षायत्वा ।

என்பது.

உரை.

அந்தரிட்சமானது பிரிதி யடைதற்பொருட்டு உன்னை வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், [illegible]
முன் [illegible]

ஆதித்தியம் என்னும் எட்டனுள்

(வி-17) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सलिलायत्वा ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, சருகு முதலியவைகள் விழுந்து அழுகிக் கிடக்குந் தண்ணீராய் இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இவ்வைந்தாவது அடுக்கின் நான்காவது வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

(வி-18) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सर्णिकायत्वा ।

என்பது.

உரை

செங்கலே! நீ, ஓடுந் தண்ணீர் வடிவாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

(ஆதித்யம் என்னுஞ்

(வி-19) மூன்றுவது கல்லை வைத்தல்

மந்திரம் :

सतीकायत्वा ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, ஓடுந் தண்ணீருக்குள் நடுவில் பள்ளத்தில் தங்கி நிற்குந் தண்ணீரா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி ஐந்தாவது வரிசையில் முதலாவது பாதச் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-20) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

क्रेतायत्वा ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, ஞானத்தின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-21) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्रचेतसेत्वा ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை உண்மை ஞானத்தின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றுவது பாதச் செங்கலே வைத்தல் வேண்டு மென்பதாம்.

(வி-22) ஆறுவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विव्रस्वते॑त्वा ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, இனிது வசித்தற்குக் காரணமாகிய சூரிய வொளியின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-23) ஏழாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

दिवस्त्वा ज्योतिषे ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, வானிலுள்ள நட்சத்திர முதலிய ஒளிகளின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-24) எட்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आदित्येभ्यस्त्वा ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, ஆதித்தர்களின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆறுவது வரிசையில் முதலாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

கிருதம் என்னும் ஐந்தனுள்

(வி-25) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ऋचेत्वा ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, கலை அடி முதலியவைகளையுடைய மந்திரமாகிய ஆதியின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தானாகவே உறைந்துள்ள கட்டி நெய்யை எடுத்துக் கொண்டு, செங்கலடுக்கை வலம் வந்து அக்கட்டி நெய்யை செங்கலடுக்கின் கீழ்ப் பக்கத்தில் உரிய இடத்தில் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-26-27-28-29) மற்றும், நான்கு நெய்க்கட்டிகளை வைத்தல்.

மந்திரம் :

रुचेत्वा, द्युतेत्वा, भासेत्वा, ज्योतिषेत्वा ।

என்பது.

உரை.

நெய்க்கட்டிகளே! உன்னை, ஆதித்தஒளி, சந்திரஒளி, நட்சத்திர வொளி என்பவைகளின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், மேற்படி செங்கலடுக்கின் தெற்குப்பக்கம், மேற்குப்பக்கம், வடபக்கம், என்னும் பக்கங்களிலும், நடுவிலும் முறையாய் நான்கு நெய்க்கட்டிகளையும் வலம் வந்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

எசோதா என்னும் இக்தனுள்

(வி-30) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'यशोदान्त्वा यशसि' सादयामि तेनार्षेणा तेन ब्रह्मणा तया देवतया-ऽङ्गिरस्वध्रुवासीद ।

என்பது.

உரை.

செங்கலே! கீர்த்தியைக் கொடுக்கும் உன்னை கீர்த்தியின் பொருட்டு வைக்கின்றேன்- நீ அங்கிருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆறாவது வரிசையில் இரண்டாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

யசோதா என்னுஞ் செங்கல்கள்)

(வி-31) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'तेजोदान्त्वा तेजसि' सादयामि तेनर्षिणा तेन ब्रह्मणा तया देवतया-ऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை.

செங்கலே! அழகைக் கொடுக்கின்ற உன்னை, அழகின் பொருட்டு வைக்கின்றேன். நீ அங்கிருப்பாயாக. முன்போற் சேர்த்துக்கொள்ளல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது கோடிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

—

(வி-32) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'पयोदान्त्वा पयसि' सादयामि तेनर्षिणा तेन ब्रह्मणा तया देवत-याऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை

செங்கலே! பாலைக் கொடுக்கும் உன்னை, பாலின் பொருட்டு வைக்கின்றேன். முன்போற் சேர்த்துக்கொள்ளல் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஏழாவது வரிசையில் ஐந்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

—

(வி-33) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'वर्चोदान्त्वा वर्चसि' सादयामि तेनर्षिणा तेन ब्रह्मणा तया देवतयाऽङ्गिरस्वद्ध्रुवासीद ।

என்பது.

உரை

செங்கலே! வன்மையை யளிக்கும் உன்னை, வன்மையின் பொருட்டு வைக்கின்றேன். முன்போற் சேர்த்துக் கொள்ளுதல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஏழாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

(வி-34) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

'द्रविणोदान्त्वा द्रविणे' सादयामि तेनर्षिणा तेन ब्रह्मणातया
देवतयाऽङ्गिरस्वध्रुवासीद ।

*என்பது.*

உரை

*செங்கலே! தனத்தைக் கொடுக்கும் உன்னை, தனத்தின் பொருட்டு வைக்கின்றேன். முன்போற் சேர்ந்துக் கொள்ளுதல் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எட்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

ஆறும் அநுவாகம் முற்றிற்று.

---

*ஏழாம் அநுவாகம்.*

விடயச் சுருக்கம்.

भूयो भूयस्कृतः पञ्च पञ्चाप्स्वथ्यग्नि रूपकाः ।
पृथिपञ्च द्रविणोदाः प्राणमायुष्यकास्तु षट् ॥ १ ॥
अग्नेऽग्ने: हृदयंप्रोक्तं यावाः सप्तऋतव्यकाः ।
अनुवाके सप्तमेऽस्मिन्ने कोनत्रिंशदीरिताः ॥ २ ॥

*பூயஸ்கிருத் என்னும் ஐந்து கல்களை வைத்தல், அக்கினி ரூபம் என்னும் ஐந்து கல்களை வைத்தல், திரவிணோதம் என்னும் ஐந்து கல்களை வைத்தல், ஆயுஷ்யம் என்னும் ஆறு கல்களை வைத்தல், அக்கினி இருதயம் என்னும் ஒரு கல்லை வைத்தல், ருதவ்யம் என்னும் ஏழு கல்களை வைத்தல் என்பது.*

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

## ஏழாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

---

பூயஸ்கிருத் என்பது முதலிய செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

भूयस्कृदसि वरिवस्कृदसि प्राच्यस्यूर्ध्वाऽस्यन्तरिक्षसदस्य-
न्तरिक्षे सीदाप्सुषदसि श्येनसदसि गृध्रसदसि सुपर्णसदसि नाक-
सदसि पृथिव्यास्त्वा द्रविणे सादयाम्यन्तरिक्षस्य त्वा द्रविणे साद-
यामि दिवस्त्वा द्रविणे सादयामि दिशान्त्वा द्रविणे सादयामि
द्रविणोदान्त्वा द्रविणे सादयामि प्राणंमे पाह्यपानं मे पाहि व्यानं
मे ॥ १ ॥ पाह्यायुर्मे पाहि विश्वायुर्मे पाहि सर्वायुर्मे पाह्यग्ने यत्ते
परं हृन्नाम तावेहि सं रभावहै पाञ्चजन्येष्वप्येध्यग्ने यावा अयावा
एवा ऊमास्सब्दस्सगरस्सुमेकः ॥ २ ॥

*ஆறு மநுவாகத்தில் 'விசுவச்சோதி' என்பது முதலிய செங்கல்கள் கூறப்பட்டன. இதில், 'பூயஸ்கிருத்' என்பது முதலிய செங்கல்கள் கூறப்படுகின்றன.*

---

பூயஸ்கிருத் என்னும் ஐந்தனுள்

(வி-1) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

भूयस्कृदसि ।

காண்டம்.

**உரை.**

*செங்கலே! நீ, மிகுதியாகிய செய்கையையுடையதாயிருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஆறாவது வரிசையில் நான்காவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

(பூயஸ்கிருத் என்னுஞ் செங்கல்கள்

(வி-2) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

चरियस्कृदसि ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, மண்ணுலகில், போற்றுந் தன்மையைச் செய்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், ஏழாவது வரிசையில் பத்தாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

(வி-3) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्राच्यसि ।

என்பது.

உரை

*செங்கலே! நீ, கிழக்காக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பதினோராவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

(வி-4) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ऊर्ध्वासि ।

என்பது.

உரை

*செங்கலே! நீ, மேல் திக்காக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், வடபக்கச் சிறகின் முதலாவது அப்யயம் என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

(வி-5) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अन्तरिक्षसदस्यन्तरिक्षेसीद ।

என்பது.

உரை

செங்கலே! நீ, அந்தரிட்சத்தின் சபையாக இருக்கின்றாய். அந்தரிக்ஷத்தில் இருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது 'அப்யயம்' என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

அக்கினியின் உருவங்கள் என்னும் ஐந்தனுள்

(வி-6) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம்:

अप्सुषदसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, தண்ணீரிலுள்ள தீ வடிவாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வடபக்கச் சிறகின் முதல் வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-7) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம்:

श्येनसदसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, மருந்தாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-8) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம்:

गृध्रसदसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, 'கிருத்ரம்' என்னும் பறவையா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-9) நான்காவது கல்லை வைத்தல்

மந்திரம் :

सुपर्णसदसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, 'சுபர்ணம்' என்னும் பறவை வடிவாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, அவ்வப் பறவைகளில் உள்ள அக்கினியை அவ்வப் பறவைகளாய்க் கூறப்பட்டிருக்கின்றது என்பதை யுணர்க.

---

(வி-10) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

नाकसदसि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, சுவர்க்கத்திலுள்ள அக்கினி வடிவாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

திரவிணோதா என்னும் ஐந்தனுள்

(வி-11) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

पृथिव्यास्त्वा द्रविणे सादयामि ।

என்பது.

திரவிணே நா என்னுஞ் செங்கல்கள்)

உரை.

செங்கலே! பூமியைப்பற்றிய தனத்தின் பொருட்டு உன்னை வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி இரண்டாவது வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-12) இரண்டாவது கல்லை வைத்தல்

மந்திரம் :

अन्तरिक्षस्यत्वा द्रविणे सादयामि ।

என்பது.

உரை

செங்கலே! உன்னை, அந்தரிட்சத்தைப்பற்றிய தனத்தின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-13) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

दिवस्त्वा द्रविणे सादयामि ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, சுவர்க்கத்திலுள்ள தனத்தின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-14) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

दिशां त्वा द्रविणे सादयामि ।

என்பது.

உரை.

செங்கலே! உன்னை, திசைகளிலுள்ள தனத்தின் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி மூன்றாவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-15) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

द्रविणोदान्त्वा द्रविणे सादयामि ।

என்பது.

உரை.

செங்கலே! தனத்தைக் கொடுக்கும் உன்னை, எல்லாத் தனங்களையுங் கொடுத்தற் பொருட்டு வைக்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

ஆயுள்கள் என்னும் ஆறனுள்

(வி-16) முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

प्राणं मे पाहि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, எனது பிராணனைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-17) இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

अपानं मे पाहि ।

என்பது.

தீரவினோதா என்னுஞ் செங்கல்கள்)

உரை.

செங்கலே! நீ, எனது அபானனைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

(வி-18) மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

व्यानं मे पाहि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, எனது வியானனைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி நான்காவது வரிசையில் முதலாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

(வி-19) நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

आयुर्मे पाहि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, எனது ஆயுளைப் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்

---

(வி-20) ஐந்தாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

विश्वायुर्मे पाहि ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, எனது ஆயுள் முழுவதையும் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-21) ஆறாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

सर्वायुर्मे पाहि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, எனது புத்திரன் முதலான எல்லாச் சுற்றத்தார்களின் ஆயுளையும் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(வி-22) அக்கினியின் இருதயம் என்னும் கல்லை வைத்தல்.

மந்திரம் :

अग्ने यत्ते परꣳ हृन्नाम तावेहि सꣳ रभावहै पाञ्चजन्येष्वप्येध्यग्ने ।

என்பது.

உரை

அக்கினியே! 'பாவம் போக்கி' என்னும் சிறந்த நாமமுடைய நீ, எம்மிடம் வருவாயாக. நாமிருவருங் கலந்து செய்வோம். அக்கினியே! நீ, ஐந்து செங்கல் அடுக்குகளிலும் இருப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசை பதினோராவதில் மூன்றாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ரிதவ்யம் என்னும்

(வி-23.........29) ஏழு செங்கல்களை வைத்தல்.

மந்திரம் :

'यावाः' 'अयावाः' 'एवाः' 'ऊमाः' 'सब्दः' 'सगरः' 'सुमेकः' ।

என்பது.

ரிதவ்யம் என்னுஞ் செங்கல்கள்)

உரை.

செங்கல்களே! நீங்கள், வசந்தகால முதலிய ஆறு இருதுக்களாகவும், வருடமாகவும் இருக்கின்றீர்கள் என்பது. யவா, என்பது முதலியன ஆறு களின் பெயர்கள். சுமேகம் = வருடம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையே, வடதுபக்ஷச் சிறகின் ஐந்தாம் வரிசையில், ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு சிறகுச் செங்கல்களையும், ஆறுவது வரிசையில், முதலாவது, இரண்டாவது மூன்றுவது நடுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டு மென்பதாம்.

எழாம் அநுவாகம் முற்றிற்று.

---

இனி, சூத்திரத்தைத் தழுவிச் செய்யும் முறை வருமாறு:—

'विश्वकर्मा' என்பது முதலிய மந்திரத்தால் செங்கலின் மேல் கிழக்கிலும், 'प्रजापतिः' என்பது முதலிய மந்திரத்தால் தெற்கிலும், 'दक्षो दिशां' என்பது முதலிய மந்திரத்தால் மேற்கிலும், 'वरुणः' என்பது முதலிய மந்திரத்தால் வடக்கிலும், 'अग्निः' என்பது முதலிய மந்திரத்தால் நடுவிலும், ஒவ்வொரு பொன் துண்டை வைத்தல் வேண்டும்.

இயற்கைத் துளைகளையுடைய நான்கு சுக்கான் கல்லுகளை வைத்தல்:—

'प्राणायत्वा चक्षुर्त्वा' கிழக்கிலும், 'व्यानायत्वा चक्षुर्त्वां' என்று தெற்கிலும், 'अपानायत्वा चक्षुर्त्वा' என்பது முதலியதால் மேற்கிலும், 'वाचेत्वा चक्षुर्त्वा' என்பது முதலியதால் வடக்கிலும் வைத்தல் வேண்டும். மற்றும், 'आयग्रे' என்பது முதலிய மந்திரத்தால் ஏழாவது வரிசையில் முதலாவது பாதக் கல்லை வைத்தல் வேண்டும்.

பிரசாபத்யம்.

'संवत्सरस' என்பது முதலிய மந்திரத்தால் ஏழாவது வரிசையில் இரண்டாவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

ஐந்து அச்யானிகள்:—

'शतायुधाय' என்பது முதலிய மந்திரத்தால் பதின்மூன்றுவது வரிசையில் மூன்றுவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.

'येचत्वारः' என்பது முதலிய மந்திரத்தால் தென்பக்ஷச் சிறகின் நான்காவது துனிச்செங்கலை வைத்தல் வேண்டும்.

'ग्रीष्मः' என்பது முதலிய மந்திரத்தால் வாயின் முதலாம் வரிசையில் ஆருவது பாதச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'इदुवत्सराय' என்பது முதலிய மந்திரத்தால் வடபக்கச் சிறகின் நான்காவது நுனிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'मद्राश:' என்பது முதலிய மந்திரத்தால் எட்டாவது வரிசையில் நான்காவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும்.

ஐந்து கூழாங்கல்களை வைக்கு முறை வருமாறு:—

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तनूपानः प्रतिस्पशः । योनः पुरस्तादघायुरभिदा सत्येत॰ सोश्मानमृच्छतु ।

என்னும் இம் மந்திரத்தால், செங்கலடுக்கின் மேல் கிழக்கு முகமாயிருந்து கொண்டு கிழக்கில் (தலையில்) விழும்படி ஒரு சிறிய கூழாங்கல்லை, தறுவியிருந்து அம்பு விழுமாறு போடுதல் வேண்டும்.

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तनूपानः प्रतिस्पशः । योनोदक्षिणतोघायुरभिदा सत्येत॰ सोश्मानमृच्छतु ।

என்னும் இம் மந்திரத்தால், முன் போலவே தென்பக்கத்தின் (சிறகின்) கோடியிலும் ஒரு கல்லைப் போடல் வேண்டும்.

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तनूपानः प्रतिस्पशः । योनः पश्चादघायुरभिदा सत्येत॰ सोश्मानमृच्छतु ।

என்னும் இம்மந்திரத்தால், முன்போலவே மேற்கில் (வாலில்) ஒரு கூழாங்கல்லைப் போடல் வேண்டும்.

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तनूपानः प्रतिस्पशः । योनउत्तरतोघायुरभिदा सत्येत॰ सोश्मानमृच्छतु ।

என்னும் இம் மந்திரத்தால், முன் போலவே, வடக்குக் கோடியில் ஒரு கூழாங்கல்லை போடல் வேண்டும்.

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तनूपानः प्रतिस्पशः । योन उपरिष्टादघायुरभिदा सत्येत॰ सोश्मानमृच्छतु ।

என்னும் இம் மந்திரத்தால், முன்போலவே சயன நடுவில் ஒரு கூழாங்கல்லைப் போடல்வேண்டு மென்பதாம்.

ராஷ்ட்ரபிருத் என்னும் நான்கு கல்லுகளை வைக்கு முறை வருமாறு:—

'अग्नेयशस्विन्' என்பது முதலிய மந்திரத்தால் தெற்குப் பக்கச் சிறகின் ஏழாவது வரிசையில் நான்காவது சிறகுச் செங்கலை வைத்தல் வேண்டும்.

இவ்வாறே, 'भन्द्रं परयन्तः' 'धाताविधाता' 'अभ्यावर्तध्वं' என்னும் மூன்று மந்திரங்களாலும், எட்டாவது, ஒன்பதாவது, பத்தாவது வரிசைகளின் நான்காவது சிறகுச் செங்கல்கள் மூன்றையும் வைத்தல் வேண்டும்.

சர்வதோமுகம் என்னும் பொன் கல்லுகள் ஐந்தை வைக்கும் முறை வருமாறு:—

'अग्निर्मूर्धा' என்பது முதலிய மந்திரத்தால் செங்கலடுக்கின் மேல் கிழக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு பொன் தகட்டை வைத்தல் வேண்டும்.

'भुवो यज्ञस्य' என்பது முதலிய மந்திரத்தால், தென் பக்கச் சிறகின் கோடியில் தெற்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு பொன் தகட்டை வைத்தல் வேண்டும்.

'जनस्य गोपाः' என்பது முதலிய மந்திரத்தால், மேற்கில் மேற்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு பொன் தகட்டை வைத்தல் வேண்டும்.

'त्वां चित्रश्रवस्तम' என்பது முதலிய மந்திரத்தால் வடபக்கச் சிறகின் கோடியில் வடக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு பொன் தகட்டை வைத்தல் வேண்டும்.

'अग्नेतमद्य' என்பது முதலிய மந்திரத்தால் சயன நடுவில் கிழக்கு முகமாய் உட்கார்ந்து கொண்டு ஒரு பொன் தகட்டை வைத்தல் வேண்டும்.

எஞ்சிய ஐந்து செங்கல்களையும், "லோகம் பிருண" என்பது முதலிய இரண்டு மந்திரங்களாலும் முறையே ஒவ்வொன்றாக வடக்குச் சிறகின் நுனிக் கல்லில் வந்து முடியும்படி வைத்தல் வேண்டும்.

பிறகு, செங்கலடுக்கின் மேல் பொன்னை வைத்துப் போற்றுதல் முதல், 'யோ அப்சு' என்பது முதலான ஏழு மந்திரங்களால் ஹோமங்களை முடிவு செய்யும்வரை செய்து கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, 'अग्निं वाजिनं' என்பது முதலிய பங்திச் சந்த மந்திரத்தால், இவ்வைந்தாவது செங்கல் அடுக்கைப் போற்றல் வேண்டும்.

மற்றும் அப்போதே, மாலையிற்செய்யும் பிரவர்க்யம், உபசத் என்பவைகளை முடித்து விட்டு, பிரவர்க்கிய ஆச்ய சேஷங்களை உத்வாசனத்தின் பொருட்டு எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

சுப்ரமண்ய ஆஹ்வானம், (இந்திரனை யழைத்தல்)முடிந்ததும், வெள்ளைக் குதிரையைப் பிடித்துக் கொண்டு செங்கலடுக்கை வலமாய்ச் சுற்றி வரல் வேண்டும்.

---

## எட்டாம் அநுவாக உபோத்காதம்.

நான்காங்காண்டம் இரண்டாம் பிரபாடகம் ஒன்பதாம் அநுவாக முதல் மூன்றும் பிரபாடகம் மூன்றுமநுவாக முடியும்வரை, இரண்டாயிரஞ் செங்கல் அடுக்கில் முதலாவது அடுக்கு முடிவு பெறும் வகை கூறப்பட்டது, இதற்குச் செங்கல் நானூறு.

இனி, இரண்டாவது அடுக்கை (சிதியை) மூன்றும் பிரபாடகம் நான்காம் அநுவாகமுதல், (துவசுஷிதி, ஆசுவினகணம் முதல்) ரிதவ்யம் முடியும் வரையுள்ள மந்திரங்களைக் கொண்டு, சூத்திரத்திற் கூறிய முறைப்படி இருபத்து நான்கு செங்கல்களை வைத்து விட்டு, மீந்த, 176 செங்கல்களையும் லோகம்பிருண என்பது முதலிய இரண்டு மந்திரங்களாலேயே நிறைத்து விட்டு, மந்திரமின்றிக் கீழேயிறங்கி, மறுநாள், மூன்றும் பிரபாடகம் ஐந்தாம் அநுவாக முதல் (க்ரியவிர்வய: என்பது முதல்) ரிஷியேஷ்டிகை வரையில் இருபது செங்கல்களை வைத்து விட்டு, மீந்த, 180 செங்கல்களையும் 'லோகம் பிருண' என்னும் மந்திரங்களால் வைத்து முடித்தல் வேண்டும். இத்துடன் செங்கல் எண்ணூறு.

பிறகு, மூன்றுவது அடுக்கை, மறுநாள், மூன்றுவது பிரபாடகம் ஆறும் அநுவாக (இயற்கைச் சுக்கான்கல்லை வைப்பது) முதல், ஏழாம் அநுவாகம் முடியும் (வாலகில்யகணம்) வரை, எழுபத்தைந்து செங்கல்களை வைத்து விட்டு, மீந்த 125 செங்கல்களையும் லோகம்பிருண என்பது முதலிய மந்திரத்தாலேயே நிறைத்து விட்டு, மந்திரமின்றிக் கீழே யிறங்கிவிட்டு, மறுநாள், பூதேஷ்டிகை முதல், ரிஷபம் வரையுள்ள பதின்மூன்று செங்கல்களையும் வைத்து விட்டு, மீந்த, 187 செங்கல்களையும், லோகம் பிருண என்பதால் வைத்து முடித்தல் வேண்டும். இத்துடன் செங்கல் ஆயிரத்து இருநூறு.

பிறகு, நான்காவது அடுக்கை, எட்டாம் அநுவாகம் முதல் (அக்ஷணி யாஸ்தோமீயம் முதல்) ரிதவ்யம் வரையிலுள்ள முப்பத்திரண்டு செங்கல்களையும் வைத்து விட்டு, மீந்த, 168 செங்கல்களையும் 'லோகம்பிருண' என்பதால் நிரப்பி விட்டு மந்திரமின்றிக் கீழே இறங்கி விட்டு, மறுநாள், பத்தாம் அநுவாகம் (ஏகயாஸ்துவத) முதல், ரிஷபம் வரையிலுள்ள முப்பத்து நான்கு செங்கல்களையும் வைத்து விட்டு, மீந்த, 166 செங்கல்களையும், 'லோகம் பிருண' என்பதால் வைத்து நிறைத்து முடித்து விடல் வேண்டும். இத்துடன் செங்கல் ஆயிரத்து அறுநூறு.

சேடம்)

ஐந்தாவது அடுக்கில் முதலாம் அடுக்கை, பத்தாம் அநுவாகம் (அசபத்ந, அக்னேஜாதாந்) முதல், ரித்வ்யம் வரை, அதாவது, நான்காம் பிரபாடகம் ஏழாவது அநுவாகம் வரை, தென்சிறகில் 10-11-வரிசைகளில், முதல் இரண்டு சிறகுச் செங்கல்களையும், முதல், 'அப்யயம்' என்னுஞ் செங்கல்லையும், வடபக்கச் சிறகில் முதல் 'அப்யய' என்னுஞ் செங்கலையும், 1-2-வது வரிசைகளில் முதல் இரண்டு சிறகுச் செங்கல்களையும் ஆக 6 செங்கல்களையும் உபதானம் செய்யாமல் நிறுத்தி விட்டு, மீந்தவைகளை இரண்டு நாட்களில் செய்து விடல் வேண்டும்.

இனி, ஐந்தாவது அடுக்கில் இரண்டாவது அடுக்கைத் தொடங்கி, குத்திரப்படி, 'உபசிவரி' கணம், 'யாதேவ்யவி' என்பது முதலிய பதினாறு செங்கல்களையும் தென்பக்கத்துச் சிறகின், முதலாவது இரண்டாவது நுனிச் செங்கல்களையும், மேற்படி சிறகின் முதல் இரண்டு வரிசைகளிலும் முறையாகச் சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, 'अभीषाचच' என்பது முதலிய மந்திரத்தால், இந்திரம் என்னும் பத்துச் செங்கல்களையும், மேற்படி சிறகின் மூன்றும் வரிசையில் முறையாக நான்காம் வரிசையில் முதலிருந்து மூன்று சிறகுச் செங்கல்களையும் வைத்து விடல் வேண்டும். இனி, மேற்படி இரண்டாயிரஞ் செங்கலடுக்கில், அதாவது பத்தாவது வரிசையில் வைக்க வேண்டிய செங்கல்களை மேல் வரும் எட்டாம் அநுவாகங் கூறுகின்றது; அது வருமாறு:—

---

## எட்டாம் அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

अभीन्द्रतनुनामानो द्वाविंशतिरितीरिताः ।

இந்திரதநுக்கள் என்னும் இருபத்திரண்டு செங்கல்களை வைத்தல் என்பது.

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

## எட்டாம் அநுவாகம்.

நாய்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

இந்திரதநுக்கள் என்னுஞ் செங்கல்களைக் கூறும் மந்திரங்கள்.

अग्निना विश्वाषाट्सूर्येण स्वराट् क्रत्वा शचीपतिर्ऋषभेण त्वष्टा यज्ञेन मघवान्दक्षिणया सुवर्गो मन्युना वृत्रहासौ हार्देन

तनूधा अन्नेन गयः पृथिव्याऽसनो दृग्भिरन्नादो वषट्कारेणर्द्धि-
स्साम्ना तनूपा विराजा ज्योतिष्मान्ब्रह्मणा सोमपा गोभिर्यज्ञं दा-
धार क्षत्रेण मनुष्यानश्वेन च रथेन च वज्र्यृतुभिः प्रभुस्संवत्सरेण
परिभूस्तपसाऽनाधृष्टस्सूर्यस्सन्तनूभिः ॥ १ ॥

*ஏழாம் அநுவாகத்தில், 'பூயஸ்கிருத்' என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன. இதில்; இந்திரதநுக்கள் என்னும் செங்கல்களை வைக்கு முறை கூறப்படுகின்றது.*

---

(வி-1......4) நான்கு செங்கல்களை வைத்தல்.

மந்திரம் :

(1) अग्निना विश्वाषाट्, (2) सूर्येण स्वराट्, (3) क्रत्वा शचीपतिः,
(4) ऋषभेणत्वष्टा,

*என்பது.*

உரை

*செங்கல்களே! நீங்கள், அக்கினியுடன் கூட உலகைப் பாதுகாக்குந் தன்மையுடைய இந்திரனாகவும், சூரியனுடன்கூட இயற்கையில் விளங்குகின்ற இந்திரனாகவும், சோமிட்டோம முதலிய வேள்விக்கருமங்களுடன் கூட சசிதேவியின் கணவனாகிய இந்திரனாகவும், தருமத்துடன் கூட துவஷ்டா வடிவு கொண்ட இந்திரனாகவும் இருக்கின்றீர்கள் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இந் நான்கு மந்திரங்களாலும், முறையே, தென்பக்ஷச் சிறகின், நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது சிறகுச் செங்கல்களை வைத்தல் வேண்டுமென்பதாம்.*

---

(வி-5............11) ஏழு செங்கல்களை வைத்தல்.

மந்திரம் :

(1) यज्ञेन मघवान्, (2) दक्षिणया सुवर्गः, (3) मन्युना वृत्रहा,
(4) सौहार्द्येन तनूधाः, (5) अन्नेन गयः, (6) पृथिव्यासनोत्,
(7) ऋग्भिरन्नादः ।

*என்பது.*

இந்திரதநு என்னுஞ் செங்கல்கள்)

உரை.

செங்கல்களே! நீங்கள், சிறிய பாக யக்ஞத்தோடுகூட அன்னமுடைய இந்திரனுகவும், தக்ஷிணைக் கோக்கள் முதலானவைகளுடன் கூட சுவர்க்கத்தி லுள்ள இந்திரனுகவும், கோபத்துடன்கூட விருத்திரனைக் கொல்லும் இந்திரனு கவும், மிகுந்த நட்புடன்கூட உடம்பை யெடுத்த இந்திரனுகவும், உணவுப் பொருளுடன்கூட ஒரு வகை வீட்டு வடிவ இந்திரனுகவும், பூமியுடன்கூட தனமளிக்கும் இந்திரனுகவும், மந்திரங்களுடன்கூட அவியாகிய உணவையருந் தும் இந்திரனுகவும் இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், மேற்படி சிறகின் ஐந்தாவது வரிசையில், முறையே, முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவதாகிய ஏழு சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

(12…………18) வது விநியோகங்கள்

மற்றும், ஏழு செங்கல்களை வைத்தல்.

மந்திரம்:

(1) वषट्कारेणर्धः, (2) सान्नातनूपाः, (3) विराजाज्योतिष्मान्,
(4) ब्रह्मणा सोमपाः, (5) गोभिर्यज्ञं दाधार, (6) क्षत्रेण मनुष्यान्,
(7) अश्वेनच रथेनच वज्री ।

என்பது.

உரை

செங்கல்களே! நீங்கள், 'வஷட்' என்னும் அவி யளிப்பதற்கு நிமித்த மாகிய மந்திரத்துடன் கூட மிகத் தனமுடைய இந்திரனுகவும், பாடும் மந்தி ரத்துடன் கூட உடம்பைக் காக்கும் இந்திரனுகவும், கோக்கள் முதலான தக்ஷி ணைகளுடன்கூட வேள்வியைப் பரிபாலிக்கும் இந்திரனுகவும், குதிரைகள் தேர் களுடன் கூட வச்சிராயுதமுடைய இந்திரனுகவும் இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், முறையே, மேற்படி சிறகின் ஆறாவது வரிசையில், முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது சிறகுச் செங்கல்களை வைத்தல் வேண்டு மென்பதாம்.

(19.........22) வது விநியோகங்கள்

மந்திரம் :

(1) ऋतुभिः प्रभुः, (2) संवत्सरेण परिभूः, (3) तपसाऽनाधृष्टः, (4) सूर्यस्सन्तनूभिः ॥

என்பது.

உரை.

செங்கல்களே ! நீங்கள், இருதுக்களுடன் கூட பலனை யளிக்கவல்ல இந்திரனைகவும், கால வடிவுடன் கூட யாண்டும் நிறைந்த இந்திரனைகவும், உண வருந்தலின்றி தன முதலியவற்றை யளித்தல் முதலிய தவத்துடன் கூட ஒருவராலுந் தாழ்த்தப்படாத இந்திரனைகவும், மற்றும், பன்னிரண்டு சூரிய வடிவங்களாயுள்ள இந்திரனைகவும் இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், மேற்படி சிறகின் ஏழாவது வரிசையில், நான்காவது ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது சிறகுச் செங்கல்களை வைத்தல் வேண்டுமென்பதாம்.

எட்டாவது அநுவாகம் முடிந்தது.

ஒன்பதாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

प्रजेति यज्ञतनवस्त्रयस्त्रिंशत्समीरिताः ।

'பிரசாபதி' என்பது முதலிய இவ்வநுவாக மந்திரங்களால் ' யக்ஞ தநுக்கள் ' என்னும் முப்பத்துமூன்று செங்கல்களை வைக்குமுறை கூறப்படுகின்றது.

நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

ஒன்பதாம் அநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்கு மேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது.

प्रजापतिर्मनसाऽन्धोच्छेतो धाता दीक्षाया॑ सविता भृत्यां पूषा सोमक्रयण्यां वरुण उपनद्धोऽसुरः क्रीयमाणो मित्रः क्रीतश्शिपिविष्ट आसादितो नरन्धिषः प्रोह्यमाणोऽधिपतिरागतः

प्रजापतिः प्रणीयमानोऽग्निराग्नीध्रे बृहस्पतिराग्नीध्रात्प्रणीयमान इन्द्रो हविर्धानेऽदितिरासादितो विष्णुरुपावह्रियमाणोऽथर्वोपोत्तो यमोऽभिषुतोऽपूतपा आधूयमानो वायुः पूयमानो मित्रः क्षीरश्रीर्मन्थी सक्तुश्रीर्वैश्वदेव उन्नीतो रुद्र आहुतो वायुरावृत्तो नृचक्षाः प्रतिख्यातो भक्ष आगतः पितॄणां नाराशꣳसोऽसुरात्तस्सिन्धुरवभृथमवप्रयन्त्समुद्रोऽवगतस्सलिलः प्रप्लुतस्सुवरुदृचं गतः ॥ १ ॥

எட்டாம் அநுவாகத்தில் இந்திரதநுக்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன. இதில், யக்ஞதநுக்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்படுகின்றன.

---

(1............6) வது விநியோகங்கள்

ஆறு செங்கல்களை வைத்தல்.

மந்திரம்:

(1) प्रजापतिर्मनसान्धोच्छेतः, (2) धाता दीक्षायां, (3) सविता भृत्यां, (4) पूषा सोमक्रयण्यां, (5) वरुण उपनद्धः, (6) असुरः क्रीयमाणः ।

என்பது.

உரை

செங்கல்களே! நீங்கள், எசமானனுடைய மனதில் சங்கற்பித்த போதுள்ள பிரசாபதி யென்னும் யக்ஞவடிவாகவும், தீட்சைக் காலத்திலுள்ள பிரமன் என்னும் யக்ஞ வடிவாகவும், யக்ஞத்தின் பொருட்டு பொருளை இரக்கும் போதுள்ள சவிதா என்னும் யக்ஞ வடிவாகவும், சோமத்திற்கு விலையாகிய ஒரு வருடப் பசுக்கடாரியின் காலத்திலுள்ள பூஷன் என்னும் யக்ஞ வடிவாகவும், ஆடையால் சோமத்தைக் கட்டும் போதுள்ள வருணனென்னும் யக்ஞ வடிவாகவும், சோமத்தை விலைக்கு வாங்கும் போதுள்ள இந்திரனென்னும் யக்ஞ வடிவாகவும் இருக்கின்றீர்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், வடபக்கச் சிறகின் முதல் வரிசையில், முறையே, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது சிறகுச் செங்கல்களை வைத்தல் வேண்டுமென்பதாம்,

(யக்ஞநு என்னுஞ்

(7.............12) வது விநியோகங்கள்
மற்றும், ஆறு செங்கல்களை வைத்தல்.

மந்திரம் :

(1) मित्रः क्रीतः, (2) शिपिविष्ट आसादितः, (3) नरंधिषः प्रोह्यमाणः, (4) अधिपति रागतः, (5) प्रजापतिः प्रणीयमानः, (6) अग्निराग्नीध्रे ।

என்பது.

உரை.

*செங்கல்களே ! நீங்கள், சோமத்தை விலைக்கு வாங்கிய பின்னுள்ள மித்திர னென்னும் யக்ஞ வடிவாகவும், எசமானனுடைய தொடையின்மீது சோமத்தை வைத்திருக்கும் போதுள்ள விஷ்ணு வென்னும் யக்ஞவடிவாகவும், சோமத்தை வண்டியில் வைத்துக்கொண்டு பிராசீன வம்சத்திற்குப் போகும் போதுள்ள அக்கினி யென்னும் யக்ஞவடிவாகவும், அந்த நாற்காலியின்மீது வைத்திருக்கும் போதுள்ள ஆகவனீயாக்கினி என்னும் யக்ஞவடிவாகவும், பிராக் வம்சத்திலிருந்து ஆக்னீத்ரனிடம் கொண்டு போகும்போதுள்ள பிரசாபதி யென்னும் யக்ஞவடிவாகவும் இருக்கின்றீர்கள் என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரங்களால், மேற்படி வடபக்கச் சிறகின் இரண்டாவது வரிசையில், இரண்டாவது, மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது செங்கல்களை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

(13...................19) வது விநியோகங்கள்
மற்றும் ஏழு கல்லுகளை வைத்தல்.

மந்திரம் :

(1) बृहस्पति राग्नीध्रात्प्रणीयमानः, (2) इन्द्रो हविर्धाने, (3) अदिति-रासादितः, (4) विष्णुरुपावह्रियमाणः, (5) अथर्वोपोत्तः, (6) यमो-भिषुतः, (7) अपूतपा अधूयमानः ।

என்பது.

உரை.

*செங்கல்களே ! நீங்கள், ஆக்னீத்ர மண்டபத்திலிருந்து அவிர்த்தான மண்டபத்திற்குக் கொண்டு போகும்போதுள்ள பிருகற்பதி யென்னும் யக்ஞ வடிவாகவும், அவிர்த்தானத்திற்குட் புகுந்த பிறகுள்ள இந்திர னென்னும் யக்ஞ வடிவாகவும், நாற்காலியில் வைத்த பின்னுள்ள அதிதியென்னும் யக்ஞ*

செங்கல்கள்)

வடிவாகவும், வண்டியிலிருந்து எடுத்து இடிக்கும் கற்களின் மீது வைத்த போதுள்ள இந்திரனென்னும் யக்ஞ வடிவாகவும், வசதீவரி என்னும் நீரால் நனைத்த போதுள்ள அதர்வரிஷி என்னும் யக்ஞவடிவாகவும், இடித்த போதுள்ள எமன் என்னும் யக்ஞவடிவாகவும், அதாப்யக்கிரகத்தில் சோமத் துண்டுகளால் அலைக்கப்பட்ட போதுள்ள ஆதித்தனென்னும் யக்ஞவடிவாகவும் இருக்கின்றீர்கள் என்பது.

## சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், மேற்படி சிறகின் மூன்றாவது வரிசையில் முதலிலிருந்து முறையே ஏழு சிறகுச் செங்கல்களை வைத்தல் வேண்டுமென்பதாம்.

—∽∾∽—

## (20......................26) வது விநியோகங்கள்

## மற்றும் ஏழு கல்லுகளை வைத்தல்.

மந்திரம் :

(1) वायुः पूयमानः, (2) मित्रः क्षीरश्रीः, (3) मंथीसक्तुश्रीः,
(4) वैश्वदेव उन्नीतः, (5) रुद्र आहुतः, (6) वायुरावृत्तः,
(7) नृचक्षाः प्रतिख्यातः ।

என்பது.

## உரை

செங்கல்களே ! நீங்கள், வடிக்கு மாடையால் சோமரசம் வடிக்கப் பெற்ற போதுள்ள வாயு என்னும் யக்ஞ வடிவாகவும், மைத்திரா வருணக் கிரகத்தில் பாலுடன் சோமரசங் கலக்கப்பெற்ற போதுள்ள மித்திரன் என்னும் யக்ஞ வடிவாகவும், மந்திக் கிரகத்தில் சத்துமாவுடன் சோமரசங் கலந்த போதுள்ள மந்திக் கிரக தேவதையாகிய இந்திரனென்னும் யக்ஞ வடிவாகவும், சமசங்களில் சோமரசத்தை நிறைத்த போதுள்ள வைசுவ தேவம் என்னும் யக்ஞ வடிவாகவும், தீயில் சோமரசத்தை ஓமஞ் செய்யும் போதுள்ள உருத்திரனென்னும் யக்ஞ வடிவாகவும், அருந்தற் பொருட்டு சோமரசத்தை சபைக்கு எடுத்துக்கொண்டு வரும் போதுள்ள வாயு என்னும் யக்ஞ வடிவாகவும், அருந்துதற்பொருட்டுச் சோமரசத்தைப் பார்க்கும்போதுள்ள மனித திருஷ்டி யென்னும் யக்ஞவடிவாகவும் இருக்கின்றீர்கள் என்பது

## சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், மேற்படி சிறகின் நான்காம் வரிசையில் முதலாவதிலிருந்து ஏழு சிறகுச் செங்கல்களை முறையாய் வைத்தல் வேண்டுமென்பதாம்.

(27.................33) வது விநியோகங்கள்

மற்றும் ஏழு கல்லுகளை வைத்தல்.

மந்திரம் :

(1) भक्ष आगतः, (2) पितृणां नाराशंसः, (3) असुरात्तः, (4) सिन्धु रवभृथ मवप्रयन्, (5) समुद्रोऽवगतः, (6) सलिलः प्रप्लुतः, (7) सुवरुदचं गतः ॥

என்பது.

உரை.

*செங்கல்களே! நீங்கள், சோமரசத்தை அருந்திய பின்னுள்ள வைசுவாநரம் என்னும் யக்ஞவடிவாகவும், அருந்திய சேடத்தை மீண்டும் வசதிவரி என்னும் நீருடன் கலந்தபோதுள்ள பிதிரு என்னும் யக்ஞவடிவாகவும், அவபிருதத்தின் பொருட்டு சோமரசத்தை எடுத்த போதுள்ள பிராண தேவதை என்னும் யக்ஞவடிவாகவும், எடுத்துக்கொண்டு போகும் போதுள்ள சிந்துநதி என்னும் தேவதையாகிய யக்ஞ வடிவாகவும், அவபிருத இடத்தைச் சேர்ந்த போதுள்ள கடல் என்னும் யக்ஞ வடிவாகவும், சோமத்தை நீரில் விடப்பட்டபோதுள்ள சல தேவதை யென்னும் யக்ஞ வடிவாகவும், சோமயாகம் முடிந்த போதுள்ள சுவர்க்கத்தில் வாழும் தேவதை என்னும் யக்ஞ வடிவாகவும் இருக்கின்றீர்கள் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரங்களால், மேற்படி சிறகின் ஐந்தாவது வரிசையில் முதலாவதிலிருந்து ஏழு சிறகுச் செங்கல்களை முறையாய் வைத்தல் வேண்டு மென்பதாம்.*

ஒன்பதாம் அநுவாகம் முடிந்தது.

---

## *பத்தாம் அநுவாகம்.*

விடயச் சுருக்கம்

कृत्ति नक्षत्रेष्टकाः स्युः सप्तविंशति रीरिताः ।

ऋचेत्वा सर्वशेषः स्यात्पूर्णायत्त इतिद्वयम् ॥ १ ॥

*இவ்வநுவாகம், நக்ஷத்திரேஷ்டிகை என்னும் இருபத்தேழு கல்களை வைத்தல், பௌர்ணமி என்னும் ஓர் கல்லை வைத்தல், அமாவாசை என்னும் ஓர் கல்லை வைத்தல் என்பதைக் கூறுகிறது.*

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்.

## பத்தாம் அநுவாகம்.

இரண்டு பஞ்சாதிக்கு மேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

---

நட்சத்திரச் செங்கல்களைக் கூறு மந்திரங்கள்.

कृत्तिका नक्षत्रमग्निर्देवताऽग्ने रुचस्स्थ प्रजापतेर्धातुस्सोमस्यर्चेत्वा रुचेत्वा द्युतेत्वा भासेत्वा ज्योतिषेत्वा रोहिणी नक्षत्रं प्रजापतिर्देवता मृगशीर्षन्नक्षत्रꣳ सोमो देवताऽऽर्द्रा नक्षत्रꣳ रुद्रो देवता पुनर्वसू नक्षत्रमदितिर्देवता तिष्यो नक्षत्रं बृहस्पतिर्देवताऽऽश्रेषा नक्षत्रꣳ सर्पा देवता मघा नक्षत्रं पितरो देवता फल्गुनी नक्षत्रम् ॥ १ ॥ अर्यमा देवता फल्गुनी नक्षत्रं भगो देवता हस्तो नक्षत्रꣳ सविता देवता चित्रा नक्षत्रमिन्द्रो देवता स्वाती नक्षत्रं वायुर्देवता विशाखे नक्षत्रमिन्द्राग्नी देवताऽनूराधा नक्षत्रं मित्रो देवता रोहिणी नक्षत्रमिन्द्रो देवता विचृतौ नक्षत्रं पितरो देवताऽषाढा नक्षत्रमापो देवताऽषाढा नक्षत्रं विश्वे देवा देवता श्रोणा नक्षत्रं विष्णुर्देवता श्रविष्ठा नक्षत्रं वसवः ॥ २ ॥ देवता शतभिषङ् नक्षत्रमिन्द्रो देवता प्रोष्ठपदा नक्षत्रमज एकपाद्देवता प्रोष्ठपदा नक्षत्रमहिर्बुध्नियो देवता रेवती नक्षत्रं पूषा देवताऽश्वयुजौ नक्षत्रमश्विनौ देवताऽपभरणीर्नक्षत्रं यमो देवता पूर्णा पश्चाद्यत्ते देवा अदधुः ॥ ३ ॥

ஒன்பதா மநுவாகத்தில் யக்ஞ தநுக்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன, இதில், நட்சத்திரங்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்படுகின்றன.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, கா-1, பிர-4, அநு-34-ல் உள்ள 'ज्योतिष्मतीं त्वा सादयामि' என்பது முதலான பன்னிரண்டு மந்திரங்களாலும் வடக்கு பக்கச் சிறகின் ஆறாவது வரிசையில் முறையாய் ஏழு சிறகுச் செங் கல்களையும், மேற்படி ஏழாவது வரிசையில் முகளிலிருந்து ஐந்து சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.

மற்றும், 'पूर्णापश्चात्' என்பது முதலிய மேல்வரும் இவ்வாறுவாக மந்திரத் தால், ஆன்ம வரிசை இரண்டாவதில் பதினோராவது பாதிச் செங்கலையும் வைத்தல் வேண்டு மென்பதையு முணர்க.

---

முதல் விநியோகம்

மந்திரம் :

कृत्तिका नक्षत्रमग्निर्देवता ऽग्नेरुचस्थ प्रजापतेर्धातुस्सोमस्यर्चेत्वा रुचेत्वा द्युतेत्वा भासेत्वा ज्योतिषेत्वा ।

என்பது.

உரை.

அம்பா, துலா, என்பது முதலியன ஆறு நட்சத்திரங்களின் கூட்டமே கிருத்திகை எனப்படும். அதற்கு அதிட்டான தேவதை அக்கினி. இத்தகைய கிருத்திகா நட்சத்திரங்களே! நீங்கள், பிரசாபதி பிரமன் சோமன் என்பவர் களுடைய ஒளிவடிவாக இருக்கின்றீர்கள். இத்தகைய தேவதைகளின் வடிவான செங்கல்களே! உங்களை, அழகின் பொருட்டும், அதியாகிய மந்திர சித்தியின் பொருட்டும், ஒளிகளின் பொருட்டும் வைக்கின்றேன் என்பது. ஈண்டு, இது முதலான முப்பது செங்கல்களும் ஒன்றோடொன்று படாதிருக்கும்படி இடை யில் ஒவ்வொரு இலையையும் வைத்தல் வேண்டும் என்பதை யுணர்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாவது ஆன்ம வரிசையில் பத்தாவது சோடசி என்னுஞ் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது விநியோகம்

மந்திரம் :

रोहिणी नक्षत्रं प्रजापति र्देवता ।

என்பது.

உரை

இதில் உரோகிணி நட்சத்திரம், அதனுடைய அதிட்டான தேவதை பிர சாபதி என்பது விசேடம். மற்றவைகளை, முன் மந்திரத்தின் பிற்பாதியாகிய

என்னுஞ் செங்கல்கள்)

ருசேத்வா (மந்திர துதி சித்தியின் பொருட்டு உன்னை) என்பது முதலிய மந்திரத்தைச் சேர்த்துக் கொண்டுப் பொருளுரைத்துக் கொள்க. மேலும் எல்லாவற்றிலும் இவ்வாறே செய்து கொள்ளல் வேண்டு மென்பதை யுணர்க என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஒன்பதாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

மந்திரம் :

मृगशीर्षं नक्षत्रं सोमो देवता ।

என்பது.

உரை.

இதில் மிருகசிர்ஷ நட்சத்திரம், அதனுடைய அதிட்டான தேவதை சோமம் என்பது விசேடம் மற்றவை யெல்லாம் முன்போல் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எட்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

மந்திரம் :

आर्द्रा नक्षत्रं रुद्रो देवता ।

என்பது.

உரை

இதில் ஆருத்திரா நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை உருத்திரன் என்பது விசேடம் மற்றவையனைத்தும் முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஏழாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

மந்திரம் :

पुनर्वसू नक्षत्र मदितिर्देवता ।

என்பது.

உரை

இதில் புனர்பூச நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை அதிதி என்பது விசேடம் மற்றவையனைத்தும் முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம்

மந்திரம் :

तिष्यो नक्षत्रं बृहस्पतिर्देवता ।

என்பது.

உரை.

இதில் பூசம் நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை பிருகஸ்பதி என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

மந்திரம் :

आश्रेषा नक्षत्रꣳ सर्पा देवता ।

என்பது.

உரை

இதில் ஆயில்ய நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை சர்பா என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

எட்டாம் விநியோகம்

மந்திரம் :

मघानक्षत्रं पितरो देवता ।

என்பது.

உரை.

இதில் மக நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை பிதிர்க்கள் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்

**மந்திரம் :**

फल्गुनी नक्षत्र मर्यमा देवता ।

என்பது.

உரை.

இதில் பூர நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை அரியமன் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்

**மந்திரம் :**

फल्गुनी नक्षत्रं भगो देवता ।

என்பது.

உரை.

இதில் தேவதை பகன் உத்திர நக்ஷத்திரம் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலிவ்விய மேற்படி வரிசையில் முதலாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பதினோராம் விநியோகம்

**மந்திரம் :**

हस्तो नक्षत्रꣳ सविता देवता ।

என்பது.

உரை.

இதில் அஸ்த நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை சவிதா என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வாவின் மூன்றாவது வரிசையில் முதலாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பன்னிரண்டாம் விநியோகம்

மந்திரம் :

चित्रा नक्षत्र मिन्द्रो देवता ।

என்பது.

உரை

இதில் சித்திரை நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை இந்திரன் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன. என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாவின் இரண்டாவது வரிசையில் இரண்டாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பதின்மூன்றும் விநியோகம்

மந்திரம் :

स्वाती नक्षत्रं वायुर्देवता ।

என்பது.

உரை.

இதில் சுவாதி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை வாயு என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாவின் முதல் வரிசையில் மூன்றாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினான்காம் விநியோகம்

மந்திரம் :

विशाखे नक्षत्रमिन्द्राग्नी देवता ।

என்பது.

என்னுந் செங்கல்கள்)

உரை.

இதில் விசாகம் நக்ஷத்திரம், அதனுடைய அதிட்டான தேவதை இந்திராக்னீ என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் இரண்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

பதினைந்தாம் விநியோகம்

மந்திரம் :

यत्ते देवा अदधुः ।

என்பது.

உரை.

இது, மேலே '29' வதாக வரும் பிரதீகம். அதாவது மூன்றாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகத்தின் முதலிலுள்ள மந்திரத்தின் தலைப்புச் சொற்கள்; இதற்கு உரை ஆங்குக் கூறப்பட்டிருக்கின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இப் பிரதிகத்தைக்கொண்ட மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஒன்பதாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம். இது, அமாவாசையாம்.

---

பதினாறும் விநியோகம்

மந்திரம் :

अनूराधा नक्षत्रं मित्रो देवता ।

என்பது.

உரை

இதில் அனுஷம் நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை மித்திரன் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எட்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினேழாம் விநியோகம்

மந்திரம் :

रोहिणी नक्षत्रमिन्द्रो देवता ।

என்பது.

உரை

இதில் கேட்டை நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை இந்திரன் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாவின் இரண்டாவது வரிசையில் ஐந்தாவது சோடசிச் செங்கல்லை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பதினெட்டாம் விநியோகம்

மந்திரம் :

विचृतौ नक्षत्रं पितरो देवता ।

என்பது.

உரை.

இதில் மூலம் நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை பிதிர்க்கள் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வாவின் மூன்றாவது வரிசையில் நான்காவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பத்தொன்பதாம் விநியோகம்

மந்திரம் :

आषाढा नक्षत्रमापो देवता ।

என்பது.

உரை.

இதில் பூராடம் நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை தண்ணீர் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆன்ம வரிசையில் ஐந்தாவதில் முதலாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இருபதாம் விநியோகம்

மந்திரம் :

आषाढा नक्षत्रं विश्वेदेवा देवता ।

என்பது.

உரை.

இதில் நக்ஷத்திரம் உத்திராடம் விசுவே தேவதை என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலேயே, மேற்படி வரிசையில் இரண்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இருபத்தோராம் விநியோகம்

மந்திரம் :

श्रोणा नक्षत्रं विष्णुर्देवता ।

என்பது.

உரை.

இதில் திருவோண நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை விஷ்ணு என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றுவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்

இருபத்திரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

श्रविष्ठा नक्षत्रं वसवो देवता ।

என்பது.

உரை

இதில் அவிட்டம் நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை வசுக்கள் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

இருபத்துமூன்றும் விநியோகம்.

மந்திரம் :

शतभिषङ् नक्षत्रमिन्द्रो देवता ।

என்பது.

உரை.

இதில் சதயம் நக்ஷத்திரம் வருண தேவதை அதிட்டானம் என்ப இதில் ...ன்பது வி
விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஐந்தாவது பாதிச் செய்த இட் வைத்தல்
வைத்தல் வேண்டும் என்பதாம்.

---

இருபத்துநான்காம் விநியோகம்.

மந்திரம் :

प्रोष्ठपदा नक्षत्र मज एकपाद्देवता ।

என்பது.

உரை.

இதில் பூரட்டாதி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான:தேவதை அஜ ஏகபாதம் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஆறுவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இருபத்தைந்தாம் விநியோகம்.

மந்திரம் :

प्रोष्ठपदा नक्षत्रमहिर्बुध्नियो देवता ।

என்பது.

உரை.

இதில் உத்திரட்டாதி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை அகிர்புத்திரி என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எழாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு வென்பதாம்.

---

இருபத்தாறுவது வியோகம்.

மந்திரம் :

रेवती नक्षत्रं पूषा देवता ।

என்பது.

என்னுஞ் செங்கல்கள்)

உரை.

இதில், இரேவதி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை பூஷா என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் எட்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இருபத்தேழாம் விநியோகம்.

மந்திரம் :

अश्वयुजौ नक्षत्र मश्विनौ देवता ।

என்பது.

உரை.

இதில் அசுவினி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை அசுவினிகள் என்பது விசேடம் மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் ஒன்பதாவது சோடிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இருபத்தெட்டாம் விநியோகம்.

மந்திரம் :

अपभरणीर्नक्षत्रं यमो देवता ।

என்பது.

உரை.

இதில் பரணி நக்ஷத்திரம் அதனுடைய அதிட்டான தேவதை எமன் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் பத்தாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

இருபத்தொன்பதாம் விநியோகம்.

மந்திரம் :

पूर्णा पश्चात् ।

என்பது:

உரை.

*இது மூன்றாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம் முதலநுவாகத்திலுள்ள மந்திரத்தின் தலைப்புச் சொல்லாம்; இதனுரையை ஆண்டுக் காண்க.*

சயணபாடியக் கருத்து

*இப் பிரதீகத்தைக் கொண்ட மந்திரத்தால் மேற்படி வரிசையில் பதினோராவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.

---

## *பதினோராம் அநுவாகம்.*

விடயச் சுருக்கம்.

मधुश्च द्वादशर्तव्या अग्नेरित्यनुपद्यते ।
संयचोग्रा ध्रुवा धर्त्रा प्राची पञ्चेष्टका इमाः ॥ १ ॥
षष्ठ्यां चितौ सर्वशेषस्तोत इत्यादिको मतः ।
सहस्रपञ्चभिर्मन्त्रैर्दिक्षु मध्येच तां चितिम् ॥ २ ॥
सहस्रस्वर्णं शकलैः प्रोक्षयेत्तत इमामिति ।
स्वासी धेनूः करोत्येतास्त्रयोविंशति मन्त्रकाः ॥ ३ ॥

*ரிதவ்யங்கள் என்னும் பன்னிரண்டு கல்களை வைத்தல், வைசுவதேவர்கள் என்னும் ஐந்து கல்களை வைத்தல், ஐந்து மந்திரங்களால் திக்குகளிலும் நடுவிலுமாக ஆயிரம் பொன் துண்டுகளைப் புரோக்ஷணஞ்செய்தல், எசமானன், மகாக்கினி சயனத்திலுள்ள செங்கல்களை காமதேநுக்களாக பாவித்துப் போற்றல் என்பது.*

---

## நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்.

## பதினோராம் அநுவாகம்.

மூன்று பந்சாதிந்து மேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

'ரிதவ்யங்கள்' என்னுஞ் செங்கல்களைக் கூறு மந்திரங்கள்.

मधुश्च माधवश्च वासन्तिका वृतू शुक्रश्च शुचिश्च ग्रैष्मावृतू-
नभश्च नभस्यश्च वार्षिकावृतू इषश्चोर्जश्च शारदावृतू सहश्च सहस्यश्च

என்னுஞ் செங்கல்கள்)

हैमन्तिकावृतू तपश्च तपस्यश्च शैशिरावृतू अग्नेरन्तःश्लेषोऽसि कल्पे-
तान्द्यावापृथिवी कल्पन्तामाप ओषधीः कल्पन्तामग्नयः पृथङ्मम-
ज्यैष्ठ्याय सव्रताः ॥ १ ॥ येऽग्नयस्समनसोऽन्तरा द्यावापृथिवी
शैशिरावृतू अभिकल्पमाना इन्द्रमिव देवा अभिसंविशन्तु संयच्च
प्रचेताश्चाग्नेस्सोमस्य सूर्यस्योग्रा च भीमा च पितृणां यमस्येन्द्रस्य-
ध्रुवा च पृथिवी च देवस्य सवितुर्मरुतां वरुणस्य धर्त्री च धरित्री च
मित्रावरुणयोर्मित्रस्य धातुः प्राची च प्रतीची च वसूनाꣳ रुद्राणाम् ॥
आदित्यानान्ते तेऽधिपतयस्तेभ्यो नमस्ते नो मृडयन्तु तेय-
न्द्विष्मो यश्च नो द्वेष्टि तं वो जम्भे दधामि सहस्रस्य प्रमा असि
सहस्रस्य प्रतिमा असि सहस्रस्य विमा असि सहस्रस्योन्मा असि
साहस्रोऽसि सहस्रायत्वे मामे अग्न इष्टका धेनवस्सन्त्वेका च शतञ्च
सहस्रञ्चायुतञ्च ॥ २ ॥ नियुतञ्च प्रयुतञ्चार्बुदञ्च न्यर्बुदञ्च समुद्रश्च
मध्यञ्चान्तश्च परार्धश्चैता मे अग्न इष्टका धेनवस्सन्तु षष्टिस्सहस्र-
मयुतमक्षीयमाणा ऋतस्थास्स्थर्तावृधो घृतश्चुतो मधुश्चुत ऊर्ज-
स्वतीस्स्वधाविनीस्ता मे अग्न इष्टका धेनवस्सन्तु विराजो नाम काम-
दुघा अमुत्रामुष्मिँल्लोके ॥ ३ ॥

[illegible] கூறப்பட்டன. இதில், [illegible].

சண்டுச் ருத்திரத்தைக் கழுவி வைக்க வேண்டிய 'சரித்' என்னும் எட்டுச் செங்கல்களை வைக்கும் முறை வருமாறு:—

'हिरण्यगर्भस्समवर्तताग्रे' என்பது முதலிய, இக்காண்டத்தின் முதற் பிரபாடக மந்திரங்கள் எட்டாலும், வடபக்கச் சிறகின் ஏழாவது வரிசையில் ஆறாவது

ஏழாவது சிறகுச் செங்கல்களையும், எட்டாவது வரிசையில் இரண்டாவது முதல் முறையாக ஆறு சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, பொன் செங்கல்களையும், இயற்கைச் சுக்கான் கல்லுகளையும் முன் போன்று வைத்தல் வேண்டும்.

மற்றும், அக்னிரூபம் என்னும் ஐந்து கல்களை வைக்கும் முறை வருமாறு :—

'अग्न आयाहि' என்பது முதலிய சம்ஹிதை மந்திரங்களால், ஆறுவது ஆன்ம வரிசையில், நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது பாதிச் செங் கல்கள் நான்கையும், எட்டாவது சோடசிக்கல் ஒன்றையும் வைத்தல் வேண் டும்.

விரதம் என்னும் இரண்டு கல்களை வைக்கும் முறை வருமாறு :—

'देवस्यत्वा' என்பது முதலிய இரண்டு ருத்திர மந்திரங்களால் வாலின், இரண்டாவது வரிசையில் மூன்றாவது பாதிச் செங்கலையும், மூன்றாவது வரி சையில் இரண்டாவது சோடசிச் செங்கலையும் வைத்தல் வேண்டும்.

'प्राच्यात्वा' என்பது முதலிய மந்திரத்தால் மூன்றாவது ஆன்ம வரிசை யில் பத்தாவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டும்.

'दक्षिणयात्वा' என்பது முதலிய மந்திரத்தால், தெற்குப் பக்கச் சிறகின் நான்காவது நுனிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'प्रतीच्यात्वा' என்பது முதலிய மந்திரத்தால், வாலின் முதல் வரிசையில் நான்காவது ஷோடசிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'उदीच्यात्वा' என்பது முதலிய மந்திரத்தால், வடபக்கச் சிறகின் நான் காவது நுனிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'ऊर्ध्वयात्वा' என்பது முதலிய மந்திரத்தால், நான்காவது ஆன்ம வரி சையில் நான்காவது சோடசிக் கல்லை வைத்தல் வேண்டும்.

இனி, இவ்வாறாவாக மந்திர விநியோகங்கள் வருமாறு :—

---

## 1-2 வது விநியோகங்கள்

மந்திரம் :

मधुश्च माधवश्च वासन्तिकावृतू, अग्नेरन्तश्लेषोऽसि कल्पेतां द्यावा-
पृथिवी कल्पन्ता माप ओषधीः कल्पन्तामग्नयः पृथङ्मम ज्यैष्ठ्याय
सव्रतायेऽग्नयस्समनसोऽन्तरा द्यावापृथिवी वासन्तिकावृतू
अभिकल्पमाना इन्द्रमिव देवा अभिसंविशन्तु ।

என்பது.

என்னுஞ் செங்கல்கள்)

உரை

சித்திரை வைகாசி மாதங்கள் கூடியுள்ள வசந்தருதுவே! நீ, செங்கலடுக்காகிய அக்கினிக்குள் நுழைக்கப் பட்டிருக்கின்றாய். செங்கல்களை அடுக்கிய எசமானனுடைய மேன்மையின் பொருட்டு மண் விண் இரண்டும் இயன்ற உதவியைச் செய்க. ஆகவனீய முதலான அக்கினிகளும் தத்தமது செயலைச் செய்க. மற்றும், மண்ணிலும் விண்ணிலும் உள்ள அக்கினிகளனைத்தும், மாசி பங்குனி கூடியுள்ள குளிர் காலத்தில் அவயவங்களைத் தேடும் வகையால் ஏனைய தேவர்கள் வழிபடுவது போல், இந்திரனை இவ் வேள்விக் கருமத்திற் சூழ்ந்து கொள்வனவாகுக என்பது.

இதில், "அக்கினே: என்பது முதல், அபிசம் விசந்து" என்பது வரை, மேல் வரும் மந்திரமுஞ் சேர்க்கப்பட்டிருக்கின்றது. மேலும் இவ்வாறே யூகித்துச் சேர்த்துக்கொள்ளல் வேண்டுமென்பதை யுணர்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலாவது அடுக்கின் 15-வது 16-வது வரிசைகளில் கடைசிச் செங்கல்களிரண்டையும் ஒருங்கே வைத்தல் வேண்டும் என்பதாம். இது முன் விநியோகிக்கப்பட்டது.

---

3-4-வது விநியோகங்கள்

வேனிற் காலம்.

மந்திரம் :

शुक्रश्च शुचिश्च ग्रैष्मावृतू ।

என்பது.

உரை.

இதில் ஆனி ஆடி மாதங்கள்கூடிய வேனிற்காலம் (க்ரீஷ்மரிது) என்றது விசேடம் மற்றவை யனைத்தும் முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரண்டாவது செங்கல் அடுக்கின் ஐந்தாவது ஆன்ம வரிசையில், நான்காவது, ஐந்தாவது இரண்டு பாதிச் செங்கல்களையும் ஒருங்கே வைத்தல் வேண்டுமென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

5-6-வது விநியோகங்கள்

மழைக்காலம்

மந்திரம் :

नभश्च नभस्यच वार्षिकावृतू ।

என்பது.

உரை

இதில் ஆவணி புரட்டாசி மாதங்களான மழைக்காலம் என்றது விசேடம் மற்றவையனைத்தும் முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றாவது செங்கல் அடுக்கின் ஆறாவது வரிசையில், நான்காவது ஐந்தாவது பாதச் செங்கற்களிரண்டையும் ஒருங்கே வைத்தல் வேண்டும் என்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டதாம்.

---

7-8-வது விநியோகங்கள்

குளிர் காலம்

மந்திரம்:

इषश्चोर्जश्च शारदावृतू ।

என்பது.

உரை

இதில் அற்பிசை கார்த்திகைகளான குளிர்காலம் என்றது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், மேற்படி செங்கலடுக்கின் எட்டாவது வரிசையில் இரண்டாவது மூன்றாவது சோடசிச் செங்கல்களை ஒருங்கே வைத்தல் வேண்டுமென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

9-10-வது விநியோகங்கள்

பனிக் காலம்.

மந்திரம்:

सहश्च सहस्यश्च हैमन्तिकावृतू ।

என்பது.

உரை.

இதில் மார்கழி, தை மாதங்களான பனிக்காலம் என்றது விசேடம் மற்றவைமுன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், நான்காவது செங்கலடுக்கின் நான்காவது ஆன்ம வரிசையில், ஐந்தாவது, ஆறாவது சோடசிச் செங்கல்களை ஒருங்கே வைத்தல் வேண்டுமென்பதாம். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

என்னுந் செங்கல்கள்)

## 11-12-வது விநியோகங்கள்

பின் பனிக்காலம்

மந்திரம் :

तपश्च तपस्यश्च शैशिरावृतू ।

என்பது.

உரை.

இதில், மாசி பங்குனி மாதங்களான பின் பனிக்காலம் என்றது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், ஐந்தாவது சிதியின் பத்தாவது பதினோரா வது வரிசைகளில் இரண்டாவது சோடசிச் செங்கல்களை வைத்தல் வேண்டும். இதுவும் முன் விநியோகிக்கப்பட்டது.

---

## 13-வது விநியோகம்

வைசுவதேவ்யம் என்னும் ஐந்தனுள் முதலாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

संयच्च प्रचेताश्चाऽग्नेस्सोमस्य सूर्यस्य, ते तेऽधिपतयस्तेभ्यो नमस्ते
नोमृडयन्तु तेयं द्विष्मो यश्च नो द्वेष्टि तं वो जम्भे दधामि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, அக்கினி, சோமன், சூரியன் என்னுமிவர்களின் அடக்குந் தன்மைக்கும், விளக்குந் தன்மைக்குங் காரணமாயிருக்கின்றாய். அத் தேவதைகள் எம்மைப் பரிபாலிக்கின்றவர்கள் அவர்கட்கு வணக்கம். அவர்கள் சுகத்தைச் செய்வார்களாக. எம்மை வெறுக்கின்றவனும் எம்மால் வெறுக்கப்பட்டவனுமாகிய பாவியைக் (சத்துருவை) கொல்வதன் பொருட்டு உன்னை வைக்கின்றேன் என்பது.

இதில், 'தே தே அதிபதே' என்பது முதல், 'தாமி' என்னும் வரை வேறு மந்திரம் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலும் இவ்வாறே சேர்த்துக் கொள்க.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இப்போது தொடங்கிய ஐந்தாவது அடுக்கின் மூன்றாவது ஆன்ம வரிசையில் இரண்டாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டுமென்பதாம்,

14-வது விநியோகம்

இரண்டாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

उग्राच भीमाच पितृणां यमस्येन्द्रस्य ।

என்பது.

உரை.

*இதில், செங்கலே! நீ, பிதிர் எமன் முதலானோர்களின், அடிக்கும் ஆற்ற லுக்கும் பயத்திற்குங் காரணமாயுள்ள ஆற்றல் வடிவுகளாக யிருக்கின்றாய் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சோடிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

15-வது விநியோகம்

மூன்றாவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

ध्रुवाच पृथिवीच देवस्य सवितुर्मरुतां वरुणस्य ।

என்பது.

உரை.

*இதில் செங்கலே! நீ, பூமியில் விரிந்துள்ள ஆற்றலாகவும், சவிதா, வருணன், மருத்துக்களிடத்திலுள்ள உறுதி யென்னும் ஆற்றலாகவு மிருக்கின்றாய் என்பது விசேடம். மற்றவை முன் போன்றன என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் நான்காவது சோடிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.*

---

பதினாறாம் விநியோகம்

நான்காவது கல்லை வைத்தல்.

மந்திரம் :

धर्त्रीच धरित्रीच मित्रावरुणयोर्मित्रस्य धातुः ।

என்பது.

உரை.

*இதில், செங்கலே! நீ, மித்திர வருணர்களிடத்திலுள்ள, தாங்குஞ் சத்தியும், மிகப் பிரியமாகிய தாங்குவிக்குஞ் சத்தியுமாக இருக்கின்றாய் என்பது விசேடம் மற்றவை முன் போன்றன என்பது.*

என்னுஞ் செங்கல்கள்)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி நான்காவது ஆன்ம வரிசையில் இரண்டாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

பதினேழாம் விநியோகம்

ஐந்தாவது கல்லை வைத்தல்.

**மந்திரம் :**

प्राचीच प्रतीचीच वसूनां रुद्राणामादित्यानाम् ।

என்பது.

உரை.

செங்கலே! நீ, கிழக்கு மேற்குக்களிலுள்ள வசுக்கள் உருத்திரர்கள் ஆதித்தர்களின் ஆணையால் எல்லாவுயிர்களும் நடக்கின்றதற்குக் காரணமாகிய சத்தியாயிருக்கின்றாய். மற்றவை முன்போன்றன என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மேற்படி வரிசையில் மூன்றாவது சோடசிச் செங்கலை வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திர முறைப்படி, 'வாமதேவ்யம்' என்பது முதலிய செங்கல்களை வைக்கு முறை வருமாறு :—

'श्यानश्चित्रः' என்பது முதலிய அருண மந்திரங்கள் மூன்றாலும் முதலாவது ஆன்ம வரிசையில் முறையே மூன்றுவதிலிருந்து மூன்று பாதிச் செங்கல்களை வைத்தல் வேண்டும்.

அதவசிரசுகள் என்னும் பத்து.

'इन्द्रोदधीचो अस्थभिः' என்பது முதலிய பிரா-அஷ்டகம்-1, பி-6, அ-4, மந்திரங்களால் இரண்டாவது ஆன்ம வரிசையில் பன்னிரண்டாவது பாதிச் செங்கலையும், மூன்றுவது வரிசையில் ஐந்தாவது சோடசிச் செங்கலிலிருந்து நான்கு சோடசிச் செங்கல்களையும், ஒன்பதாவது பாதிச் செங்கலையும், நான்காம் வரிசையில் ஆறுவது முதல் மூன்று சோடசிச்செங்கல்களையும், ஒன்பதாவது பாதிச் செங்கலையும் வைத்தல் வேண்டும்.

இனி, 9-வது அடுக்கின் தென் சிறகில் 10-11-வது வரிசைகளில் முதலாவது கல்லுகளையும், முதலாவது அப்பயத்தையும் 'अभित्वा' என்பது முதலிய 3-மந்திரங்களால் ரதந்தரம் என்னும் மூன்று கல்லுகளையும் வைத்தல் வேண்டும். வடபக்ஷத்தில் 1-வது அப்பயமும், 1-2-வது வரிசைகளில் முதல்

*இரண்டு சிறகுச் செங்கல்களையும் 'त्वामिद्धि' என்பது முதலிய 3-மந்திரங்களால் பிருகத்து என்னும் மூன்று செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.*

### யக்ஞாயக்ஞீயம் என்னும் மூன்று

*'गणा गणाः' என்பது முதலிய ருக்கிர மந்திரங்களால் வாலின் முதல் வரிசையில் ஆறாவது சோடசிச் செங்கல்லையும், இரண்டாவது வரிசையில் மூன்றாவது சோடசிக் கல்லையும், மூன்றாவது வரிசையில் மூன்றாவது ஷோடசிக் கல்லையும், மூன்றாவது ஆன்ம வரிசையில் முதலாவது சோடசிச் செங்கலை ரிஷபமாகவும், மேற்படி நான்காம் வரிசையில் முதலாவது சோடசிச் செங்கலை பிரசாபத்தியமாகவும் வைக்கல் வேண்டும்.*

### அச்யாநிகள் ஐந்து

*'ऋतायुधाय' என்பது முதலிய ஐந்தாங்காண்ட மந்திரங்களால், நான்காவது ஆன்மவரிசையில் பத்தாவது சோடசிச் செங்கலையும், தென்பக்கச் சிறகின் மூன்றாவது நுனிச் செங்கலையும், வாலின் முதல் வரிசையில் ஐந்தாவது சோடசிச் செங்கலையும், வடபக்கச் சிறகின் மூன்றாவது நுனிச் செங்கலையும், நான்காம் ஆன்ம வரிசையில் ஐந்தாவது சோடசிச் செங்கலையும் வைக்கல் வேண்டும்.*

*பிறகு, 'इन्द्रस्य वज्रोसि' என்பது முதலிய மந்திரங்களால் ஐந்து கூழாங் கல்லுகளைப் போட்டுவிட்டு, 'पृथिव्येत्वा' என்பது முதலிய ருக்கிர மந்திரங்கள் மூன்றாலும், ஆறாவது ஆன்ம வரிசையில் உலகச் செங்கல்களெனப்படும் முதலாவது சோடசிச் செங்கலையும், இரண்டாவது மூன்றாவது பாகிச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.*

*மற்றும், 'अमयेत्वा' என்பது முதலிய ருக்கிர மந்திரங்கள் மூன்றாலும், தென் பக்கச் சிறகின் ஏழாவது வரிசையில், பாவமானச் செங்கல்கள் எனப்படும், முதலாவது, இரண்டாவது, மூன்றாவது சிறகுச் செங்கல்களையும் வைத்தல் வேண்டும்.*

### சந்தங்கள் ஏழு

*'ऋचात्वा' என்பது முதலிய ருக்கிர மந்திரங்கள் ஏழாலும், தென் பக்கச் சிறகின் எட்டாவது வரிசையில், முதலிலிருந்து ஆறு சிறகுச் செங்கல்களையும், முதலாவது ஆன்ம வரிசையில் முதலாவது சோடசிச் செங்கலையும் வைத்தல் வேண்டும்.*

### ராஷ்ட்ர பிருத் நான்கு

*'अमयशस्विन्' என்பது முதலிய ஐந்தாங் காண்ட மந்திரங்களால் தென் பக்கச்சிறகின் எட்டாவது வரிசையில் கடைசிச் சிறகுச் செங்கலையும், முதலா*

என்னுஞ் செங்கல்கள்)

வது ஆன்ம வரிசையில், ஆறாவது ஏழாவது பாதிச் செங்கல்களையும் எட்டாவது சோடசிச் செங்கலையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, சர்வதோமுக பொன் செங்கல்களை வைத்தல் வேண்டும்.

மற்றும், 'प्रोथदश्वः' என்பது முதலிய மந்திரங்களால், ஐந்தாவது ஆன்ம வரிசையில் பன்னிரண்டாவது பாதிச் செங்கலை வைத்தல் வேண்டும்.

'आयोस्त्वा' என்பது முதலிய மந்திரத்தால் முன் போல் இயற்கைத் துவாரமுடைய சுக்கான் கல்லுகளையும் வைத்தல் வேண்டும்.

இனி, எஞ்சிய பதினொரு செங்கல்களையும் 'லோகம் பிருண' என்பது முதலிய மந்திரங்களால் வைத்துவிட்டு, ஆயிரங்கல் அடுக்கை முடித்தது போல் இதையும் முடித்து விடல் வேண்டும்.

அதன் பிறகு, சூத்திரப்படி, சஞ்சித கருமஞ் செய்யும் வகை வருமாறு :— சஞ்சித கருமம் என்பது கிரியா சமஸ்காரம்.

'अग्ने युङ्क्ष्वाहि' என்பது முதலிய இரண்டாம் பிரபாடக மந்திரங்களால் முடிந்த செங்கல் அடுக்கைத் தொட்டுப் போற்றல் வேண்டும். இக்கருமம் முடியும் வரை, பிரமன் தெற்கிலேயே இருத்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'वसवस्त्वा रुद्रैः पुरस्तात्पान्तु' என்னும் ஐந்தாங் காண்ட மந்திரத்தால், மகாக்கினி சயனத்திற்குக் கிழக்கே போய் மேற்கு முகமாய் நின்று கொண்டு இரண்டு கைகளாலும் நெய்யை யெடுத்துக் கொண்டு நடுவில் வைத்துள்ள இயற்கைச் சுக்கான் கல்லிற்குக் கிழக்கேயே படுமாறு அந் நெய்யை இறைத்தல் வேண்டும்.

'पितरस्त्वा यमराजानः पितृभिर्दक्षिणतः पान्तु' என்று மகாக்கினி சயனத்திற்குத் தெற்கே போய் வடக்கு முகமாய் நின்று கொண்டு முன்போல் நெய்யை இறைத்தல் வேண்டும்.

பிறகு, அங்கிருந்து அப்பிரதக்ஷிணமாகத் திரும்பி வந்து மகா சயனத்திற்கு மேற்கே போய் கிழக்கு முகமாய் நின்று கொண்டு, 'आदित्यास्त्वा विश्वैर्देवैः पश्चात्पान्तु' என்று முன்போல் நெய்யை இறைத்தல் வேண்டும்.

இவ்வாறே, மகாக்கினி சயனத்திற்கு வடக்கே போய் தெற்கு முகமாய் நின்று கொண்டு 'द्युतानस्त्वा मारुतो मरुद्भिरुत्तरतः पातु' என்று முன்போல் நெய்யை இறைத்தல் வேண்டும்.

மற்றும், அப்பிரதக்ஷிணமாய் மகாக்கினி சயனத்திற்கு மேற்கில் போய் நின்று கொண்டு, 'देवास्त्वेन्द्रज्येष्ठावरुणराजानो धस्ताच्चोपरिष्टाच्चपान्तु' என்று, மகாக்கினி சயன நடுவில் நெய்யை இறைத்தல் வேண்டும்.

*இனி இவ்வாறாக மந்திர விநியோகம் வருமாறு:—*

பதினெட்டாம் விநியோகம்

மந்திரம் :

सहस्रस्य प्रमा असि ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, கிழக்குதிசையில் ஆயிரஞ் செங்கல்களுக்கு ஒப்பாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், இருநூறு பொன் துண்டுகளை எடுத்துக் கொண்டு கிழக்கில் போய் நின்றுகொண்டு முன் நெய்யை இறைத்தது போல் அவைகளை இறைத்து விடல் வேண்டும் என்பதாம்.*

---

பத்தொன்பதாம் விநியோகம்

மந்திரம் :

सहस्रस्य प्रतिमा असि ।

என்பது.

உரை.

*செங்கலே! நீ, தெற்கில் ஆயிரஞ் செங்கல்களுக்கு ஒப்பாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து.

*இம் மந்திரத்தால், முன்போல் தெற்கில் நின்று கொண்டு இருநூறு பொன் துண்டுகளை இறைத்து விடல் வேண்டும் என்பதாம்.*

---

இருபதாம் விநியோகம்

மந்திரம் :

सहस्रस्य विमा असि ।

என்பது.

உரை

*செங்கலே! நீ, மேற்கில் ஆயிரஞ் செங்கல்களுக்கு ஒப்பாக இருக்கின்றாய் என்பது.*

சாயணபாடியக் கருத்து

*இம் மந்திரத்தால், முன்போல் மேற்கில் நின்று கொண்டு இருநூறு பொன் துண்டுகளை இறைத்தல் வேண்டும் என்பதாம்.*

என்னுஞ் செங்கல்கள்)

இருபத்தோராம் விநியோகம்

மந்திரம் :

सहस्रस्योन्मा असि ।

என்பது.

உரை

செங்கலே! நீ, வடக்கில் ஆயிரஞ் செங்கலுக்கு ஒப்பாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் வடக்கில் நின்று கொண்டு இருநூறு பொன் துண்டுகளை இறைத்து விடல் வேண்டும் என்பதாம்.

---

இருபத்திரண்டாம் விநியோகம்.

மந்திரம் :

साहस्रोऽसि सहस्रायत्वा ।

என்பது.

உரை.

செங்கலடுக்காகிய அக்கினியே! நீ, மேல்த் திசையில் ஆயிரஞ் செங்கல்களாக இருக்கின்றாய். இதனால் ஆயிரக்கணக்கான பயன்கள் கைவருதற் பொருட்டு உன்மீது இவற்றை இறைத்து விடுகின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் மகாக்கினி சயனத்தின் நடுவில் இருநூறு பொன் துண்டுகளை இறைத்து விடல் வேண்டும் என்பதாம்.

---

இருபத்துமூன்றாம் விநியோகம்.

மந்திரம் :

इमा मे अग्न इष्टका धेनवस्सन्त्वेका च शतञ्च सहस्रञ्चाऽयुतञ्च
नियुतञ्च प्रयुतञ्चाऽर्बुदञ्च न्यर्बुदञ्च समुद्रश्च मध्यञ्चाऽन्तश्च
परार्धश्चै मामे अग्न इष्टका धेनवस्सन्तु षष्टिस्सहस्रमयुत मक्षी-
यमाणा ऋतस्थास्स्थर्ता वृधो घृतश्चुतो मधुश्चुत ऊर्जस्वतीस्स्व
धाविनीस्तामे अग्न इष्टका धेनवस्सन्तु विराजो नाम कामदुघा
अमुत्राऽमुष्मिन्लोके ॥

என்பது.

உரை.

அக்கினி வடிவாய் அடுக்கப்பட்ட செங்கல்களே! நீங்கள், ஒன்று, பத்து, ஆயிரம், அயுதம், நியுதம், பிரயுதம், அற்புதம், நியற்புதம், சமுத்திரம் மத்யம், அந்தம், பரார்த்தம் என்னும் எண்களாகப் பெருகி காமதேநுக்களைப் போல் அன்பு [illegible] இருப்பீர்களாக. மற்றும், அயுதம் இரு [illegible] ஆயுதமாகப் பெருகி, [illegible] களுமாயீர்களாக. மற்றும், மேலுலகை வளர்ப்பவருமாயீர்களாக. அஃதன்றியும், நீங்கள் நெய் ஒழுகுகின்றவைகளும், இன்சுவை வடிகின்றவைகளும், வன்மையுடையவைகளும், உணவையுடையவைகளுமாக விளங்கி இவ்வுலகத்திலும் பரவுலகத்திலும் காமதேநுக்களாயிருந்து வேண்டியவற்றை அளிப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், மகாக்கினி சயனத்திலுள்ள செங்கல்களை, காமதேநுக்களாகப் பாவித்துப் போற்றல் வேண்டும் என்பதாம்.

பதினோராவது அநுவாகம் முடிந்தது.

---

பன்னிரண்டாம் அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अथाश्वमेधे या स्विष्टिर्हविर्भिर्दशभिर्युता ।
विधीयतेऽग्नये गायेत्यनुवाकेन तत्र च ॥ १ ॥
द्वे द्वे याज्यानुवाक्ये स्तामित्यृचो विंशतिस्त्विह ।

அசுவமேதப் பிரகரணத்தில் உள்ள சர்வபிருஷ்டம் என்னும், பத்து அவிகளுடன் கூடிய இஷ்டியின் யாஜ்யா புரோநு வாக்கியங்களைக் கூறுகிறது.

---

நான்காங் காண்டம் நான்காவது பிரபாடகம்

பன்னிரண்டாம் அநுவாகம்.

ஐந்து பஞ்சாதிகட்குமேல் பதினெட்டு பதங்களைக் கொண்டது.

---

யாஜ்ய புரோநுவாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்.

समिद्दिशामाशयानस्सुवर्विन्मधोरतो माधवः पात्वस्मान् ।
अग्निर्देवो दुष्टरीतुरदाभ्य इदं क्षत्रꣳ रक्षतु पात्वस्मान् । रथन्तरꣳ

सामभिः पात्वस्मान् गायत्री छन्दसां विश्वरूपा । त्रिवृन्नो विष्ठया स्तोमो अह्नाꣳसमुद्रो वात इदमोजः पिपर्तु । उग्रादिशामभिभूतिर्वयोधाश्शुचिश्शुक्रे अहन्योजसीना । इन्द्राधिपतिः पिपृतादतो नो महि ॥ क्षत्रं विश्वतो धारयेदम् । बृहत्साम क्षत्रभृद्वृद्धवृष्णियन्त्रिष्टुभौजश्शुभित मुग्रवीरम् । इन्द्रस्तोमेन पञ्चदशेन मध्यमिदं वातेन सगरेण रक्ष । प्राची दिशाꣳ सह यशायशस्वती विश्वे देवाः प्रावृषाऽह्नाꣳ सुवर्वती । इदङ्क्षत्रन्दुष्टरमस्त्वोजोऽनाधृष्टꣳ सहस्रियꣳ सहस्वत् । वैरूपे सामन्निहतच्छ्रेकेम जगत्यैनं विक्ष्वावेशयामः । विश्वे देवास्सप्तदशेन ॥ २ ॥ वर्च इदङ्क्षत्रꣳ सलिलवातमुग्रम् । धर्त्रीदिशाङ्क्षत्रमिदन्दाधारोपस्थाऽऽशानां मित्रवदस्त्वोजः । मित्रावरुणा शरदाऽह्नाञ्चिकित्नू अस्मै राष्ट्राय महिशर्म यच्छतम् । वैराजे सामन्नधिमे मनीषाऽनुष्टुभा संभृतं वीर्यꣳ सहः । इदङ्क्षत्रं मित्रवदार्द्रदानुमित्रा वरुणा रक्षतमाधिपत्यैः । सम्राड्दिशाꣳ सहसाम्नी सहस्वत्यृतुर्हेमन्तो विष्ठयानः पिपर्तु । अवस्युवाताः ॥ ३ ॥ बृहतीर्नुशक्वरीरिमं यज्ञमवन्तु नो घृताचीः । सुवर्वती सुदुघानः पयस्वती दिशान्देव्यवतु नो घृताची । त्वङ्गोपाः पुर एतोत पश्चाद्बृहस्पते याम्यां युङ्धि वाचम् । ऊर्ध्वा दिशाꣳ रन्तिराशौषधीनाꣳ संवत्सरेण सविता नो अह्नाम् । रेवत्सामातिच्छन्दा उच्छन्दोऽजात शत्रुस्स्योना नो अस्तु । स्तोमत्रयस्त्रिꣳशे भुवनस्य पत्नि विवस्वद्वाते अभिनः ॥ ४ ॥ गृणाहि । घृतवती सविता-

धिपत्यैः पर्यस्वती रन्तिराशानो अस्तु । ध्रुवा दिशां विष्णुपत्न्य
घोराऽस्येशाना सहसोया मनोता । बृहस्पतिर्मातरिश्वोत वायुस्सं-
न्धुवानावाता अभिनो गृणन्तु । विष्टम्भो दिवो धरुणः पृथिव्या
अस्येशाना जगतो विष्णुपत्नी । विश्वव्यचा इषयन्ती सुभूतिश्शि-
वानो अस्त्वदितिरुपस्थे । वैश्वानरोन ऊत्या पृष्टो दिव्यनुनोऽद्यानु-
मतिरन्विदनुमते त्वङ्कया नश्चित आभुवस्को अद्ययुंक्ते ॥ ५ ॥

பதினோராம் அநுவாகத்தில் ரிதவ்யங்கள் என்னுஞ் செங்கல்கள் கூறப்பட்டன. அதுவரையில் மகாக்கினி சயனம் (செங்கலடுக்குகள்) முடிந்துவிட்டன. கடைசியாகிய இவ்வநுவாகத்தில் யாஜ்யா புரோநு வாக்கியங்கள் கூறப்படுகின்றன.

எண்டு, அசுவமேதப் பிரகரணத்தில், 'அக்னயே காயத்ராய' என்பது முதலியவைகளால் பத்து அவிகளைக்கொண்ட 'சர்வபிருஷ்டம்' என்னும் ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள், 'அக்னயே காயத்ராய திரிவிருதே ராதந்தராய வாஸந்தாயாஷ்டாகபாலம் நிர்வபதி' என்பதற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது:—

---

முதல் மந்திரம்

समिद्दिशा माशयानस्सुवर्विन्मधोरतो माधवः पात्वस्मान् । अग्नि-
र्देवो दुष्टरी तुरदाभ्य इदङ्क्षत्रꣳ रक्षतु पात्वस्मान् । என்பது.

உரை.

திக்குக்களுக்குள் சுவர்க்கத்திலுள்ள சூரியனால் ஒளிர்கின்ற கிழக்குத் திக்கு எமது விருப்பை முடித்து எம்மை பாதுகாக்க. அத்தகைய இரவியின் வெய்யில் மிகுந்துள்ள சித்திரை வைகாசி என்னும் இரண்டு மாதங்களிலும் எம்மை பாதுகாக்க. நீக்குதற்கரிய மறைப்பைச் செய்யும் பகைவராலுங் கொல்ல முடியாத அக்கினிதேவன் எம்முடைய இந்த வன்மையைப் பாதுகாப்பானாக என்பது.

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது:—

இரண்டாம் மந்திரம்.

रथन्तरꣳ सामभिः पात्वस्मान् गायत्री छन्दसां विश्वरूपा । त्रिवृन्नो
विष्ठयास्तोमे अह्नाꣳ समुद्रोवात इदमोजः पिपर्तु । என்பது.

உரை

இரதந்தரம் என்னுஞ் சாமப் பாடல், ஏனைய சாமப் பாடல்களால் எம்மைப் பாதுகாக்க. சந்தங்களுக்குள் காயத்திரிச் சந்தம் பல்வேறு வடிவுகளையுடையதாம். அத்தகையதாகிய அது எம்மைப் பாதுகாக்க. ஒரு நாள் சோமரசம் பிழிதல் முதலான யாகங்களில் விநியோகிக்கப்பட்ட திரிவிருத் என்னுங் தோத் திரியானது எம்மைப் பாதுகாக்க. சடல் என்னும் வாயு எமது ஆற்றலை நிரப்புக என்பது.

'இந்திராய த்ரைஷ்டுபாய பஞ்சதசாய பார்ஹதாய க்வைஷ்மாய ஏகாதச கபாலம்' என்பதற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது,

---

மூன்றும் மந்திரம்.

उग्रादिशामभिभूतिर्वयोधाश्शुचिश्शुक्रे अहन्योजसीना । इन्द्राधिपतिः पिपृतादतोनो महि क्षत्रं विश्वतो धारयेदम् ।

என்பது.

உரை.

திக்குக்களுக்குட் சிறந்ததும், இறந்தவர்களையமபுரஞ் சேர்க்கும் உக்கிரமுடையதும், ஆனி ஆடி மாதங்களின் பகலில் மிகுந்த வெய்யிலிருக்கின்றதுமாகிய அத்தகைய தென்திசைக்கும், ஆனி ஆடி மாதப் பகல்களுக்கும் இந்திர! நீ, இறைவனு யிருக்கின்றாய். அத்தகைய நீ எம்மைப் பாதுகாப்பாயாக. மற்றும், எல்லாவற்றுள்ளும் பெரிதாகிய இந்த அரச வன்மையைப் பாதுகாப்பாயாக என்பது.

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

நான்காம் மந்திரம்.

बृहत्साम क्षत्रभृद्वृद्धवृष्णियन्त्रिष्टुभौजश्शुभितमुग्रवीरम् । इन्द्रस्तोमेन पञ्चदशेन मध्यमिदं वातेन सगरेण रक्ष ।

என்பது.

உரை

ஆற்றலை யுடையதும், ஆண் தன்மை யுதிக்கப்பெற்றதும், வன்மையையளிப்பதும், அழகுடையதும், பேராற்றலுடைய குழந்தையை யளிப்பதுமாகிய பிருகத் என்னுஞ் சாம மறைப்பாட்டு, திருஷ்டுப் சந்தத்துடன் கூட எம்மைப் பாதுகாக்க என்பது.

---

'விசுவேப்யோ தேவேப்யோ சாகமேதப்ய: ஸப்ததசேப்யோ வைரூபேப்யோ வார்ஷிகேப்யோ த்வாதச கபாலம்' என்பதற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது,

ஐந்தாம் மந்திரம்.

प्राची दिशाꣳ सह यशायशस्वती विश्वे देवाः प्रावृषाऽह्नाꣳ सुवर्वती ।
इदं क्षत्रन्दुष्टरमस्त्वोजोऽनाधृष्टꣳ सहस्रियꣳ सहस्वत् ।

என்பது.

உரை.

திக்குக்களுக்குள் மேல் திசையானது, நாம் தேடும் பெருமையையுடையதும், தனது பெருமை யுடையதும், சுவர்க்கத்திலுள்ள இரவி அத்தமிக்குங் காலத்தை யுடையதுமாம்; அத்தகைய மேற்குத்திசை எம்மைப் பாதுகாக்க. அங்ஙனமே, விசுவே தேவர்கள், மழை நாட்களுடன் கூடிய மழைக்காலத்தால் எம்மைப் பாதுகாக்க. எம்மால் பரிபாலிக்கப்பெற்ற இந்த அரச வுடம்பு ஒரு பகையாலும் தாண்டமுடியாததாகுக. எமது ஆற்றல், எவராலும் அடக்க முடியாததாகுக. மற்றும், ஆயிரக்கணக்கான இடங்களாகுக என்பது.

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

ஆறும் மந்திரம்.

वैरूपे सामन्निहतच्छकेम जगत्यैनं विक्ष्वा वेशयामः । विश्वे देवा-स्सप्तदशेन वर्च इदं क्षत्रꣳ सलिलवातमुग्रम् ।

என்பது.

உரை.

வைரூபம் என்னும் சாமப்பாடலைப் பற்றிய யாம், வேண்டிய பயன்களைத் தேட வல்லுநராவோம். அங்ஙனமே, சகதி என்னுஞ் சந்த தேவதையால் அருள்புரியப் பெற்ற யாம், இந்த எசமானனை, பிரசைகட்கு இறைவனுகச் செய்வோம். விசுவதேவர்களே! பதினேழு என்னும் ஸ்தோமத்தால் உங்களால் அருளப்பெற்றதும், எம்மால் பரிபாலித்ததுமாகிய இந்த அரச வுடம்பு, அழகுடையதும், சலிலம் என்னும் வாயு விசேடத்தால் அருள் செய்யப்பெற்றதுமாம். அத்தகைய இது, பகைவரால் கெடாததாகுக என்பது.

---

மித்திர வருணப்யாம் அநுஷ்டுபாப்யாம் ஏகவிம்சாப்யாம் வைராசாப்யாம் சாரதாப்யாம் பயஸ்யா" என்பதற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது,

ஏழாம் மந்திரம்.

धर्त्री दिशां क्षत्रमिदन्दाधारोपस्थाऽऽशानां मित्रवदस्त्वोजः । मित्रा-वरुणा शरदाऽह्नाश्चिकित्नू अस्मै राष्ट्राय महि शर्म यच्छतम् ।

என்பது.

வாக்கியங்கள்)

உரை

வடக்குத் திசையின் அநுக்கிரகத்தால், எமது ஆற்றல் பல் வகை நண்பர்களுடன் கூட இருக்கின்றது. ஆகலின், எம்மால் தனவிருப்பை முடிக்கும் பொருட்டு வழிபடத்தக்கது வடதிசையாம். மித்திர வருணர்களே ! குளிர்காலமாகிய இருதுவால் அதைப்பற்றிய பகல்களை யறிந்த நீங்கள் இப்போதுள்ள எமது இராச்சியத்திற்கு மிகுந்த சுகத்தைத் தேடுவீர்களாக என்பது.

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது.

எட்டாம் மந்திரம்.

वैराजे सामन्नधिसे मनीषाऽनुष्टुभा संभृतं वीर्यँ सहः । इदं क्षत्रं मित्रवदार्द्रदानुमित्रावरुणा रक्षतमाधिपत्यैः ।

என்பது.

உரை.

வைராசம் என்னுஞ் சந்தத்தில் எனது புத்தி நிலையுடையதாகுக. எனது தேகச் செயலின் வன்மையும், பகைவரை யடக்கு மாற்றலும், அநுஷ்டுப் சந்த மென்னுந் தேவதையால் தேடப்படுவதாகுக. மித்திர வருணர்களே ! இந்த அரசனுடைய உடம்பு பல்வகை நட்பாளர்களுடன் கூடியது. இது ஈரமுள்ள நிலத்தை உள்ளவாறு கொடுக்கும் வழியை யுணர்ந்து பாதுகாப்பீர்களாக என்பது.

---

'பிருகஸ்பதயே பாங்க்தாய த்ரிணவாய சாக்வராய ஹைமந்திகாய சருः' என்பதற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது,

ஒன்பதாம் மந்திரம்.

सम्राड् दिशाँ सहसाम्नी सहस्वत्यृतुर्हेमन्तो विष्ठयानः पिपर्तु । अवस्युवाता बृहतीर्नुशक्वरीरिमं यज्ञमवन्तु नो घृताचीः ।

என்பது.

உரை

திக்குக்களுக்குள் இனிது விளங்கும் மேல் திசை, சாமங்களுடன் கூடி வலியுடையதாய் எம்மைப் பரிபாலிப்பதாகுக. மற்றும், பனிக்காலம் என்னும் இருது, சிறப்புடையதாயிருந்து எம்மைப் பாதுகாக்க. பரிபாலிக்கும் வாயுக்களையுடைய சாக்வர சந்தத்திற்குக் காரணமாக இருக்கும் நெய்யாகுதியுடன் கூடியதாய் எம்முடைய இவ்வேள்வியைப் பரிபாலிக்க என்பது,

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

பத்தாம் மந்திரம்.

सुवर्चेती सुदुघानः पयस्वती दिशान्देव्यवतु नो घृताची । त्वन्नोपाः पुर एतोत पश्चात् बृहस्पते याम्यां युङ्धिवाचम् ।

என்பது.

உரை

திக்குக்களுக்குத் தலைவியாகிய தேவி சுவர்க்கத்தைக் கொடுப்பவள். காமதேனுவைப் போல் எமக்குச் சுகத்தைத் தருந்தவள். பால் முதலிய இரசங்களையுடையவள். நெய்யைப் பெற்றவள். பிருகஸ்பதியே! நீ, முன்னும் பின்னும் நன்றாய்ப் பாதுகாப்பவன் அத்தகைய நீ, எமபயத்தை யுண்டாக்குவதாகிய வாக்கை யுண்டாக்குவாயாக என்பது.

‘ சவித்ர ஆதிச்சந்தஸாய த்ரயத்திரிம்ஸாய ரைவதாய சைசிராய த்வாதச கபால: ’ என்பதற்குப் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது,

பதினோராவது மந்திரம்.

ऊर्ध्वा दिशाᳪ रन्तिराशौषधीनाᳪ संवत्सरेण सवितानो अह्नाम् । रेवत्सामातिच्छन्दा उच्छन्दोऽजात शत्रुस्स्योनानो अस्तु ।

என்பது.

உரை.

திக்குக்களுக்குள் மேல் திசையானது பிரியத்திற்குக் காரணமானது. உண்டு, அது மழைவாயிலாக கொடி செடிகளைத் தேடுவதாம் என்பது எஞ்சி ய. அத்தன்மைய மேல் திக்கு எமக்குச் சுகத்தைக் கொடுப்பதாகுக. அங்ஙனமே ரைவதி என்னுஞ் சாமமும் அதிச்சந்தத்துடன் கூடிய இருக்கும் அதிலுள்ள சந்தமுங்கூடி பகைவர் எமக்குத் தோன்றாதவாறு செய்க என்பது.

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

பன்னிரண்டாம் மந்திரம்.

स्तोमत्रयस्त्रिᳪशे भुवनस्य पत्नि विवस्वद्वाते अभिनो गृणाहि । घृतवती सवितराधिपत्यैः पयस्वती रन्तिराशानो अस्तु ।

என்பது.

உரை.

முப்பத்து மூன்று ஸ்தோமங்களையுடைய மேல் திக்கே! பூதசமுதாயங்களைப் பரிபாலிப்போய்! விவஸ்வத் என்னும் காற்றையுடையோய்! நீ, எமக்கு

வாக்கியங்கள்)

இனிமையை உபதேசிப்பாயாக. சவிதாவே! இத்தகைய மேல் திசை, மிகுந்த நெய்யைத் தேடுவதும், பரிபாலன சத்திகளுடன் கூட்டிவைப்பதும், பாலைத் தேடுவதும், பிரியத்திற்குக் காரணமுமாகுக என்பது.

---

'ஆதித்யை விஷ்ணு பத்ந்யை சரு:' என்பதற்குப் புரோநு வாக்கியங் கூறப்படுகின்றது,

பதின்மூன்றும் மந்திரம்.

ध्रुवा दिशां विष्णुपत्न्यघोराऽस्येशाना सहसोयामनोता । बृहस्पति-
र्मातरिश्वोत वायुस्सन्धुवानावाता अभिनो गृणन्तु ।

என்பது.

உரை.

விஷ்ணுவின் பாதுகாப்பை யுடையவைகளும், சாந்தவடிவ முடையவைகளும், ஆற்றலை நியமிப்பவைகளும், பூசிக்கத்தக்கவைகளும், சூரியனுதித் தொடுங்கலை நோக்கி கிழக்கு முதலிய பாகுபாடு இல்லாதவைகளுமான திக்குக்களும், பிருகஸ்பதி, மாதரிஸ்வா என்னும் முக்கிய வாயுவும், மற்றும் ஆங்காங்கு ஆட்டிவைக்கின்ற காற்றுக்களும் எமக்கு இனிமையைப் போதிப்பனவாகுக என்பது.

---

அதற்கே யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

பதினான்காம் மந்திரம்.

विष्टम्भो दिवो धरुणः पृथिव्या अस्येशाना जगतो विष्णुपत्नी । विश्व-
व्यचा इषयन्ती सुभूतिश्शिवानो अस्त्वदितिरुपस्थे ।

என்பது.

உரை.

வானுலகத்திற்கு ஆதாரமும், மண்ணைத் தாங்குவதும், உலகனைத்திற்கும் இறைவியும், விஷ்ணுவால் பாதுகாக்கப்படுகின்றவளும், உலகத்தை வியாபித்தவளும், உணவு வகைகளைத் தோற்றுவிப்பவளும், அழகிய ஐசுவரிய முடையவளுமாகிய அகண்ட திக்கென்னும் அதிதிமாதா, தனது மடிமேல் இருக்கின்ற எமக்குச் சுகத்தைக் கொடுப்பவளாகுக என்பது.

---

'அக்னயே வைசுவாநராய த்வாதசகபாலம்' என்பதற்கு, யாஜ்யா புரோநு வாக்கியங்களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன.

பதினைந்து பதினாறுவது மந்திரங்கள்.

वैश्वानरो न ऊत्या पृष्टो दिवि ।

என்பது.

உரை.

'வைசுவாநரோ ந ஊத்யா' என்பது புரோநு வாக்கியம். 'பிருஷ்டோ திவி' என்பது யாஜ்யா வாக்கியம் என்பது. இதன் உரை முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகத்திற் கூறப்பட்டுள்ளது.

---

'அநுமத்யை சரு:' என்பதற்கு, யாஜ்யா புரோநு வாக்கியங்களின் தலைப்புச் சொற்கள்,

பதினேழு பதினெட்டாவது மந்திரங்கள்.

अनुनोऽद्यानुमतिरन्विदनुमतेत्वम् ।

என்பது.

உரை.

'அநுநோ அத்யாநுமதி' என்பது புரோநு வாக்கியம். 'அன்விதநுமதேத்வம்' என்பது யாஜ்யா வாக்கியம். இதற்கு, 'இதம் வாமஸ்யே ஹவி:' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டுள்ளது.

---

'காய ஏக கபால' என்பதற்கு யாஜ்யா புரோநுவாக்கியங்களின் தலைப்புச் சொற்கள்,

பத்தொன்பது இருபதாவது மந்திரங்கள்.

कयानश्चित्र आभुवत्को अद्ययुङ्क्ते ॥

என்பது.

உரை.

'கயா நச்சித்ர ஆபுவத்' என்பது புரோநுவாக்கியம். 'கோ அத்யயுங்க்தே' என்பது யாஜ்யா வாக்கியம். இதற்கு 'இந்திராக்னீ ரோசனா' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டுள்ளது.

சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.

பன்னிரண்டாம் அநுவாகம் முடிந்தது

---

க்ருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதையில்

நான்காம் காண்ட நான்காவது பிரபாடகம் முடிந்தது.

---